# திருக்குறள்
# திருக்குறள்
# திருக்குறள்

## புதிய உரை





பூம்புகார் பதிப்பகம்

கவிஞர் சொ. கோவைச்செல்வர்
புலியூர்க்கேசிகன்

# திருக்குறள்
# புதிய உரை

உரையாசிரியர் :
புலியூர்க் கேசிகன்



**பூம்புகார் பதிப்பகம்**
127 (ப. எண். 63), பிரகாசம் சாலை (பிராட்வே)
சென்னை - 600 108.
தொலைபேசி : 25267543

# முன்னுரை

தமிழ் மொழிக்கு வளமை சேர்த்த ஒரு நூல்; தமிழர்க்கு வாழ்வியல் உண்மைகளை உணர்த்தும் ஒரு நூல்; தன் தோற்றத்தால் தமிழ் நாட்டுக்கு உலகப் பெரும் புகழைப் பெற்றுத்தந்த சிறந்த நூல், திருவள்ளுவரின் திருக்குறள்!

திருக்குறள் பற்றிப் பேசாத புலவரில்லை; எழுதாத அறிஞர், எழுத்தாளர் இல்லை.

பள்ளிப் பருவத்திலும் திருக்குறள் படிக்கப்படுகின்றது. பருவம் வளர வளர அதுவும் நுட்பமாகக் கற்கப்படுகின்றது. அதற்குள்ள சிறப்பே அதுதான். அது எல்லாப் பருவத்தாருக்கும் வேண்டிய விழுமிய நூல்.

திருவள்ளுவர் சித்தர்; சகல ஞானமும் தெளிந்த ஞானி; உலகம் உய்யும் வகை உதவிய அருளாளர்; ஏறக்குறைய 2000 ஆண்டுகளுக்கு முன்பாக வாழ்ந்தவர்.

திருக்குறளுக்குப் பலர் உரையாசிரியர்கள். பழைய உரையாசிரியர் பத்துப் பேர்; பின் வந்தவர்களோ எவ்வளவோ பேர். இவர்களின் உரைகளுள் பொருள் விளங்கும் வகையாலும் உரைகூறும் நயத்தாலும் சிறந்தவை பல.

திருக்குறளில்லாத தமிழர் வீடு இருக்கக்கூடாது! திருக்குறள் படியாத தமிழனும் இருக்கக் கூடாது!

இந்த எண்ணமே இந்தப் புதிய உரையமைப்பினை எழுதத் தூண்டியது.

இதனை அழகாக அச்சிட்டு, அனைவரும் அறிந்து பயன் படுத்தும் வகையில் பூம்புகார் பதிப்பகத்தார் வெளியிடுகின்றனர்.

அவர்களின் அன்புக்கு நன்றி; முயற்சிக்கு என் நல்வாழ்த்துக்கள்.

தமிழர் என்பார் அனைவரிடமும் இந்நூற் பிரதியொன்று இருக்கும் நிலை ஏற்பட்டால், அதுவே என் உழைப்புக்கு நல்ல பயனாக விளங்கும்.

வாழ்க தமிழ்! வளர்க குறள்நெறி!!

*11.6.1976*

## TEXT-BOOK ON MORAL LIFE

It is a text-book of indispensable authority on moral life. The maxim of Valluvar has touched my soul

- *Mahatma Gandhi*

## கல்லாடர்

'ஒன்றே பொருளெனின் வேறென்பர்;
வேறெனின்
அன்றென்பர் ஆறு சமயத்தார் -
நன்றென
எப்பாலவரும் இயைபவே வள்ளுவனார்
முப்பால் மொழிந்த மொழி'

# பதிப்புரை

திருக்குறள் தமிழரின் தனிப்பெரும் செல்வம், இந்தச் செல்வம், பள்ளிப் பருவத்துச் சிறுவர் சிறுமியரிடமும் இருக்க வேண்டும்; இளைஞர் முதியோர் அனைவரிடமும், அனைவர் உள்ளத்திலும் நிலவ வேண்டும். இந்த ஆசையினால் உருவானதே இந்தப் புதிய உரை.

திருக்குறளுக்குப் பல உரைகள் உள்ளன. எல்லாரும் குறள் நெறியை உள்ளபடி அறிந்து பயன்பெற இந்தப் புதிய உரை உதவும்.

ஆசிரியர் **புலியூர்க் கேசிகன்** சாதாரணமாகத் தமிழ் அறிந்தவர். எல்லாருமே படித்து அறிவுவளமும் நல்வாழ்வும் பெறக் கூடிய வகையில் இந்த உரையமைப்பை தெளிவாக அமைத்துள்ளார்.

பூம்புகார் பதிப்பகத்தின் அன்புப் பரிசாக இதனைத் தமிழன்பர்களுக்கு அளிப்பதில் நாங்கள் பெருமைப்படுகிறோம்.

**பதிப்பகத்தார்**

## கி.ஆ.பெ. விசுவநாதம்

மழையானது மக்கள் போற்றவேண்டிய ஒன்று. ஏனெனில், அது உண்ணும் பொருள்களை உண்டாக்கிக் கொடுத்துத் தானும் உணவாக மாறுகிறது. பெரியோர்களைப் போற்றுங்கள். மனைவி, மக்களோடு வாழுங்கள். விருப்பு, வெறுப்பு அற்று வாழுங்கள். இது ஒரு தொகுப்பு.

'படி, படிக்கவேண்டியவைகளைப் படி! குற்றமறப் படி; படிக்காவிட்டாலும் கேள்; படித்து, கேட்டு அறிந்தபடி நட' இது ஒரு தொகுப்பு.

'சூதாடாதே! பொய் சொல்லாதே! புலால் உண்ணாதே! கள் குடியாதே! களவு செய்யாதே! வஞ்சகம் கொள்ளாதே! தீயன எண்ணாதே! இது ஒரு தொகுப்பு.

"நட்புத் தேவை; அதை ஆராய்ந்துகொள்! தீயவர் உறவை நோயென விலக்கு! பெரியோரைத் துணைக் கொள்! பிறரோடும் அன்பாயிரு! மனைவியை மதி! மக்களைப் பெறு! அறிவை அடை! சொல்வதெல்லாம் நல்லதாக இருக்கட்டும்! செய்வதெல்லாம் திறமையாக இருக்கட்டும்! அறத்தின் வழிநின்று பொருளைத் தேடி இன்பத்தைப் பெறு! வீடு உண்டானால் அது உன்னைத் தேடி வரும்" என்பதே.

இவைதான் வள்ளுவருடைய கொள்கை. அதைத்தான் நீங்கள் திருக்குறளில் பார்க்க முடியும். இது எந்த நாட்டிற்கு, எந்த மக்களுக்கு, எந்த நிறத்தினருக்கு, எந்த மொழியினர்க்கு, எந்தச் சமயத்தினர்க்கு வேறுபாடு உடையது? இராது! அவ்வளவு பெரிய உயர்ந்த கருத்துக்களைக் கொண்டவர் வள்ளுவர்.

## COSMOPOLITAN OUTLOOK

Tirukkuarl is the well known literary composition in the Sangam classics. This work proclaims the basic principles for the moral and material life of the people. The aphoirsms about 'loving-kindness' reveal the humane approach of the poet to the problems of life. The lofty ideals that are enshrined in thus didactic work transcends the barriers of race, creed, place and time. Besides, this universal and cosmopolitan outlook, Tirukkural shines supreme in its poetic excellences.

*- Dr. Wilfried Noelle*

# திரு.வி.க.

'முதன்மையும், தொன்மையும் வாய்ந்த தமிழர் பண்பாட்டில் உலக வாழ்க்கைக் கூறுகள் கருக்கொண்டன. கருக்கொள்ளல் இயல்பு. அக்கரு, தெய்வப்புலவராகிய திருவள்ளுவருக்குப் புலனாயிற்று. ஆகவே, அவர்பால் உலகநூல் ஒன்று மலர்ந்ததென்க'

வள்ளுவரின் பார்வையின் உயிர்ப்பு 'உலகம் ஒரு குலம்' என்பதே.

உலகம் ஒரு குலம் என்பது பழந்தமிழர் பண்பாட்டினின்றும் முகிழ்த்த மிக நவீனமான குறிக்கோளாகும்.

அக்குறிக்கோள் திருவள்ளுவரில் படிந்து நின்று வளர்ந்து ஒரு சீரிய உலக நூலாயிற்று. அந்நூலின் உள்ளுறை நுண்ணியதாய்ப் பல பேரறிஞரிடம் புகுந்து புகுந்து பல மொழிகளில் பரிணமித்தது. இவ்வாறு திருவள்ளுவர் கருத்துப் பெருகிப் பெருகி இந்நாளில் விஞ்ஞானத்தில் விரவி மார்க்ஸியமாகவும், தெய்வீகத்தில் கலந்து காந்தியமாகவும் பரவியுள்ளது. விஞ்ஞான மார்க்ஸியமும், தெய்வீக காந்தியமும் ஒன்றிய ஒரு கொள்கையே இக்கால உலகை ஒருமைப்படுத்தும் ஆற்றல் வாய்ந்தது. இதை உணர்ந்து தொண்டாற்ற நம்நாடு முற்பட்டால் உலகம் நலம் பெறும்' என்று உறுதி கூறுவார் திரு.வி.க.

# அறத்துப்பால்

| | | |
|---|---|---|
| 1 முதல் 40 | : | பாயிரம் |
| 41 முதல் 240 | : | இல்லற இயல் |
| 241 முதல் 370 | : | துறவற இயல் |
| 371 முதல் 380 | : | ஊழ் இயல் |

அகர ஒலியே எல்லா எழுத்துகளுக்கும் முதல்; அதுபோல், ஆதிபகவன் உலகிலுள்ள உயிர்கள் எல்லாவற்றிற்கும் முதல்வனாக இருக்கின்றான். 1

தூய அறிவு வடிவான இறைவனின் நன்மை தரும் திருவடிகளைத் தொழாதவர் என்றால், அவர் கற்றதனால் உண்டான பயன் யாதுமில்லை. 2

அன்பர் நெஞ்சமாகிய மலரின்மேல் சென்று வீற்றிருப்பவனது சிறந்த திருவடிகளைச் சேர்ந்தவர்களே, உலகில் நிலையாக வாழ்வார்கள். 3

விருப்பும் வெறுப்பும் இல்லாதவனாகிய இறைவனின் திருவடிகளைச் சேர்ந்தவர்களுக்கு, எவ்விடத்திலும், எக்காலத்திலும் துன்பம் இல்லை. 4

இறைவனின் மெய்ம்மையோடு சேர்ந்த புகழையே விரும்பினவரிடத்து, அறியாமை என்னும் இருளைச் சார்ந்த இருவகை வினைகளும் வந்து சேரா. 5

ஐம்பொறி வழியாக எழுகின்ற ஆசைகளை அவித்தவனின், பொய்ம்மை இல்லாத ஒழுக்கநெறியில் நின்றவரே நிலையான வாழ்வினர் ஆவர். 6

தனக்கு யாதொன்றும் ஒப்புமை இல்லாதவனின் திருவடிகளைச் சேர்ந்தார்க்கு அல்லாமல், பிறர்க்கு, மனக்கவலையை மாற்றுதல் அரிதாகும். 7

அறக் கடலான அந்தணனின் திருவடிகளைச் சேர்ந்தவர்க்கு அல்லாமல், பிறர்க்கு, இன்பமும் பொருளும் ஆகிய கடல்களைக் கடத்தல் இயலாது. 8

எண்வகைக் குணங்களில் உருவான இறைவன் திருவடிகளை வணங்காத தலை, கேளாக் காதும் காணாக் கண்ணும் போலப் பயனில்லாதது. 9

இறைவனின் திருவடிகளைச் சேர்ந்தவர்களே பிறவிப் பெருங்கடலைக் கடப்பார்கள்; சேராதவர்களால் கடக்க இயலாது. 10

## 1. கடவுள் வாழ்த்து

*அகர முதல எழுத்தெல்லாம் ஆதி*
*பகவன் முதற்றே உலகு.* 1

*கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்*
*நற்றாள் தொழாஅர் எனின்.* 2

*மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்*
*நிலமிசை நீடுவாழ் வார்.* 3

*வேண்டுதல் வேண்டாமை இலான் அடி. சேர்ந்தார்க்கு*
*யாண்டும் இடும்பை இல.* 4

*இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்*
*பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.* 5

*பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க*
*நெறிநின்றார் நீடுவாழ் வார்.* 6

*தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்*
*மனக்கவலை மாற்றல் அரிது.* 7

*அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்*
*பிறவாழி நீந்தல் அரிது.* 8

*கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்*
*தாளை வணங்காத் தலை.* 9

*பிறவிப் பெருங்கடல் நீந்துவார் நீந்தார்*
*இறைவன் அடிசேரா தார்.* 10

மழை பெய்வதனாலேதான் உலக உயிர்கள் வாழ்கின்றன; ஆதலால், மழையே உயிர்களுக்கு 'அமிழ்தம்' என்று உணரத்தகும். 11

உண்பவர்க்குத் தகுந்த பொருள்களை விளைவித்துத் தந்து, அவற்றைப் பருகுவார்க்குத் தானும் ஓர் உணவாக (பருகும் நீராக) விளங்குவதும் மழையே ஆகும். 12

மழை காலத்தால் பெய்யாது பொய்க்குமானால், கடலால் சூழப்பட்டுள்ள இப் பரந்த உலகினுள் பசி நிலைபெற்று உயிர்களை வாட்டும். 13

'மழை' என்னும் வருவாயின் வளம் குறைந்ததானால், பயிர் செய்யும் உழவரும் (விளைபொருள்களை விளைவிக்க) ஏரால் உழுதலைச் செய்யமாட்டார்கள். 14

காலத்தால் பெய்யாது உலகில் வாழும் உயிர்களைக் கெடுப்பதும் மழை; அப்படி கெட்டவற்றைப் பெய்து வாழச் செய்வதும் மழையே ஆகும். 15

வானிலிருந்து மழைத்துளி வீழ்ந்தால் அல்லாமல் உலகில், பசும் புல்லின் தலையைக் காண்பதுங்கூட அருமையாகி விடும். 16

மேகமானது கடல் நீரை முகந்து சென்று மீண்டும், மழையாகப் பெய்யாவிட்டால், அப்பெரிய கடலும் தன் வளமையில் குறைந்து போகும். 17

மழையானது முறையாகப் பெய்யாவிட்டால், உலகத்திலே, வானோர்க்காக நடத்தப்படும் திருவிழாக்களும், பூசனைகளும் நடைபெறமாட்டா. 18

மழை பெய்து உதவாவிட்டால், இந்தப் பரந்த உலகத்திலே பிறருக்காகச் செய்யப்படும் தானமும், தனக்காக மேற்கொள்ளும் தவமும் இரண்டுமே நிலையாமற் போய்விடும். 19

நீர் இல்லாமல் எத்தகையோருக்கும் உலக வாழ்க்கை அமையாது என்றால், மழை இல்லாமல் ஒழுக்கமும் நிலைபெறாது. 20

## 2. வான் சிறப்பு

வான்நின்று உலகம் வழங்கி வருதலால்
தான்அமிழ்தம் என்றுணரற் பாற்று. 11

துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉம் மழை. 12

விண்இன்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்து
உள்நின்று உடற்றும் பசி. 13

ஏரின் உழாஅர் உழவர் புயலென்னும்
வாரி வளங்குன்றிக் கால். 14

கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
எடுப்பதூஉம் எல்லாம் மழை. 15

விசும்பின் துளிவீழின் அல்லால்மற் றாங்கே
பசும்புல் தலைகாண்பு அரிது. 16

நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும் தடிந்தெழிலி
தான்நல்கா தாகி விடின். 17

சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு. 18

தானம் தவம்இரண்டும் தங்கா வியன்உலகம்
வானம் வழங்கா தெனின். 19

நீர்இன்று அமையாது உலகெனின் யார்யார்க்கும்
வான்இன்று அமையாது ஒழுக்கு. 20

ஒழுக்கத்தில் நிலையாக நின்று, பற்றுகளை விட்டவர்களின் பெருமையைப் போற்றிச் சிறப்பித்துச் சொல்வதே நூல்களின் துணிபு. 21

பற்றுகளை விட்டவரின் பெருமையை அளந்து சொல்வதானால், உலகில் இதுவரை இறந்தவர்களைக் கணக்கெடுத்தாற் போன்றதாகும். 22

இம்மை, மறுமை என்னும் இரண்டின் கூறுகளைத் தெரிந்து, இவ்வுலகில் அறநெறியை மேற்கொண்டவரின் பெருமையே உயர்ந்ததாகும். 23

'அறிவு' என்னும் அங்குசத்தால் ஐம்பொறிகளாகிய யானைகளை அடக்கிக் காப்பவன் எவனோ, அவனே மேலான வீட்டுலகிற்கு ஒரு வித்து ஆவான். 24

ஐம்பொறி வழியாக எழுகின்ற ஆசைகளை அவித்தவனுடைய வலிமைக்கு, அகன்ற வானுலகோர் கோமானாகிய இந்திரனே போதிய சான்று. 25

செய்வதற்கு அருமையானவற்றைச் செய்பவர் பெரியோர்; சிறியோர், செய்வதற்கு அரியவற்றைச் செய்யமாட்டாதவர் ஆவர். 26

சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்று கூறப்படுகின்ற ஐந்தின் வகைகளையும் தெரிந்து நடப்பவனிடமே உலகம் உள்ளது. 27

நிறைவான மொழிகளையே சொல்லும் சான்றோரின் பெருமையை, உலகத்தில் நிலையாக விளங்கும் அவர்களுடைய மறைமொழிகளே காட்டிவிடும். 28

நல்ல குணம் என்கின்ற குன்றின்மேல் ஏறி நின்ற சான்றோரால், சினத்தை ஒருகணமேனும் பேணிக் காத்தல் அருமையாகும். 29

எவ்வகைப்பட்ட உயிருக்கும் செவ்வையான அருளை மேற்கொண்டு நடப்பதனால், அந்தணர் எனப்படுவோரே அறவோர் ஆவர். 30

*ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து*
*வேண்டும் பனுவல் துணிவு.* 21

*துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து*
*இறந்தாரை எண்ணிக்கொண் டற்று.* 22

*இருமை வகைதெரிந்து ஈண்டுஅறம் பூண்டார்*
*பெருமை பிறங்கிற்று உலகு.* 23

*உரனென்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்*
*வரனென்னும் வைப்பிற்கோர் வித்து.* 24

*ஐந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு உளார்கோமான்*
*இந்திரனே சாலுங் கரி.* 25

*செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்*
*செயற்கரிய செய்கலா தார்.* 26

*சுவைஒளி ஊறுஓசை நாற்றமென்று ஐந்தின்*
*வகைதெரிவான் கட்டே உலகு.* 27

*நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து*
*மறைமொழி காட்டி விடும்.* 28

*குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி*
*கணமேயும் காத்தல் அரிது.* 29

*அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ்*
*செந்தண்மை பூண்டொழுக லான்.* 30

அறமானது சிறப்பைத் தரும்; செல்வத்தையும் தரும்; அதனால் அறத்தைவிட உயிருக்கு ஆக்கம் தருவது வேறு யாதுமில்லை. 31

அறநெறியோடு வாழ்வதைக் காட்டிலும் உயிருக்கு நன்மை யானதும் இல்லை; அறநெறியைப் போற்றாமல் மறத்தலைக் காட்டிலும் கேடானதும் இல்லை. 32

நம்மாலே முடிந்த வகைகளில் எல்லாம், முடியக்கூடிய வழிகளில் எல்லாம், அறச் செயல்களை இடைவிடாமல் தொடர்ந்து செய்து வருதல் வேண்டும். 33

தன் மனத்திடத்துக் குற்றம் இல்லாதவனாகுதல் என்னும் அவ்வளவே அறம் எனப்படும்; பிற ஆரவாரத் தன்மை கொண்டவை. 34

பொறாமை, ஆசை, சினம், கடுஞ்சொல் என்னும் நான்கிற்கும் ஒருசிறிதும் இடம் தராமல் ஒழுகிவருவதே அறம் ஆகும். 35

'பின்காலத்தில் பார்ப்போம்' என்று தள்ளி வைக்காமல், அறத்தை அன்றே செய்க; அது இறக்கும் காலத்திலே அழியாத் துணையாகும். 36

சிவிகையைச் (பல்லக்கு) சுமப்பவனோடு, அதனில் அமர்ந்து செல்பவன் ஆகியவரிடையே, 'அறத்தின் வழி இதுதான்' என்று கூறவேண்டாம். 37

செய்யத் தவறிய நாள் என்றில்லாமல் ஒருவன் அறம் செய்வானானால், அதுவே வாழ்நாள் முடியும் வழியை அடைக்கும் கல்லாகும். 38

அற வாழ்வில் வாழ்வதனால் வருவதே இன்பமாகும்; மற்றைப் பொருளும் இன்பமும் இன்பமாகா; அவற்றால் புகழும் இல்லை. 39

ஒருவன் தன் வாழ்நாளில் செய்யவேண்டியது எல்லாம் அறமே; அவன் செய்யாமல் காக்க வேண்டியது எல்லாம் பழிச்செயலே. 40

## 4. அறன் வலியுறுத்தல்

சிறப்புஈனும் செல்வமும் ஈனும் அறத்தினூஉங்கு
ஆக்கம் எவனோ உயிர்க்கு. 31

அறத்தினூஉங்கு ஆக்கமும் இல்லை அதனை
மறத்தலின் ஊங்கில்லை கேடு. 32

ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே
செல்லும்வாய் எல்லாஞ் செயல். 33

மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்துஅறன்
ஆகுல நீர பிற. 34

அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா இயன்றது அறம். 35

அன்றறிவாம் என்னாது அறஞ்செய்க மற்றது
பொன்றுங்கால் பொன்றாத் துணை. 36

அறத்தாறு இதுவென வேண்ட ா சிவிகை
பொறுத்தானோடு ஊர்ந்தான் இடை. 37

வீழ்நாள் படாஅமை நன்றாற்றின் அஃதொருவன்
வாழ்நாள் வழியடை .க்கும் கல். 38

அறத்தான் வருவதே இன்பம்மற் றெல்லாம்
புறத்த புகழும் இல. 39

செயற்பால தோரும் அறனே ஒருவற்கு
உயற்பால தோரும் பழி. 40

இல்லறத்தில் வாழ்பவன் என்பவன், பிற அற இயல்பையுடைய முத்திறத்தார்க்கும் நல்வழியில் நிலையான துணையாவான். 41

துறவியர்க்கும், வறுமைப்பட்டோர்க்கும், தனக்குத் தொடர்புடைய இறந்தவர்கட்கும் இல்வாழ்வினனே துணையாவான். 42

தென்புலத்தார், தெய்வம், விருந்தினர், சுற்றத்தார், தன் குடும்பம் என்னும் ஐந்திடத்தும் பேணுதல் இல்வாழ்பவனுக்குச் சிறப்பாகும். 43

பழிக்குப் பயமும், உள்ளதைப் பிறர்க்குப் பகுத்துக் கொடுத்து உண்ணும் இயல்பும் உடையதானால், வாழ்க்கை வழிக்கு எப்போதுமே குறைவு இல்லை. 44

கணவன் மனைவியருக்குள் அன்புப் பிணைப்பும், அறநெறிப் படியே நிகழ்ந்து வருவதும் உடையதானால், இல்வாழ்க்கையின் பண்பும் பயனும் அந்த வாழ்வே ஆகும். 45

அறநெறிப்படியே இல்வாழ்க்கையை ஒருவன் நடத்தி வருவானானால், அவன் வேறு நெறியிலே போய்ப் பெறுவது என்ன? 46

அறநெறியின் தன்மையோடு இல்வாழ்க்கை வாழ்பவனே, வாழ்வு முயற்சியில் ஈடுபடுவாருள் எல்லாம் தலைசிறந்தவன் ஆவான். 47

பிறரையும் அறநெறிப்படி நடக்கச் செய்து, தானும் அறம் தவறாத இல்வாழ்க்கை வாழ்வதானது, தவசியரின் நோன்பைவிட வலிமையானது ஆகும். 48

அறம் என்று சான்றோரால் சொல்லப்பட்டது யாதெனில், இல்வாழ்க்கையே; அதுவும் பிறன் பழித்துப் பேசுவதில்லை யானால் சிறப்பாகும். 49

உலகத்துள் வாழும் நெறிப்படியே வாழ்பவன், வானகத்தே வாழும் தெய்வத்துள் ஒருவனாகக் கருதி நன்கு மதிக்கப் படுவான். 50

இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை. 41

துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்
இல்வாழ்வான் என்பான் துணை. 42

தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்
ஐம்புலத்தாறு ஓம்பல் தலை. [றாங்கு 43

பழியஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை
வழிஎஞ்சல் எஞ்ஞான்றும் இல். 44

அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது. 45

அறத்தாற்றின் இல்வாழ்க்கை ஆற்றின் புறத்தாற்றில்
போஒய்ப் பெறுவது எவன். 46

இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான்
முயல்வாருள் எல்லாம் தலை. 47

ஆற்றின் ஒழுக்கி அறனிழுக்கா இல்வாழ்க்கை
நோற்பாரின் நோன்மை உடைத்து. 48

அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்
பிறன்பழிப்பது இல்லாயின் நன்று. 49

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும். 50

இல்வாழ்வுக்குத் தகுந்த சிறந்த பண்பு உடையவளாகித் தன்னை மணந்தவனின் வளமைக்குத் தகுந்தபடி நடப்பவளே, சிறந்த வாழ்க்கைத் துணைவி யாவாள். 51

இல்வாழ்வுக்கான சிறப்புகள் அனைத்தும் மனைவியிடம் இல்லையானால், அந்த இல்வாழ்க்கையில் எவ்வளவு சிறப்பிருந் தாலும் அது வாழ்வு ஆகாது. 52

இல்லாள் சிறந்தவளானால் இல்லாதது என்பது என்ன? இல்லவள் சிறந்தவள் அல்லாதபோது உள்ளதுதான் என்ன? 53

கற்பு என்னும் மனவுறுதி, இல்லாளிடம் உண்டாயிருந்தால், அந்தப் பெண்ணைவிடப் பெருமைமிக்கவை உலகில் யாவை உள? ஒன்றுமில்லை. 54

தெய்வம் தொழாதவளாய்த் தன் கொழுநனையே தொழுது துயிலெழுகின்ற கற்புடையவள் 'பெய்' என்றால், மழையும் பெய்யும். 55

தன் கற்பு வழுவாமல் காத்துத் தன் கணவனையும் பேணித் தகுதியமைந்த புகழையும் காத்துச் சோர்வு அடையாதவளே பெண். 56

சிறை வைத்துக் காக்கின்ற காவல் என்ன பயனைச் செய்து விடும்? மகளிர், 'நிறை' என்னும் பண்பைக் காப்பதே சிறப்பானதாகும். 57

பெண்கள் கணவரைப் போற்றித் தம் கடமைகளையும் செய்வாரானால், பெரும் சிறப்புடைய புத்தேளிர் வாழும் உலகினைப் பெறுவார்கள். 58

புகழைக் காப்பாற்ற விரும்பும் மனைவி இல்லாதவருக்கு, இகழ்ச்சியாகப் பேசுபவர் முன்னே ஏறுபோல் நடக்கும் பெருமித நடையும் இல்லை. 59

மனைவியின் சிறந்த பண்பே இல்வாழ்வுக்கு மங்கலம்; நல்ல மக்கட் பேறும் உடையதாய் இருத்தல், அதற்கு நல்ல அணிகலன் ஆகும். 60

மனைத்தக்க மாண்புடையள் ஆகித்தற் கொண்ட ான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை. 51

மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித் தாயினும் இல். 52

இல்லதென் இல்லவள் மாண்பானால் உள்ளதென்
இல்லவள் மாணாக் கடை. 53

பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
திண்மையுண் டாகப் பெறின். 54

தெய்வந் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை. 55

தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண். 56

சிறைகாக்குங் காப்புஎவன் செய்யும் மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை. 57

பெற்றாற் பெறின்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழும் உலகு. 58

புகழ்புரிந்த இல்இலோர்க்கு இல்லை இகழ்வார்முன்
ஏறுபோல் பீடு நடை. 59

மங்கலம் என்ப மனைமாட்சி மற்றுஅதன்
நன்கலம் நன்மக்கட் பேறு. 60

பெறுகின்ற செல்வங்களாகிய அவற்றுள், அறிவறிந்த மக்களைப் பெறுவதைக் காட்டிலும் சிறந்ததாக, பிற எதனையும் யாம் கருதுவதில்லை. 61

பழிச்சொல் ஏற்படாத நற்பண்புடைய மக்களைப் பெற்றிருந்தால், ஒருவனுக்கு ஏழு பிறப்பிலும் தீவினைப்பயன்களாகிய துன்பங்கள் அணுகா. 62

'தம் பொருள்' என்று போற்றுதற்கு உரியவர் தம் மக்களேயாவர்; மக்களாகிய அவர்தம் பொருள்கள் எல்லாம் அவரவர் வினைப் பயனால் வந்தடையும். 63

தம்முடைய மக்களின் சின்னஞ்சிறு கைகளாலே அளாவப் பெற்றது, மிகவும் எளிமையுடைய கூழேயானாலும், அது பெற்றோருக்கு அமிழ்தினும் இனிமையானதாயிருக்கும். 64

தம் மக்களின் உடம்பைத் தொடுதல் உடலுக்கு இன்பமாகும்; அவர்களின் மழலைச்சொற்களைக் கேட்டல் செவிக்கு மிகுந்த இன்பமாகும். 65

தம் மக்களின் மழலைப் பேச்சைக் கேட்டு இன்புறாதவர்களே, 'குழலிசை இனியது', 'யாழிசை இனியது' என்று புகழ்ந்து கூறுவார்கள். 66

ஒரு தந்தை தன் மகனுக்குச் செய்யும் நல்ல உதவி, அவனைக் கற்றோர் அவையிலே முதன்மை பெற்றவனாக இருக்கச் செய்தலே ஆகும். 67

தம்மைக் காட்டினும், தம் மக்கள் அறிவுடையவராக விளக்கம் பெறுதல், பெற்றோருக்கு மட்டுமல்லாமல், பெரிய உலகிலுள்ள உயிர்களுக்கெல்லாம் இனிமையானது ஆகும். 68

தன் மகனைச் சான்றாளன் என்று பலரும் போற்றுவதைக் கேள்வியுற்ற தாய், அவனைப் பெற்றபொழுதிலும் பெரிதாக மகிழ்வாள். 69

மகன், தந்தைக்குச் செய்யும் உதவி 'இவன் தந்தை இவனை மகனாகப் பெற என்ன நோன்பு செய்தானோ' என்னும் புகழ்ச் சொல்லே ஆகும். 70

பெறுமவற்றுள் யாமறிவது இல்லை அறிவறிந்த
மக்கட்பேறு அல்ல பிற. 61

எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின். 62

தம்பொருள் என்ப தம்மக்கள் அவர்பொருள்
தம்தம் வினையான் வரும். 63

அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை அளாவிய கூழ். 64

மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றுஅவர்
சொற்கேட்டல் இன்பம் செவிக்கு. 65

குழல்இனிது யாழ்இனிது என்பதம் மக்கள்
மழலைச்சொல் கேளா தவர். 66

தந்தை மகற்குஆற்றும் நன்றி அவையத்து
முந்தி இருப்பச் செயல். 67

தம்மின்தம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லாம் இனிது. 68

ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய். 69

மகன்தந்தைக்கு ஆற்றும் உதவி இவன்தந்தை
என்நோற்றான் கொல்எனுஞ் சொல். 70

அன்புக்கு அடைத்து வைக்கும் தாழ் எதுவும் உண்டோ? அன்புடையாரின் சிறு கண்ணீரே அவர் அன்பினைப் பலர் அறிய வெளிப்படுத்திவிடும். 71

அன்பில்லாதவர் எல்லாமே தமக்கு உரிமை என்று நினைப்பர்; அன்பு உடையவரோ தம் எலும்பையும் பிறருக்கு உரியதாக்கி மகிழ்வர். 72

அருமையான உயிருக்கு உடம்போடு பொருந்திய தொடர் பானது, அன்போடு பொருந்தி வாழும் வாழ்க்கைக்காகவே என்பர் சான்றோர். 73

அன்பானது பிறர்பால் ஆர்வம் உடையவராகும் பண்பைத் தரும். அந்தப் பண்பானது நட்பு என்கின்ற அளவற்ற மேன்மையைத் தரும். 74

இவ்வுலகத்திலே இன்பம் அடைந்தவர் அடையும் சிறப்பு, அவர் அன்புடையவராகப் பொருந்தி வாழ்ந்த வாழ்க்கையின் பயனே என்பர். 75

அறத்திற்கே அன்பு துணையாகும் என்று சொல்பவர் அறியாதவர்; ஆராய்ந்தால் மறச்செய்கைகளுக்கும் அன்பே துணையாயிருக்கும். 76

எலும்பில்லாத புழுப்பூச்சிகளை வெயில் காய்ந்து வருத்துவது போல, அன்பில்லாதவனை அறமானது காய்ந்து வருந்தச் செய்யும். 77

உள்ளத்திலே அன்பு இல்லாதவருடைய இல்வாழ்க்கையானது, வன்மையான பாலைநிலத்திலே காய்ந்தமரம் தளிர்த்தாற்போல நிலையற்றதாம். 78

உள்ளத்தின் அகத்து உறுப்பாகிய அன்பு இல்லாதவருக்கு, கண்ணுக்குத் தெரியும் உடம்பின் புற உறுப்புக்கள் எல்லாம் என்ன பயனைச் செய்யும்? 79

உயிர்நிலை என்பது அன்பின் வழியாக அமைந்ததே; அஃது இல்லாதவருக்கு எலும்பைத் தோலால் போர்த்த உடம்பு மட்டுமேயாகும். 80

## 8. அன்பு உடைமை

அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும். 71

அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு. 72

அன்போடு இயைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு
என்போடு இயைந்த தொடர்பு. 73

அன்புஈனும் ஆர்வம் உடைமை அதுஈனும்
நண்பென்னும் நாடாச் சிறப்பு. 74

அன்புற்று அமர்ந்த வழக்கென்ப வையகத்து
இன்புற்றார் எய்துஞ் சிறப்பு. 75

அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை. 76

என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை அறம். 77

அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றல் மரந்தளிர்த் தற்று. 78

புறத்துறுப் பெல்லாம் எவன்செய்யும் யாக்கை
அகத்துறுப்பு அன்பி லவர்க்கு. 79

அன்பின் வழியது உயிர்நிலை அஃதிலார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு. 80

இவ்வுலகில் இருந்து, பொருளைப் பேணி, இல்வாழ்க்கை நடத்துவதெல்லாம் விருந்தினரைப் போற்றி உதவுதலின் பொருட்டே ஆகும். 81

விருந்தாக வந்தவர் வெளியே சென்றிருக்க, தான்மட்டும் உண்ணுதல், சாவா மருந்தாகிய அமிழ்தமே என்றாலும் விரும்பத் தக்கது அன்று. 82

நாள்தோறும் தன்னை நாடி வரும் விருந்தினரைப் போற்று கிறவனுடைய இல்வாழ்க்கை துன்பத்தால் பாழ்படுதல் என்றும் இல்லையாகும். 83

முகமலர்ச்சியோடு நன்முறையில் விருந்தினரைப் பேணுகிறவன் வீட்டிலே, உளமலர்ச்சியோடு திருமகள் அகலாது தங்கியிருப்பாள். 84

விருந்தினரைப் போற்றியபின், எஞ்சியதைத் தான் உண்ணுகிற வனுடைய நிலத்தில், விதையும் விதைக்க வேண்டுமோ? 85

செல்லும் விருந்தினரையும் போற்றி, வரும் விருந்தையும் எதிர் பார்த்திருப்பவன், வானத்துத் தேவர்க்கு நல்ல விருந்தினன் ஆவான். 86

விருந்தோம்பலாகிய வேள்வியின் பயன் இன்ன அளவினது என்று கூறத்தக்கது அன்று; அது விருந்தினரின் தகுதிக்கு ஏற்ற அளவினது ஆகும். 87

பொருளை வருத்தத்தோடு காத்து, அது போய்விட்டபோது 'தாம் பற்றில்லாதவர்' என்பவர்கள், விருந்தைப் பேணி அந்த வேள்வியில் ஈடுபடாதவரே யாவர்! 88

பொருள் உடைமையுள்ளும் 'இல்லாமை' என்பது, விருந் தோம்பலைப் பேணாத மடமையே; அஃது அறிவற்றவரிடமே உளதாகும். 89

அனிச்ச மலர் மோந்தவுடனே வாடிவிடும்; முகம் மாறுபட்டு நோக்கிய உடனே விருந்தினரும் உள்ளம் வாடி விடுவார்கள். 90

இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு. 81

விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று. 82

வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுத லின்று. 83

அகனமர்ந்து செய்யாள் உறையும் முகனமர்ந்து
நல்விருந்து ஓம்புவான் இல். 84

வித்தும் இடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம். 85

செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு. 86

இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்
துணைத்துணை வேள்விப் பயன். 87

பரிந்தோம்பிப் பற்றற்றேம் என்பர் விருந்தோம்பி
வேள்வி தலைப்படா தார். 88

உடைமையுள் இன்மை விருந்தோம்பல் ஓம்பா
மடமை மடவார்கண் உண்டு. 89

மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து. 90

செம்மையான பொருளை அறிந்தவர்களின் வாய்ச் சொற்கள், இனிய சொற்களாய், அன்பு கலந்ததாய், வஞ்சம் இல்லாததாய் இருக்கும். 91

முகமலர்ச்சியோடு இனிதாகச் சொல்லும் இயல்பும் பெற்றவனானால், அது, அவன் மனமகிழ்ச்சியோடு கொடுக்கும் பொருளைவிட நல்லதாகும். 92

முகத்தோற்றத்தால் விருப்பத்தோடு இனிமையாகப் பார்த்து, உள்ளத்திலிருந்து வரும் இனிய சொற்களையும் சொல்லும் அதுவே, அறமாகும். 93

எவரிடத்தும் இன்பம் உண்டாகத் தகுந்த இன்சொல்லைப் பேசுபவர்க்கு, துன்பத்தை மிகுதியாக்கும் வறுமையும் இல்லாமற் போகும். 94

பணிவு உடையவனாகவும், இனிதாகச் சொல்பவனாகவும் ஆகுதல், ஒருவனுக்கு அணிகலனாகும்; பிறவெல்லாம் அணிகலன்கள் ஆகா. 95

நன்மையானவைகளையே விரும்பி, இனிய சொற்களையும், சொல்லி வந்தால், அதனால் பாவங்கள் தேய்ந்து போக, அறம் வளர்ந்து பெருகும். 96

பிறர்க்கு நல்ல பயனைத் தந்து, நல்ல பண்பிலிருந்து ஒருசிறிதும் விலகாத சொற்கள், சொல்வானுக்கும், நன்மை தந்து உபகாரம் செய்யும். 97

சிறுமையான எண்ணங்களில்லாத இனிய சொற்கள், மறுமையிலும் இம்மையிலும் ஒருவனுக்கு இன்பத்தைத் தரும். 98

இனிய சொற்கள் தனக்கு மிகுந்த இன்பத்தைத் தருவதனைக் காண்பவன், வன்சொற்களை வழங்குவது எந்தக் காரணத்தாலோ? 99

இனிய சொற்கள் இருக்கின்றபோது ஒருவன் இன்னாத சொற்களைக் கூறுதல், இனிய கனி இருக்கவும் காயைத் தின்பது போன்றதே! 100

இன்சொலால் ஈரம் அளைஇப் படிறுஇலவாம்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல். 91

அகன்அமர்ந்து ஈதலின் நன்றே முகன்அமர்ந்து
இன்சொலன் ஆகப் பெறின். 92

முகத்தான் அமர்ந்துஇனிது நோக்கி அகத்தானாம்
இன்சொ லினதே அறம். 93

துன்புறூஉம் துவ்வாமை இல்லாகும் யார்மாட்டும்
இன்புறூஉம் இன்சொ லவர்க்கு. 94

பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவற்கு
அணியல்ல மற்றுப் பிற. 95

அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை
நாடி இனிய சொலின். 96

நயன்ஈன்று நன்றிபயக்கும் பயன்ஈன்று
பண்பின் தலைப்பிரியாச் சொல். 97

சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும்
இம்மையும் இன்பம் தரும். 98

இன்சொல் இனிதுஈன்றல் காண்பான் எவன்
வன்சொல் வழங்கு வது. [கொலோ 99

இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று. 100

தான் எதுவுமே செய்யாதிருக்கவும், பிறன் தனக்குச் செய்த உதவிக்கு, இவ்வுலகமும் வானுலகமும் ஈடாக முடியாது. 101

காலத்தோடு செய்த உதவியானது அளவால் சிறிதே என்றாலும், அதன் பெருமையோ உலகத்தைவிடப் பெரியதாகும். 102

பயனைக் கருதாதவர் செய்த உதவியின் நன்மையினை ஆராய்ந்தால், அதன் நன்மை கடலையும்விட அளவினால் மிகப் பெரியதாகும். 103

உதவியின் பயனைத் தெரிந்தவர்கள், தினையளவே ஒருவன் நன்மை செய்தாலும், அதனைப் பனையளவாக உளங் கொண்டு போற்றுவார்கள். 104

உதவியானது அதன் அளவையே எல்லையாக உடையது அன்று; அது, உதவி செய்யப்பட்டவரின் பண்பையே தனக்கு அளவாக உடையதாகும். 105

மனமாசு இல்லாதவரின் நட்பினை ஒருபோதும் மறக்கலாகாது; துன்பக் காலத்தில் உறுதுணையாக உதவியவரின் நட்பையும் விடலாகாது. 106

தம்முடைய துன்பத்தை ஒழித்தவரின் நட்பினை, ஏழேழ் பிறப்பினும் மறவாது நினைந்து போற்றுவர், நன்றியுடையோர். 107

ஒருவர் செய்த நன்மையை மறப்பது நல்ல பண்பு ஆகாது; ஆனால், அவர் செய்த தீமையை அன்றைக்கே மறந்து விடுவது மிகவும் நல்லது. 108

ஒருவர் நம்மைக் கொன்றாற்போன்றதொரு துன்பத்தைச் செய்தாலும், அவர் முன்பு செய்த நன்மை ஒன்றை நினைத்தாலும் அத் துன்பம் கெடும். 109

எந்த நன்மையை அழித்தவர்க்கும் தப்புதற்கு வழி உண்டாகும்; ஆயின், ஒருவர் செய்த உதவியை மறந்து அழித்தவனுக்கு உய்வே கிடையாது. 110

செய்யாமல் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்றல் அரிது. 101

காலத்தி னால்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது. 102

பயன்தூக்கார் செய்த உதவி நயன்தூக்கின்
நன்மை கடலிற் பெரிது. 103

தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்தெரி வார். 104

உதவி வரைத்தன்று உதவி உதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து. 105

மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க
துன்பத்துள் துப்பாயார் நட்பு. 106

எழுமை எழுபிறப்பும் உள்ளுவர் தங்கண்
விழுமம் துடைத்தவர் நட்பு. 107

நன்றி மறப்பது நன்றன்று நன்றல்லது
அன்றே மறப்பது நன்று. 108

கொன்றன்ன இன்னா செயினும் அவர்செய்த
ஒன்றுநன்று உள்ளக் கெடும். 109

எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு. 110

ஒவ்வொரு பகுதிதோறும் முறையோடு பொருந்தி நடை பெறுமானால், 'தகுதி' என்று கூறப்படும் நடுவுநிலைமையும் நல்லதே ஆகும். 111

செம்மை உடையவனின் பொருள் வளமையானது இடையிலே அழிந்து போகாமல், அவன் வழியினர்க்கும் உறுதியாக நன்மை தரும். 112

நன்மையே தருவது என்றாலும், நடுவுநிலைமை தவறுதலால் வருகின்ற வளத்தை, அப்போதே உள்ளத்திலிருந்து போக்கிவிட வேண்டும். 113

ஒருவர் தகுதியாளர், மற்றவர் தகுதியற்றவர் என்று உரைப்பது எல்லாம், அவரவரது எஞ்சி நிற்கும் புகழும் பழியும் என்பவற்றால் காணப்படும். 114

பொருள் கேடும், பொருள் பெருக்கமும் வாழ்வில் இல்லாதன அல்ல; நெஞ்சத்தில் என்றும் நடுவுநிலைமை கோணாதிருப்பதே சான்றோர்க்கு அழகாகும். 115

தன் நெஞ்சமானது நடுவுநிலைமையிலிருந்து விலகி, தவறு செய்பவன், 'யான் இதனால் கெடுவேன்' என்பதனையும் அறிந்து கொள்வானாக! 116

நடுவுநிலைமையோடு நன்மையான செயல்களிலே நிலைத்திருப் பவனின் தாழ்ச்சியையும் கேடு என்று உலகம் ஒருபோதும் கொள்ளாது. 117

தன்னைச் சமனாகச் செய்துகொண்டு, பொருளைச் சீர்தூக்கிக் காட்டும் துலாக்கோல்போல அமைந்து, ஒருபக்கம் சாயாதிருத்தல் சான்றோர்க்கு அழகாகும். 118

உள்ளத்திலே கோணுதலற்ற பண்பை முடிவாகப் பெற்றிருந்தால், சொற்களில் கோணுதல் இல்லாதிருத்தலும் செப்பமாக உணரப் படும். 119

பிறர் பொருளையும் தமதேபோலக் கருதிக் கொண்டு ஒழுகுதல், வாணிகத்தைச் செய்வார்க்குரிய நல்ல வாணிக மரபாகும். 120

தகுதி எனவொன்று நன்றே பகுதியான்
பாற்பட்டு ஒழுகப் பெறின். 111

செப்பம் உடையவன் ஆக்கம் சிதைவின்றி
எச்சத்திற்கு ஏமாப்பு உடைத்து. 112

நன்றே தரினும் நடுவிகந்தாம் ஆக்கத்தை
அன்றே ஒழிய விடல். 113

தக்கார் தகவிலர் என்பது அவரவர்
எச்சத்தாற் காணப் படும். 114

கேடும் பெருக்கமும் இல்லல்ல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க்கு அணி. 115

கெடுவல்யான் என்பது அறிகதன் நெஞ்சம்
நடுவொரீஇ அல்ல செயின். 116

கெடுவாக வையாது உலகம் நடுவாக
நன்றிக்கண் தங்கியான் தாழ்வு. 117

சமன்செய்து சீர்தூக்குங் கோல்போல் அமைந்தொரு
கோடாமை சான்றோர்க்கு அணி. [பால் 118

சொற்கோட்டம் இல்லது செப்பம் ஒருதலையா
உட்கோட்டம் இன்மை பெறின். 119

வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவுந் தமபோற் செயின். 120

அடக்கமானது அதனை உடையவனை அமரருள் சேர்த்து வைக்கும்; அடங்காமையோ பேரிருள் ஆகிய நரகிற் சேர்த்துவிடும். 121

அடக்கத்தைச் செல்வமாகப் பேணிக் காத்து வருக; உயிருக்கு ஆக்கந் தருவது அதனினும் மேம்பட்ட செல்வம் பிற யாதுமில்லை. 122

அறியவேண்டுவன அறிந்து நல்வழியிலே அடக்கத்தோடு நடக்கும் பண்பைப் பெற்றால், அதன் செறிவை அறிந்து மேன்மையும் உண்டாகும். 123

தன் நிலையிலிருந்து திரிந்து போகாமல் அடங்கி இருப்பவனின் தோற்றமானது, மலையைக் காட்டிலும் மிகப் பெரிதான உயர்வு உள்ளதாகும். 124

பணிவாக நடத்தல் என்பது எல்லார்க்கும் நன்மையானதாகும்; அவருள்ளும் செல்வர்க்கு அதுவும் ஒரு செல்வத்தைப் போன்ற சிறப்பினதே யாகும். 125

ஆமையைப் போல, ஐம்பொறிகளையும் இந்த ஒரு பிறப்பிலே அடக்கிக் கொள்ளுதலில் வல்லவனானால், அதனால் எழுமையும் பாதுகாப்பு உண்டு. 126

எவற்றைக் காக்காதவராயினும் தன் நாவைத் தவறாமல் காக்க வேண்டும்; காக்கத் தவறினால் சொற்குற்றத்தில் அகப்பட்டுத் துன்பம் அடைவர். 127

தீய சொற்களாலே வந்தடைந்த பொருளாகிய நன்மை ஒன்றாயினும் ஒருவனிடம் இருந்தாலும், அதனால் எல்லா நன்மையுமே இல்லாமற் போய்விடும். 128

தீயினாலே சுடப்பட்ட புண் உள்ளே ஆறிவிடும்; ஆனால், நாவினாலே சுட்ட வடுவானது உள்ளத்தில் ஒருபோதும் மறையவே மறையாது. 129

சினத்தைக் காத்து, கல்வி கற்று, அடங்கி வாழ்தலையும் மேற் கொள்பவனின் செவ்வியை, அவன் வழியில் சென்று அறமானது பார்த்திருக்கும். 130

## 13. அடக்கம் உடைமை

*அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை*
*ஆரிருள் உய்த்து விடும்.* 121

*காக்க பொருளா அடக்கத்தை ஆக்கம்*
*அதனினூஉங் கில்லை உயிர்க்கு.* 122

*செறிவறிந்து சீர்மை பயக்கும் அறிவறிந்து*
*ஆற்றின் அடங்கப் பெறின்.* 123

*நிலையில் திரியாது அடங்கியான் தோற்றம்*
*மலையினும் மாணப் பெரிது.* 124

*எல்லார்க்கும் நன்றாம் பணிதல் அவருள்ளும்*
*செல்வர்க்கே செல்வம் தகைத்து.* 125

*ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்*
*எழுமையும் ஏமாப் புடைத்து.* 126

*யாகாவா ராயினும் நாகாக்க காவாக்கால்*
*சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.* 127

*ஒன்றானும் தீச்சொல் பொருட்பயன் உண்டாயின்*
*நன்றாகா தாகி விடும்.* 128

*தீயினாற் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே*
*நாவினாற் சுட்ட வடு.* 129

*கதங்காத்துக் கற்றடங்கல் ஆற்றுவான் செவ்வி*
*அறம்பார்க்கும் ஆற்றின் நுழைந்து.* 130

ஒழுக்கம் எப்போதும் மேன்மையைத் தருவதனால், அந்த ஒழுக்கமே உயிரினும் மேலானதாகச் சான்றோரால் காக்கப்படும். 131

வருந்தியேனும் ஒழுக்கத்தைப் போற்றிக் காக்கவேண்டும்; பலவும் ஆராய்ந்து கைக்கொண்டு தெளிந்தாலும், ஒழுக்கமே உயிருக்குத் துணையாகும். 132

ஒழுக்கம் உடையவராக இருப்பதே உயர்ந்த குடிப்பிறப்பின் தன்மை; ஒழுக்கம் கெடுதல் இழிந்த பிறப்பின் தன்மையாகி விடும். 133

கற்றதை மறந்தாலும் மீண்டும் ஓதிக் கற்றுக் கொள்ளலாம்; ஆனால், வேதமோதுவான் பிறப்பால் வந்த உயர்வு, அவன் ஒழுக்கம் குன்றினால் கெடும். 134

பொறாமை உடையவனிடத்திலே ஆக்கம் அமையாதது போல, ஒழுக்கம் இல்லாதவன் வாழ்க்கையிலும் உயர்வு இல்லை! 135

மன வலிமை உடையவர், ஒழுக்கம் குன்றுதலால் குற்றம் நேரிடுதலை அறிந்து, ஒழுக்கத்திலிருந்து ஒருபோதுமே பிறழ மாட்டார்கள். 136

ஒழுக்கத்தால் எல்லாரும் மேன்மை அடைவார்கள்; ஒழுக்கக் கேட்டால் அடையத்தகாத பழியை அடை வார்கள். 137

நல்ல ஒழுக்கமானது இன்பமான நல்வாழ்வுக்கு வித்தாக இருக்கும்; தீய ஒழுக்கமோ எக்காலத்தும் துன்பத்தையே தரும். 138

தீய சொற்களைத் தவறியும் தம் வாயினாற் சொல்லும் குற்றம், நல்ல ஒழுக்கம் உடையவர்களுக்கு ஒருபோதும் பொருந்தாத பண்பாகும். 139

உலகத்தவரோடு பொருந்தி ஒழுகும் தன்மையை அறியாதவர், பல நூல்களைக் கற்றிருந்தாலும் அறிவில்லாதவரே ஆவர். 140

ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும். 131

பரிந்தோம்பிக் காக்க ஒழுக்கம் தெரிந்தோம்பித்
தேரினும் அஃதே துணை. 132

ஒழுக்கம் உடைமை குடிமை இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும். 133

மறப்பினும் ஓத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும். 134

அழுக்கா றுடையான்கண் ஆக்கம்போன் றில்லை
ஒழுக்கம் இலான்கண் உயர்வு. 135

ஒழுக்கத்தின் ஒல்கார் உரவோர் இழுக்கத்தின்
ஏதம் படுபாக் கறிந்து. 136

ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை இழுக்கத்தின்
எய்துவர் எய்தாப் பழி. 137

நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம் தீயொழுக்கம்
என்றும் இடும்பை தரும். 138

ஒழுக்கம் உடையவர்க்கு ஒல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல். 139

உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார். 140

பிறனுக்கு உரியவளான ஒருத்தியை விரும்பி நடக்கும் அறியாமை, உலகத்து அறமும் பொருளும் ஆராய்ந்தவரிடத்து இருப்பது இல்லை. 141

நல்ல அறநெறியை மறந்து கீழான வழியிலே சென்றவர் எல்லாரினும், பிறன்மனைவியை இச்சித்து, அவன் வீட்டு வாயிலில் நின்றவரைப் போல் அறிவிலிகள் இல்லை. 142

சந்தேகப்படாமல் தெளிந்து நம்பியவர் வீட்டில் தீமையைச் செய்து நடப்பவர் செத்தவரைக் காட்டிலும் வேறுபட்டவர் அல்லர். 143

தினையளவேனும் தம் பிழையை ஆராயாமல் பிறன் இல்லத்தே செல்லுதல், எவ்வளவு சிறப்புடையவர் ஆயினும் என்னவாக முடியும்? 144

இது செய்வதற்கு எளிது எனக் கருதி பிறன் மனைவிபால் செல்கின்றவன், எக்காலத்தும் மறையாமல் நிலைத்து நிற்கும் பழியை அடைவான். 145

பகை, பாவம், அச்சம், பழி என்னும் நான்கு தீமைகளும் பிறன் மனைவியை நாடிச் செல்பவனிடமிருந்து எப்போதும் நீங்காதனவாம். 146

அறத்தின் இயல்போடு பொருந்தி இல்வாழ்விலே வாழ்பவன் என்பவன், பிறனுக்கு உரியவளின் பெண்மையை விரும்பாதவனே ஆவான். 147

பிறன் மனைவியை இச்சித்துப் பார்க்காத பேராண்மை, சான்றோர்க்கு அறன் மட்டுமன்று; நிரம்பிய ஒழுக்கமும் ஆகும். 148

அச்சந்தரும் கடல் சூழ்ந்த இவ்வுலகிலே 'நன்மைக்கு உரியவர் யார்?' என்றால், பிறருக்கு உரியவளின் தோளைத் தழுவாதவரே ஆவர். 149

அறத்தையே கருதாமல் ஒருவன் அறமல்லாதனவற்றையே செய்தாலும், பிறனுக்கு உரியவளின் பெண்மையை விரும்பா திருத்தலே நல்லதாகும். 150

## 15. பிறனில் விழையாமை

பிறன்பொருளாட் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்து
அறம்பொருள் கண்டார்கண் இல். 141

அறன்கடை நின்றாருள் எல்லாம் பிறன்கடை
நின்றாரிற் பேதையார் இல். 142

விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தார்இல்
தீமை புரிந்தொழுகு வார். 143

எனைத்துணையர் ஆயினும் என்னாம் தினைத்துணையும்
தேரான் பிறனில் புகல். 144

எளிதென இல்லிறப்பான் எய்தும்எஞ் ஞான்றும்
விளியாது நிற்கும் பழி. 145

பகைபாவம் அச்சம் பழிஎன நான்கும்
இகவாவாம் இல்லிறப்பான் கண். 146

அறனியலான் இல்வாழ்வான் என்பான் பிறனியலாள்
பெண்மை நயவா தவன். 147

பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு
அறன்ஒன்றோ ஆன்ற ஒழுக்கு. 148

நலக்குரியார் யாரெனின் நாமநீர் வைப்பில்
பிறற்குரியாள் தோள்தோயா தார். 149

அறன்வரையான் அல்ல செயினும் பிறன்வரையாள்
பெண்மை நயவாமை நன்று. 150

தன்னை அகழ்பவரையும் தாங்கும் நிலத்தைப்போல், தம்மை இகழ்வாரையும் பொறுத்தலே மிகச்சிறந்த பண்பாகும் 151

அளவுகடந்து செய்த தீங்கையும் எப்போதும் பொறுத்துக் கொள்ள வேண்டும்; அதனை நினையாமலே மறந்து விடுதல் அதனிலும் நன்மையாகும். 152

வறுமையுள்ளும் வறுமையாவது விருந்தைப் போற்றாமல் விடுதல்; வலிமையுள்ளும் வலிமையாவது அறிவிலார் செயலைப் பொறுத்தல் ஆகும். 153

நிறை உடையனாயிருக்கும் தன்மை தன்னைவிட்டு நீங்காம லிருக்கவேண்டுமானால், அவன் பொறையுடைமையைப் போற்றிக் கைக்கொள்ள வேண்டும். 154

தமக்குத் தீமை செய்தவரைப் பொறுக்காமல் தண்டித்தவரை ஒரு பொருளாக எவரும் மதியார்; ஆனால், பொறுத்தவர்களைப் பொன்போற் பொதிந்து வைப்பார்கள். 155

தீங்கு செய்தவர்களைத் தண்டித்தவர்களுக்கு அன்று ஒரு நாளைக்கே இன்பம்; ஆனால், பொறுத்தவர்க்கோ உலகம் அழியும்வரை புகழ் உண்டு. 156

தகுதியில்லாதவற்றைப் பிறர் தனக்குச் செய்தாலும், அதனால் மிகவும் மனம் நொந்து அவருக்குத் தீமை செய்யாதிருத்தல் நல்லது. 157

செருக்கு மிகுதியால் தீமை செய்தவர்களை தாம், தம்முடைய பொறுமை என்னும் தகுதியினால் வென்றுவிட வேண்டும். 158

எல்லைமீறி நடப்பவரின் வாயிற் பிறக்கும் கொடிய சொற்களைப் பொறுத்துக் கொள்பவர்கள், துறவியர்போலத் தூய்மையாளர் ஆவர். 159

உணவு உண்ணாமல் நோன்பு கொள்பவர், பிறர் சொல்லும் கொடுஞ்சொற்களைப் பொறுப்பவர்க்கு அடுத்த நிலையிலே தான் பெரியவர் ஆவர். 160

## 16. பொறை உடைமை

அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை. 151

பொறுத்தல் இறப்பினை என்றும் அதனை
மறத்தல் அதனினும் நன்று. 152

இன்மையுள் இன்மை விருந்தொரால் வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை. 153

நிறையுடைமை நீங்காமை வேண்டின் பொறையுடைமை
போற்றி ஒழுகப் படும். 154

ஒறுத்தாரை ஒன்றாக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து. 155

ஒறுத்தார்க்கு ஒருநாளை இன்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ். 156

திறனல்ல தற்பிறர் செய்யினும் நோநொந்து
அறனல்ல செய்யாமை நன்று. 157

மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாம்தம்
தகுதியான் வென்று விடல். 158

துறந்தாரின் தூய்மை உடையர் இறந்தார்வாய்
இன்னாச்சொல் நோற்கிற் பவர். 159

உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லும்
இன்னாச்சொல் நோற்பாரின் பின். 160

தன் நெஞ்சில் பொறாமை எண்ணம் இல்லாத தன்மையினையே, ஒருவன் தனக்கு உரிய வாழ்க்கை நெறியாகக் கொண்டு வாழ வேண்டும். 161

ஒருவன் எவரிடத்திலும் எப்போதும் பொறாமை இல்லாமல் இருக்கின்ற தன்மையைப் பெறுவானாயின், மேலான பேறுகளில் அதற்கு இணையாகச் சிறந்தது எதுவும் இல்லை. 162

பிறனுடைய ஆக்கத்தைக் கண்டதும், அதனைப் பாராட்டாமல் பொறாமைப்படுகிறவன், தனக்கு அறனும் ஆக்கமும் சேர்வதை விரும்பாதவனே ஆவான். 163

'பொறாமை' என்னும் தவறான எண்ணத்தால் துன்பமே உண்டாவதை அறிந்து, அறிவாளர், பொறாமையால் தீவினை களைச் செய்யமாட்டார்கள். 164

பொறாமை உடையவரைக் கெடுப்பதற்கு எந்தப் பகையும் வேண்டாம்; அதுவே போதும்; பகைவர் கேடு செய்யத் தவறினாலும், அது தவறாமல் கேட்டைத் தந்துவிடும். 165

இன்னொருவன் பிறனுக்குக் கொடுப்பதைப் பார்த்துப் பொறாமைப்படுகிறவனின் குடும்பம், உடுக்க உடையும், உண்ண உணவும் இல்லாமல் கெடும். 166

பொறாமை உடையவனைக் கண்டு திருமகள் வெறுத்து, அவனைத் தன் தமக்கையான மூதேவிக்குக் காட்டி, தான் அவனைவிட்டு நீங்கிப் போய்விடுவாள் 167

பொறாமை என்னும் ஒப்பற்ற கொடிய 'பாவி', ஒருவனது செல்வத்தையும் கெடுத்து, அவனைத் தீய வழியிலும் செல்லும் படி செலுத்திவிடும். 168

பொறாமை கொண்ட நெஞ்சத்தானின் ஆக்கமும், பொறாமை யற்ற சிறந்தவனுடைய கேடும், மக்களால் எப்போதும் நினைக்கப் படும். 169

உலகில் பொறாமையினால் மேன்மை அடைந்தாரும் இல்லை; பொறாமை இல்லாததால் பொருள் பெருக்கத்தில் குறைந்த வறுமையானவரும் இல்லை. 170

ஒழுக்காறாக் கொள்க ஒருவன்தன் நெஞ்சத்து
அழுக்காறு இலாத இயல்பு. 161

விழுப்பேற்றின் அஃதொப்பது இல்லையார் மாட்டும்
அழுக்காற்றின் அன்மை பெறின். 162

அறனாக்கம் வேண்டாதான் என்பான் பிறனாக்கம்
பேணாது அழுக்கறுப் பான். 163

அழுக்காற்றின் அல்லவை செய்யார் இழுக்காற்றின்
ஏதம் படுபாக்கு அறிந்து. 164

அழுக்காறு உடையார்க்கு அதுசாலும் ஒன்னார்
வழுக்கியும் கேடீன் பது. 165

கொடுப்பது அழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉம் இன்றிக் கெடும். 166

அவ்வித்து அழுக்காறு உடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும். 167

அழுக்காறு எனஒரு பாவி திருச்செற்றுத்
தீயுழி உய்த்து விடும். 168

அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் செவ்வியான்
கேடும் நினைக்கப் படும். 169

அழுக்கற்று அகன்றாரும் இல்லை அஃதில்லார்
பெருக்கத்தின் தீர்ந்தாரும் இல். 170

நடுவுநிலைமை இல்லாமல், பிறரது நல்ல பொருளைக் கவர் வதற்கு நினைத்தால், அவன் குடும்பம் கெட்டுப் போவதுடன், அவனுக்கு என்றும் அழியாத குற்றமும் வந்து சேரும். 171

நடுவுநிலைமை தவறுவதற்கு வெட்கப்படுகிறவர்கள், கவர்தலால் வந்தடையும் பயனை விரும்பிப் பழியான செயல்களைச் செய்யவே மாட்டார்கள். 172

நிலையான இன்பத்தை விரும்புகிறவர்கள், கவரும் பொருளால் வரும் சிறிய இன்பத்தை விரும்பி, அறன் அல்லாத செயல்களைச் செய்ய மனம் விரும்பமாட்டார்கள். 173

ஐம்புலன்களையும் வென்ற குறை இல்லாத அறிவாளர்கள், 'யாம் பொருளில்லாதேம்' என்ற வறுமை நிலையிலும் பிறர் பொருளைக் கவர விரும்பமாட்டார்கள். 174

ஒருவன் எவரிடத்திலிருந்தும் பொருளைக் கவர நினைத்துப் பொருந்தாதவற்றைச் செய்தால், நுட்பமாகவும் விரிவானதாகவும் வளர்ந்த அவனது அறிவால் ஏதும் பயனில்லை. 175

அருளை விரும்பி நல்லொழுக்கத்திலே நிலைத்து நின்றவன், பிறர் பொருளை விரும்பிப் பொல்லாத செயல்களைச் செய்ய நினைத்தால், கெட்டுப் போய்விடுவான். 176

பிறர் பொருளைக் கவர்ந்து கொள்வதால் வரும் ஆக்கத்தை எவருமே விரும்பவேண்டாம்; செயல் அளவில் அதன் பயன் நன்மையாவது என்பது எப்போதும் அரிதாகும். 177

ஒருவனது செல்வ வளம் குறையாமல் இருப்பதற்குரிய வழி யாதென்றால், அவன் பிறன் பொருளைக் கவர விரும்பா திருத்தலே ஆகும். 178

அறத்தை அறிந்து, பிறன் பொருளைக் கவர விரும்பாத அறிவுடையாரை, திருமகள், தான் சேர்வதற்குரிய திறன் தெரிந்து சென்று அடைவாள். 179

வரும் துன்பத்தை நினையாமல் பிறர் பொருளைக் கவர விரும்பினால், அது கெடுதலைத் தரும்; அதனை விரும்பா திருத்தல் என்னும் பெருமையே வெற்றியைத் தரும். 180

நடுவின்றி நன்பொருள் வெஃகின் குடிபொன்றிக்
குற்றமும் ஆங்கே தரும். 171

படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்
நடுவன்மை நாணு பவர். 172

சிற்றின்பம் வெஃகி அறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர். 173

இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற
புன்மையில் காட்சி யவர். 174

அஃகி அகன்ற அறிவென்னாம் யார்மாட்டும்
வெஃகி வெறிய செயின். 175

அருள்வெஃகி ஆற்றின்கண் நின்றான் பொருள்வெஃகிப்
பொல்லாத சூழக் கெடும். 176

வேண்டற்க வெஃகியாம் ஆக்கம் விளைவயின்
மாண்டற்கு அரிதாம் பயன். 177

அஃகாமை செல்வத்திற்கு யாதெனின் வெஃகாமை
வேண்டும் பிறன்கைப் பொருள். 178

அறனறிந்து வெஃகா அறிவுடையார்ச் சேரும்
திறனறிந்து ஆங்கே திரு. 179

இறலீனும் எண்ணாது வெஃகின் விறலீனும்
வேண்டாமை என்னும் செருக்கு. 180

அறத்தைப்பற்றி வாயாலும் சொல்லாதவனாய், ஒருவன் தீய செயல்களையே செய்து வந்தாலும், 'அவன் பிறனைப் பழித்துப் புறங்கூறாதவன்' என்பது இனிதாகும். 181

அறத்தையே அழித்துத் தீமைகளைச் செய்துவருவதைக் காட்டிலும், இல்லாதபோது ஒருவனைப் பழித்துப் பேசி, நேரில் பொய்யாகச் சிரிப்பது தீமையாகும். 182

பிறர் இல்லாதபோது அவரைப் புறங்கூறிப் பொய்யாக நடந்து உயிர் வாழ்தலைவிட, இறந்துபோதல், அறநூல்கள் சொல்லும் ஆக்கத்தைத் தரும். 183

நேரில் நின்று இரக்கம் இல்லாமல் கடுமையாகப் பேசினாலும் பேசுக; நேரில் இல்லாதபோது பின்விளைவைக் கருதாமல் எந்தப் பழியையும் எடுத்துச் சொல்லக் கூடாது. 184

அறநூல்கள் கூறும் உள்ளமுள்ளவனாக ஒருவன் இல்லாத தன்மையினை, அவன் புறங்கூறுகின்றதான அந்த இழி செயலால் தெளிவாக அறியலாகும். 185

பிறனைப் பின்னால் பழித்துப் பேசுபவன், அவனுடைய பழிச் செயல்களுள்ளும் இழிவானதைத் தெரிந்தெடுத்துக் கூறிப் பிறரால் மிகவும் பழிக்கப்படுவான். 186

'மகிழ்ச்சியாகப் பேசி நட்புக் கொள்ளுதல் நன்மை' என்று தெளியாதவரே, பிறர் தம்மைவிட்டு விலகுமாறு பழித்துப் பேசி, தமக்குள்ள நண்பரையும் பிரித்துவிடுவர். 187

நெருங்கிய நட்பினரின் குற்றத்தையும் புறத்தே பேசித் தூற்றும் இயல்பினர், அயலாரிடத்து எப்படி மோசமாக நடந்து கொள்வார்களோ? 188

ஒருவன் இல்லாததைப் பார்த்து, அவனைப்பற்றி இழிவான சொற்களை உரைப்பவனையும், அறத்தைக் கருதியேதான் உலகம் தாங்கிக் கொண்டிருக்கின்றதோ? 189

அயலாரின் குற்றங்களைக் காண்பதுபோலவே தம் குற்றங்களையும் காண்பாரானால், நிலைபெற்ற உயிர்கட்கு எத்தகைய தீமையும் உண்டாகுமோ? 190

அறங்கூறான் அல்ல செயினும் ஒருவன்
புறங்கூறான் என்றல் இனிது. 181

அறனழீஇ அல்லவை செய்தலின் தீதே
புறனழீஇப் பொய்த்து நகை. 182

புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலின் சாதல்
அறங்கூறும் ஆக்கம் தரும். 183

கண்நின்று கண்ணறச் சொல்லினும் சொல்லற்க
முன்இன்று பின்நோக்காச் சொல். 184

அறம்சொல்லும் நெஞ்சத்தான் அன்மை புறஞ்
புன்மையால் காணப் படும். [சொல்லும் 185

பிறன்பழி கூறுவான் தன்பழி யுள்ளும்
திறன்தெரிந்து கூறப் படும். 186

பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
நட்பாடல் தேற்றா தவர். 187

துன்னியார் குற்றமும் தூற்றும் மரபினார்
என்னைகொல் ஏதிலார் மாட்டு. 188

அறன்நோக்கி ஆற்றுங்கொல் வையம் புறன்நோக்கிப்
புன்சொல் உரைப்பான் பொறை. 189

ஏதிலார் குற்றம்போல் தங்குற்றம் காண்கிற்பின்
தீதுண்டோ மன்னும் உயிர்க்கு. 190

பலரும் வெறுக்கும்படி பயனில்லாத சொற்களையே சொல்லும் ஒருவன், உலகினர் எல்லாராலுமே இகழ்வாகப் பேசப் படுவான். 191

பலபேர் முன்பாகப் பயனற்ற பேச்சைப் பேசுதல், நன்மை அல்லாத செயலை நண்பர்களிடத்தில் செய்வதைவிடத் தீமையானது ஆகும். 192

பயன் இல்லாத ஒன்றைப்பற்றியே விரிவாகப் பேசும் ஒருவனது பேச்சானது, 'அவன் நல்ல பண்பில்லாதவன்' என்பதை உலகுக்கு அறிவிக்கும். 193

பயனோடு சேராத பண்பற்ற சொற்களைப் பலரோடும் சொல்லுதல், எந்த நன்மையையும் தராததோடு, உள்ள நன்மையையும் போக்கிவிடும். 194

நல்ல பண்பு உடையவர்களும், பயன் இல்லாத சொற்களைச் சொல்வார்களானால், அவர்களுடைய சிறந்த தன்மையும் சிறப்பும் நீங்கிப் போகும். 195

பயனில்லாத சொற்களையே விரும்பித் தொடர்ந்து பேசுபவனை, 'மனிதன்' என்றே சொல்லக் கூடாது; மக்களுள், 'பதர்' என்றே கொள்ளல் வேண்டும். 196

நன்மை இல்லாதவற்றைச் சொன்னாலும் சொல்லலாம், பயனில்லாத சொற்களை எப்போதுமே சான்றோர் சொல்லாம விருத்தல் நல்லது. 197

அருமையான பயன்களை ஆராய்கின்ற அறிவாளர்கள், பெரும் பயன் இல்லாத சொற்களை ஒருபோதுமே சொல்ல மாட்டார்கள். 198

மனமயக்கம் நீங்கிய குற்றமற்ற அறிவை உடையவர்கள், பயனில்லாத சொற்களை மறந்தும்கூட ஒருகாலத்திலும் சொல்லமாட்டார்கள். 199

சொன்னால், பயன் தருகின்ற சொற்களையே யாவரும் சொல்லுக; பயனில்லாத சொற்களை ஒருபோதுமே எவரும் சொல்லாதிருக்க வேண்டும். 200

## 20. பயனில சொல்லாமை

பல்லார் முனியப் பயனில சொல்லுவான்
எல்லோரும் எள்ளப் படும். 191

பயனில பல்லார்முன் சொல்லல் நயனில
நட்டார்கண் செய்தலின் தீது. 192

நயனிலன் என்பது சொல்லும் பயனில
பாரித்து உரைக்கும் உரை. 193

நயன்சாரா நன்மையின் நீக்கும் பயன்சாராப்
பண்பில்சொல் பல்லார் அகத்து. 194

சீர்மை சிறப்பொடு நீங்கும் பயனில
நீர்மை உடையார் சொலின். 195

பயனில்சொல் பாராட்டு வானை மகன்எனல்
மக்கட் பதடி எனல். 196

நயனில சொல்லினுஞ் சொல்லுக சான்றோர்
பயனில சொல்லாமை நன்று. 197

அரும்பயன் ஆயும் அறிவினார் சொல்லார்
பெரும்பயன் இல்லாத சொல். 198

பொருள்தீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் மருள்
மாசறு காட்சி யவர். [தீர்ந்த 199

சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல். 200

தீய செயலைச் செய்தலாகிய இறுமாப்பைத் தீவினையாளர்கள் அஞ்சமாட்டார்கள்; ஆனால், மேலோர்கள் தீயவைகளைச் செய்வதற்கு அஞ்சுவார்கள். 201

தீயசெயல்கள் பிறர்க்கும் தமக்கும் தீமை விளைவித்தலால், தீயசெயல்களைத் தீயினும் கொடியதாகச் சான்றோர் நினைத்து அஞ்சுவார்கள். 202

தமக்குத் தீமையைச் செய்தவருக்கும், தாம் பதிலுக்குத் தீமை செய்யாது மன்னித்துவிடுவதை, அறிவினுள் எல்லாம் சிறந்த அறிவு என்பார்கள். 203

பிறனுக்குக் கேடு செய்வதைப்பற்றி மறந்தும் நினைக்கக் கூடாது; நினைத்தால், அப்படி நினைத்தவனுக்குக் கேடு செய்ய அறமே நினைக்கும். 204

'இவன் துணையிலன்' என்று ஒருவனுக்குத் தீமையைச் செய்யாதிருக்கவேண்டும்; செய்தால், மீண்டும் இவனே யாதும் துணை இல்லாதவன் ஆவான். 205

துன்பம் தருவனவான தீவினைகள் தன்னைத் தொடர்ந்து வருத்துதலை விரும்பாதவன், தீய செயல்களைத் தான் பிறரிடம் ஒருபோதும் செய்யாதிருப்பானாக. 206

எத்தகைய பகைமை உடையவரும் தப்பிப் பிழைப்பர்; தீவினையாகிய பகையோ, ஒருவனை விடாமல் பின்பற்றிச் சென்று துன்பத்தைச் செய்யும். 207

தீய செயல்களைச் செய்தவர் கெடுதல் உறுதி என்பது, நிழல் தன்னை விடாமல் வந்து தன் காலடியிலேயே தங்கி இருத்தலைப் போன்றதாகும். 208

ஒருவன், தன்னைத் தான் விரும்பி வாழ்பவனானால், அவன் எத்தகையதொரு தீய செயல்களிலும் ஒருபோதுமே ஈடுபடாமல் இருப்பானாக! 209

ஒருவன், தவறான வழியிலே சென்று தீய செயல்களைச் செய்யாதிருப்பானானால், அவன் கேடற்றவன் ஆவான் என்று தெளிவாக அறியலாம். 210

*தீவினையார் அஞ்சார் விழுமியார் அஞ்சுவர்*
*தீவினை என்னும் செருக்கு.* 201

*தீயவை தீய பயத்தலான் தீயவை*
*தீயினும் அஞ்சப் படும்.* 202

*அறிவினுள் எல்லாம் தலையென்ப தீய*
*செறுவார்க்கும் செய்யா விடல்.* 203

*மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்*
*அறஞ்சூழும் சூழ்ந்தவன் கேடு.* 204

*இலன்என்று தீயவை செய்யற்க செய்யின்*
*இலன்ஆகும் மற்றும் பெயர்த்து.* 205

*தீப்பால தான்பிறர்கண் செய்யற்க நோய்ப்பால*
*தன்னை அடல்வேண்டா தான்.* 206

*எனைப்பகை உற்றாரும் உய்வர் வினைப்பகை*
*வீயாது பின்சென்று அடும்.* 207

*தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை*
*வீயாது அடிஉறைந்து அற்று.* 208

*தன்னைத்தான் காதலன் ஆயின் எனைத்தொன்றும்*
*துன்னற்க தீவினைப் பால்.* 209

*அருங்கேடன் என்பது அறிக மருங்கோடித்*
*தீவினை செய்யான் எனின்.* 210

மழைக்கு இவ்வுலகம் என்ன கைம்மாறு செய்யக்கூடும்? உலக நன்மையைக் கருதிச் சான்றோர் செய்யும் கடமைகளும் அவ்வாறே, கைம்மாறு விரும்பாதவைகளே! 211

தன் முயற்சியினாலே ஒருவன் சேர்த்த பொருள் எல்லாம், தக்கவர்களுக்கு உதவி செய்வதற்காகவே தன்னிடம் சேர்ந்தது என்று எண்ணல் வேண்டும். 212

ஒப்புரவைப்போலப் பலருக்கும் நன்மையான வேறொரு பண்பை இவ்வுலகத்திலும், தேவர்களின் உலகத்திலும் பெறுவது அருமை ஆகும். 213

'எவ்வுயிரும் ஒத்த தன்மையானது' என்று அறிந்து உதவி செய்து வாழ்பவனே உயிர் வாழ்கின்றவன்; ஒப்புரவற்ற மற்றவன், செத்தவருள் வைத்துக் கருதப்படுவான். 214

உலகினர் எல்லாரும் விரும்புமாறு, உதவி செய்து வாழும் பேரறிவாளனுடைய செல்வமானது, ஊருணியிலே நீர் நிரம்பினாற்போலப் பலருக்கும் பயன்படுவதாகும் 215

செல்வம் நல்ல பண்பு உடையவனிடம் சென்று சேர்தலானது, ஊருக்குள்ளே பழமரம் பழுத்திருப்பதுபோலப் பலருக்கும் பயன் தருவதாகும். 216

செல்வமானது பெருந்தகுதி உடையவனிடம் சேர்தல், பிணிதீர்க்கும் மருந்தாகிப் பயன்தரத் தவறாத மருந்துமரம் போல எப்போதும் பயன் தருவதாகும். 217

ஒப்புரவு செய்தலாகிய கடமையை அறிந்த அறிவாளர்கள், அதற்கேற்ற பொருள்வசதி இல்லாத காலத்திலும் முடிந்தவரை உதவத் தளர மாட்டார்கள். 218

ஒப்புரவாகிய நல்ல பண்பை உடையவன் பொருளற்று வறுமை உடையவனாதல், செய்யத் தகுந்த உதவிகளைச் செய்யவியலாது வருந்துதலே ஆகும். 219

ஒப்புரவினாலே கேடு வரும் என்றால், அந்தக் கேடானது தன்னை விற்றாவது ஒருவன் பெறுவதற்குத் தகுந்த சிறப்பை உடையதாகும். 220

கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்டு
என்ஆற்றும் கொல்லோ உலகு. 211

தாளாற்றித் தந்த பொருள்எல்லாம் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு. 212

புத்தேள் உலகத்தும் ஈண்டும் பெறலரிதே
ஒப்புரவின் நல்ல பிற. 213

ஒத்தது அறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும். 214

ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு. 215

பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயனுடை யான்கண் படின். 216

மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்
பெருந்தகை யான்கண் படின். 217

இடனில் பருவத்தும் ஒப்புரவிற்கு ஒல்கார்
கடனறி காட்சி யவர். 218

நயனுடை யான் நல்கூர்ந்தான் ஆதல் செயும்நீர
செய்யாது அமைகலா ஆறு. 219

ஒப்புரவி னால்வரும் கேடெனின் அஃதொருவன்
விற்றுக்கோள் தக்கது உடைத்து. 220

வறுமையானவர்க்கு ஒரு பொருளைத் தந்து உதவுவதே ஈகை; பிறருக்குத் தருவது எல்லாம் எதிர்ப்பயனை எதிர்பார்த்துத் தருவது ஆகும். 221

'நல்ல அறச்செயலுக்கே' என்றாலும், பிறரிடம் இரந்து பெறுவது தீமையே; மேலுலகம் இல்லையானாலும் பிறருக்குக் கொடுத்து உதவுதலே நன்மையானது. 222

ஒருவன் வந்து, 'நான் யாதும் இல்லாதவன்' என்று தன் துன்பத்தைச் சொல்லும் முன்பாகவே, அவனுக்கு உதவும் தன்மை உயர்ந்த குடிப்பிறப்பாளனிடம் உண்டு. 223

உதவியை நாடிவந்து இரந்தவருடைய மகிழ்ச்சியான முகத்தைக் காணும் வரைக்கும், இரந்து கேட்கப்படுதலும் ஈகையாளனுக்குத் துன்பம் தருவதேயாகும். 224

பசியைப் பொறுத்துக் கொள்பவரது ஆற்றலே சிறந்த ஆற்றலாகும்; அதுவும், அப் பசி நோயை உணவளித்து மாற்றுவாரின் ஈகைக்குப் பிற்பட்டதே ஆகும். 225

எதுவுமே இல்லாத ஏழையரின் கொடிய பசிநோயைப் போக்க வேண்டும்; அதுதான் பொருள்பெற்றவன் தன் பொருளைச் சேமித்து வைக்கும் இடமும் ஆகும். 226

பலரோடும் பகுத்து உண்ணுகின்ற பழக்கம் உடைய கொடையாளனைப் 'பசி' என்கின்ற தீய நோயானது சென்று தீண்டுதல் என்பதே அருமையாகும். 227

தாம் சேர்த்துள்ள செல்வத்தைக் காப்பாற்றி வைத்துப் பின் இழந்துவிடும் கல்நெஞ்சர்கள், பிறருக்குக் கொடுத்து மகிழும் இன்பத்தை அறியமாட்டார்களோ? 228

தாம் முயன்று தேடி நிரப்பி வைத்துள்ளதைத் தாமே தனியாக உண்டு மகிழ்வது என்பது, வறுமையால் பிறரிடம் சென்று இரத்தலைவிடத் துன்பம் தருவதாகும். 229

சாதலைக் காட்டிலும் துன்பமானது யாதுமே இல்லை; பிறருக்குக் கொடுத்து உதவ நினையாத கடைப்பட்டவனைப் பொறுத்த மட்டில் அப்படிச் சாதலும் இனியதே ஆகும் 230

வறியார்க்குஒன்று ஈவதே ஈகைமற் றெல்லாம்
குறியெதிர்ப்பை நீர துடைத்து. 221

நல்லாறு எனினும் கொளல்தீது மேல்உலகம்
இல்லெனினும் ஈதலே நன்று. 222

இலன்என்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலன்உடையான் கண்ணே உள. 223

இன்னாது இரக்கப் படுதல் இரந்தவர்
இன்முகம் காணும் அளவு. 224

ஆற்றுவார் ஆற்றல் பசியாற்றல் அப்பசியை
மாற்றுவார் ஆற்றலின் பின். 225

அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி. 226

பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னும்
தீப்பிணி தீண்டல் அரிது. 227

ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர். 228

இரத்தலின் இன்னாது மன்ற நிரப்பிய
தாமே தமியர் உணல். 229

சாதலின் இன்னாதது இல்லை இனிததூஉம்
ஈதல் இயையாக் கடை. 230

உள்ளதைப் பலருக்கும் பகுத்துக் கொடுத்துப் புகழோடு வாழவேண்டும்; அப்படிப்பட்ட வாழ்வு அல்லாமல் 'உயிருக்கு ஊதியம்' என்பது வேறு யாதும் இல்லை. 231

புகழ்ச்சியாகப் பேசுகிறவர் பேசுகின்றவற்றுள் எல்லாம், இரப்பவர்க்கு ஒன்றைக் கொடுத்து உதவுகின்றவரின்மேல் நிற்கின்ற புகழே எப்போதும் நிலையானது. 232

உயர்ந்த புகழ் அல்லாமல், உலகத்திலே ஒப்பற்ற ஒரு பொருளாக அழிவில்லாமல் நிலைத்து நிற்கக்கூடியது யாதுமே இல்லை. 233

உலகத்தின் எல்லைவரை பரவிநிற்கும் புகழுக்குரிய செயலை ஒருவன் செய்தால், வானுலகமும் தேவரைப் போற்றாது; அப் புகழாளனையே விரும்பிப் போற்றும். 234

புகழால் மேன்மை பெறக்கூடிய கேடும், செத்தும் புகழால் வாழ்ந்திருக்கும் சாவும், அறிவிற்சிறந்தோருக்கு அல்லாமல், பிறருக்கு ஒருபோதுமே கிடையாது. 235

உலகத்தார் முன்பாக ஒருவன் தோன்றினால் புகழோடுதான் தோன்ற வேண்டும்; புகழ் இல்லாதவர் தோன்றுவதைவிடத் தோன்றாமற்போவதே நல்லது. 236

தமக்குப் புகழ் உண்டாகும்படி வாழாதவர்கள், தம்மை நொந்துகொள்ளாமல், தம்மை இகழ்கின்ற உலகத்தாரை நொந்துகொள்வது எதற்காகவோ? 237

தமக்குப் பின்னரும் எஞ்சிநிற்கும் புகழைப் பெறாமல் விட்டு விட்டால், அதுவே உலகத்தார்க்கு எல்லாம் பெரிய வசையாகும் என்பார்கள். 238

புகழ் இல்லாதவனுடைய உடம்பைத் தாங்கிக் கொண்டிருந்த பூமியுங்கூட, வசையில்லாத வளமான பயனைத் தருவதில் குறைபாடு அடையும். 239

வசை இல்லாமல் வாழ்கின்றவரே முறையாக வாழ்பவர் ஆவர்; புகழ் இல்லாமல் வாழ்கின்றவரே உயிரோடிருந்தும் உயிர் வாழாதவர் ஆவர். 240

ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
ஊதியம் இல்லை உயிர்க்கு. 231

உரைப்பார் உரைப்பவை எல்லாம் இரப்பார்க்குஒன்று
ஈவார்மேல் நிற்கும் புகழ். 232

ஒன்றா உலகத்து உயர்ந்த புகழல்லால்
பொன்றாது நிற்பதொன்று இல். 233

நிலவரை நீள்புகழ் ஆற்றின் புலவரைப்
போற்றாது புத்தேள் உலகு. 234

நத்தம்போற் கேடும் உளதாகும் சாக்காடும்
வித்தகர்க்கு அல்லால் அரிது. 235

தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று. 236

புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை
இகழ்வாரை நோவது எவன். 237

வசையென்ப வையத்தார்க்கு எல்லாம் இசைஎன்னும்
எச்சம் பெறாஅ விடின். 238

வசையிலா வண்பயன் குன்றும் இசையிலா
யாக்கை பொறுத்த நிலம். 239

வசையொழிய வாழ்வாரே வாழ்வார் இசையொழிய
வாழ்வாரே வாழா தவர். 240

அருளாகிய செல்வமே செல்வத்துள் எல்லாம் சிறந்த செல்வம்; பொருள்களாகிய பிற வகைச் செல்வங்கள் எல்லாம் இழிந்தவரிடத்திலும் உள்ளனவே! 241

நல்ல வழியினாலே ஆராய்ந்து அருளைச் செய்க; பல வழியாக ஆராய்ந்தாலும், அப்படி அருள்செய்தலே உயிருக்கு உறுதுணையாகும். 242

இருள் அடர்ந்திருக்கும் துன்ப உலகமாகிய நரகத்துக்குச் செல்லுதல், அருள்பொருந்திய நெஞ்சம் உடையவர்களுக்கு ஒருபோதுமே இல்லையாகும். 243

நிலைபெற்ற உலகத்தில் உள்ள உயிர்களைக் காத்து, அருள் செய்து வாழ்கின்றவர்களுக்குத் தம் உயிரைக் குறித்து அஞ்சுகின்ற தீவினைகள் இல்லை! 244

அருள் கொண்டவராக வாழ்பவர்களுக்கு எந்தத் துன்பமுமே இல்லை; காற்று உயிர் வழங்குதலால் வாழும் வளமான பெரிய உலகமே இதற்குச் சான்று. 245

அருள்தலிலே இருந்து விலகித் தீயவைகளைச் செய்து வாழ்கிறவர்களே, உறுதிப்பொருளை இழந்து தம் வாழ்க்கைக் குறிக்கோளையும் மறந்தவராவர். 246

பொருள் இல்லாதவர்களுக்கு இவ்வுலகிலே இன்பமான வாழ்க்கை இல்லாததுபோலவே, அருள் இல்லாதவர்களுக்கு மேலுலகத்து வாழ்வும் இல்லை யாகும். 247

பொருள் இழந்தவர்களும் ஒரு காலத்தில் பொருள் வளம் அடைவார்கள். அருள் இல்லாதவரோ அதை இழந்தால் வாழ்வை இழந்தவரே; மீண்டும் அடைதல் அரிது. 248

அருள் இல்லாதவன் செய்யும் தருமத்தை ஆராய்ந்தால், தெளிவில்லாதவன் மெய்ந்நூலிற் கூறப்பெற்ற உண்மைப் பொருளைக் கண்டாற் போன்றதே! 249

தன்னைவிட மெலிவானவர்மேல் பகைத்துச் செல்லும்போது, தன்னைவிட வலியவர் முன்பாகத் தான் அஞ்சி நிற்கும் நிலைமையை நினைவிற் கொள்ளவேண்டும். 250

அருட்செல்வம் செல்வத்துட் செல்வம்
பூரியார் கண்ணும் உள. [பொருட் செல்வம் 241

நல்லாற்றான் நாடி அருளாள்க பல்லாற்றான்
தேரினும் அஃதே துணை. 242

அருள்சேர்ந்த நெஞ்சினார்க்கு இல்லை இருள்சேர்ந்த
இன்னா உலகம் புகல். 243

மன்னுயிர் ஓம்பி அருளாள்வாற்கு இல்லென்ப
தன்னுயிர் அஞ்சும் வினை. 244

அல்லல் அருளாள்வார்க்கு இல்லை வளிவழங்கும்
மல்லன்மா ஞாலங் கரி. 245

பொருள்நீங்கிப் பொச்சாந்தார் என்பர் அருள்நீங்கி
அல்லவை செய்தொழுகு வார். 246

அருளில்லார்க்கு அவ்வுலகம் இல்லை பொருள்
இவ்வுலகம் இல்லாகி யாங்கு. [இல்லார்க்கு 247

பொருளற்றார் பூப்பர் ஒருகால் அருளற்றார்
அற்றார்மற் றாதல் அரிது. 248

தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றால் தேரின்
அருளாதான் செய்யும் அறம். 249

வலியார்முன் தன்னை நினைக்கதான் தன்னின்
மெலியார்மேல் செல்லும் இடத்து. 250

தன் சதையைப் பெருக்குவதற்குத் தான் பிறிதோர் உயிரின் தசையைத் தின்கின்றவன், எப்படி உயிர்களுக்கு எல்லாம் அருள் செய்பவனாக இருக்க முடியும்? 251

பொருள் உடையவராக இருக்கும் தகுதி அப்பொருளைக் காப்பாற்றாதவர்க்கு இல்லை; அவ்வாறே, அருள் உடை யவர் ஆகும் தகுதி ஊனைத் தின்பவர்க்கும் இல்லை. 252

ஒன்றன் உடலைச் சுவையாக உண்டவரது மனம், கொலைக் கருவியை ஏந்தினவரது நெஞ்சத்தைப்போலப் பிறவுயிருக்கு அருள் செய்தலைப் பற்றியே நினையாது. 253

கொல்லாமையே அருள் ஆகும்; ஓர் உயிரைக் கொல்லுதலோ அருளில்லாத தன்மை; அதன் ஊனைத் தின்னலோ சற்றும் முறையில்லாத செயல் ஆகும். 254

உயிர்களின் நிலைத்த வாழ்வு ஊனுண்ணாத இயல்பில்தான் உள்ளது; ஊன் உண்டால், நரகம் அவனை வெளியேவிட ஒருபோதும் தன்னுடைய கதவைத் திறவாது. 255

புலாலைத் தின்னும் பொருட்டாக உயிர்களை உலகத்தார் கொல்லாதிருந்தால், எவரும் விலைப்படுத்தும்பொருட்டாக உயிரைக் கொன்று ஊனைத் தரமாட்டார்கள். 256

புலால் பிறிதோர் உயிரின் புண் என்று உணர்பவர், அதனைத் தாம் பெற்றபோதும் உண்ணாமல் இருக்கும் நல்ல ஒழுக்கம் உடைய இயல்பினராதல் வேண்டும். 257

பிறிதோர் உயிரின் உடலிடத்திலிருந்து பிரிந்துவந்த ஊனை, குற்றத்திலிருந்து விடுபட்ட அறிவாளர்கள் ஒருபோதும் உண்ணவே மாட்டார்கள். 258

அவியைச் சொரிந்து ஆயிரம் வேள்விகளைச் செய்தலைக் காட்டிலும், ஒன்றன் உயிரைக் கொன்று, அதன் உடலைத் தின்னாமலிருத்தல் மிகவும் நன்மையானதாகும். 259

கொலை செய்யாமலும் புலால் உண்ணாமலும் வாழும் உயர்ந்த பண்பாளனை, எல்லா உயிர்களும் கைதொழுது தெய்வமாக நினைத்துப் போற்றும். 260

தன்ஊன் பெருக்கற்குத் தான்பிறிது ஊனுண்பான்
எங்ஙனம் ஆளும் அருள். 251

பொருளாட்சி போற்றாதார்க்கு இல்லை அருளாட்சி
ஆங்கில்லை ஊன்தின் பவர்க்கு. 252

படைகொண்டார் நெஞ்சம்போல் நன்றூக்காது
உடல்சுவை உண்டார் மனம். [ஒன்றன் 253

அருளல்லது யாதெனில் கொல்லாமை கோறல்
பொருளல்லது அவ்வூன் தினல். 254

உண்ணாமை உள்ளது உயிர்நிலை ஊனுண்ண
அண்ணாத்தல் செய்யாது அளறு. 255

தினல்பொருட்டால் கொல்லாது உலகெனின் யாரும்
விலைப்பொருட்டால் ஊன்தருவார் இல். 256

உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதுஒன்றன்
புண்அது உணர்வார்ப் பெறின். 257

செயிரின் தலைப்பிரிந்த காட்சியார் உண்ணார்
உயிரின் தலைப்பிரிந்த ஊன். 258

அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத்து உண்ணாமை நன்று. 259

கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிரும் தொழும். 260

தமக்கு வந்த துன்பத்தைப் பொறுத்தலும், பிறவுயிருக்குத் தாம் துன்பஞ் செய்யாமலிருத்தலும் ஆகிய அவ்வளவினதே தவத்திற்கு உள்ளதான வடிவம் ஆகும். 261

தவநெறிக்கு ஏற்ற மனவியல்பு கொண்டவர்க்கே தவமும் கைகூடும்; தவப்பயன் இல்லாதவர்கள் அதனைத் தாமும் மேற்கொள்வது வீணான முயற்சியே! 262

துறவியர்க்கு உணவு முதலாயின தந்து உதவுதலின் பொருட்டாகவே, இல்லறத்தார்கள் துறவுநெறியைத் தாம் மேற்கொள்ள மறந்தனர் போலும்! 263

பொருந்தாத பகைவரைத் தண்டித்தலும், தம்மை விரும்பும் அன்புடையவரை உயர்த்துதலும் தவ வாழ்வினால் மிகவும் எளிதாக வந்து கைகூடும். 264

வேண்டிய பயன்களை வேண்டியபடியே பெறுகின்றதனால், செய்வதற்குரிய தவம் இவ்விடத்திலேயே விரைவாகச் செய்யப்படுவதற்கு உரியதாகும். 265

தம் உயிருக்கு நன்மை செய்பவர் தவம் செய்பவரே யாவர்: மற்றையோர், ஆசைகளுக்கு உட்பட்டுத் தம் உயிருக்குத் தீமைகளைச் செய்பவர்களே ஆவர். 266

சுடச்சுட ஒளிவிடும் பொன்னே போல, துன்பம் சுட்டு வருத்த வருத்த, தவஞ்செய்பவருக்கும் உண்மையான அறிவுடைமை யானது மேன்மேலும் ஒளிபெற்று வரும். 267

'தான்' என்னும் செருக்கானது தன்னிடமிருந்து நீங்கிய தவ வலிமை பெற்றவனை, உலகத்தில் செறிந்துள்ள உயிர்கள் எல்லாம் தொழுது போற்றும். 268

தவநெறியாலே ஆத்ம வலிமையைப் பெற்ற மகான்களுக்குத் தம்மிடத்தே வருகின்ற கூற்றத்தையும் எதிராக நின்று வெற்றிகொள்வதற்கு முடியும். 269

உலகில் மெய்யறிவு அற்றவர்கள் பலராகியதன் காரணம், தவம் செய்பவர் சிலராகவும், தவம் செய்யாதவர் பலராகவும் இருப்பதுதான். 270

*உற்றநோய் நோன்றல் உயிர்க்குஉறுகண் செய்யாமை*
*அற்றே தவத்திற்கு உரு.* 261

*தவமும் தவமுடையார்க்கு ஆகும் அவம்அதனை*
*அஃதிலார் மேற்கொள் வது.* 262

*துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொல்*
*மற்றை யவர்கள் தவம்.* 263

*ஒன்னார்த் தெறலும் உவந்தாரை ஆக்கலும்*
*எண்ணின் தவத்தான் வரும்.* 264

*வேண்டிய வேண்டியாங்கு எய்தலால் செய்தவம்*
*ஈண்டு முயலப் படும்* 265

*தவம்செய்வார் தங்கருமம் செய்வார் மற்றல்லார்*
*அவம்செய்வார் ஆசையுட் பட்டு.* 266

*சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பம்*
*சுடச்சுட நோற்கிற் பவர்க்கு.* 267

*தன்னுயிர் தான்அறப் பெற்றானை ஏனைய*
*மன்னுயிர் எல்லாம் தொழும்.* 268

*கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்*
*ஆற்றல் தலைப்பட் டவர்க்கு.* 269

*இலர்பலர் ஆகிய காரணம் நோற்பார்*
*சிலர்பலர் நோலா தவர்.* 270

வஞ்சக மனத்தினனது பொய்யான நடத்தையைக் கண்டு, அவனுடம்பாக அமைந்து விளங்கும் ஐந்து பூதங்களும், தம்முள்ளே சிரித்துக்கொண்டிருக்கும். 271

தன் நெஞ்சம், தான் அறிந்து செய்யும் குற்றத்திலேயும் ஈடுபடுமானால், அத்தகையவனது வானளாவிய தவத்தோற்றமும் என்ன பயனைச் செய்யும்? 272

மனவலிமை இல்லாதவன் மேற்கொள்ளும் வலிய தவத்தோற்றம், பசு, புலியின் தோலைப் போர்த்துச் சென்று பயிரை மேய்ந்தாற் போன்றதாகும். 273

தவக் கோலத்திலே மறைந்துகொண்டு தீயசெயல்களைச் செய்தல், கொலைகுறித்த வேடன் புதரின்பின் மறைந்து நின்று, பறவைகளை வலைவீசிப் பிடிப்பது போன்றதாகும். 274

பற்றுகளை விட்டேம் என்பவரது பொய்யான தீய ஒழுக்கம், 'என்ன செய்தோம்?' என்று வருந்தும்படியான பலவகைத் துன்பங்களையும் தரும். 275

நெஞ்சிலே ஆசையை விடாதவர்களாய், வெளியே ஆசை அற்ற ஞானிகளைப் போலக் காட்டி மக்களை வஞ்சித்து வாழ்பவரினும் கொடியவர் எவருமே இலர்! 276

புறத்தோற்றத்திலே குன்றிமணியின் நிறம்போலச் செம்மையான தோற்றம் உடையவர் என்றாலும், உள்ளத்தில் குன்றிமணியின் மூக்குப்போலக் கரியவரும் உள்ளனர். 277

மனத்துள்ளே இருப்பது குற்றமாகவும், மாண்பு உடையவர் போல நீராடி, மறைவாக வாழ்வு நடத்தும் மாந்தர்களும் இந்த உலகிற் பலர் ஆவார். 278

நேரானாலும் அம்பு கொடுமை செய்வது; வளைவானாலும் யாழ்க்கோடு இன்னிசை தருவது; மனிதரையும் இப்படியே அவரவர் செயல்தன்மை நோக்கியே அறிதல் வேண்டும். 279

உலகம் பழித்த தீயசெயல்களை ஒழித்துவிட்டால் உயர்வுதானே வரும்; உயர்வுகருதி மயிரை மழித்துக் கொள்ளலும் நீள வளர்த்தலும் செய்ய வேண்டாம். 280

*வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்*
*ஐந்தும் அகத்தே நகும்.* 271

*வானுயர் தோற்றம் எவன்செய்யும் தன்நெஞ்சம்*
*தானறி குற்றப் படின்.* 272

*வலியில் நிலைமையான் வல்லுருவம் பெற்றம்*
*புலியின்தோல் போர்த்துமேய்ந் தற்று.* 273

*தவமறைந்து அல்லவை செய்தல் புதல்மறைந்து*
*வேட் டுவன் புள்சிமிழ்த் தற்று.* 274

*பற்றற்றேம் என்பார் படிற்றொழுக்கம் எற்றெற்*
*ஏதம் பலவும் தரும்.* [றென்று 275

*நெஞ்சின் துறவார் துறந்தார்போல் வஞ்சித்து*
*வாழ்வாரின் வன்கணார் இல்.* 276

*புறங்குன்றி கண்டனைய ரேனும் அகங்குன்றி*
*மூக்கிற் கரியார் உடைத்து.* 277

*மனத்தது மாசாக மாண்டார்நீர் ஆடி*
*மறைந்தொழுகும் மாந்தர் பலர்.* 278

*கணைகொடிது யாழ்கோடு செவ்விதுஆங்கு அன்ன*
*வினைபடு பாலாற் கொளல்.* 279

*மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்*
*பழித்தது ஒழித்து விடின்.* 280

உலகினரால் இகழப்படாமல் வாழ விரும்புகின்றவன் எத்தகைய பொருளையும் களவாடிக்கொள்ள நினையாதபடி தன் மனத்தை முதலில் காத்தல் வேண்டும். 281

'பிறன் பொருளைக் கள்ளமாகக் களவாடிக் கொள்வோம்' என்று ஒருவன், தன் உள்ளத்தால் நினைத்தாலும் அந்த நினைவுகூடத் தீமையானதே. 282

களவாலே வந்தடையும் செல்வமானது அளவுகடந்து பெருகுவதுபோலவே, எதிர்பாராமல், எல்லாம், வந்தது போல விரைந்து ஒழிந்தும் போய்விடும். 283

களவு செய்வதிலே உண்டாகும் முதிர்ந்த விருப்பமானது, அதனால் வரும் விளைவுகளின்போது தீராத துன்பத்தைத் தருவதாகவே விளங்கும். 284

பொருள் தேடுதலையே நினைத்துப் பிறர் சோர்ந்திருக்கும் காலத்தைப் பார்க்கும் கள்வரிடத்தே, அருளைக் கருதி அன்புடையவராதல், சான்றோரிடமும் இல்லை. 285

களவுநெறியின்கண் மிக முதிர்ந்த ஆசையுடையவர்கள் எல்லாரும், தம் வருவாயின் அளவுக்குத் தகுந்தபடி ஒழுக்கத்தோடு வாழ இயலாதவர்களே. 286

'களவு' எனப்படும் இருள்படர்ந்த அறிவாண்மையானது, அளவறிந்து வாழும் ஆற்றலை விரும்பிய நன்மக்களிடத்திலே ஒருபோதும் இல்லையாகும். 287

அளவறிந்து வாழ்தலை அறிந்தவரின் நெஞ்சத்திலே 'அறம்' நிற்பதுபோல, களவுத்தொழிலை அறிந்தவரின் நெஞ்சிலே 'வஞ்சகம்' எப்போதும் நிலைத்திருக்கும். 288

களவு அல்லாத, பிற நல்ல முயற்சிகளைச் செய்து பொருள் தேடி வாழ்தலைத் தெளியாதவர்கள், அளவுகடந்த செலவுகளைச் செய்து அக்களவாலேயே அழிவர். 289

களவு செய்வார்க்கு, உலகில் உயிர் நிலைக்கும் காலமும் தவறிப் போகும்; களவு செய்யாதவர்க்குத் தேவருலகத்து வாழ்வும் தவறிப் போகாது. 290

எள்ளாமை வேண்டுவான் என்பான் எனைத்தொன்றும்
கள்ளாமை காக்கதன் நெஞ்சு. 281

உள்ளத்தால் உள்ளலும் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தாற் கள்வேம் எனல். 282

களவினால் ஆகிய ஆக்கம் அளவிறந்து
ஆவது போலக் கெடும். 283

களவின்கண் கன்றிய காதல் விளைவின்கண்
வீயா விழுமம் தரும். 284

அருள்கருதி அன்புடை .ய ராதல் பொருள்கருதிப்
பொச்சாப்புப் பார்ப்பார்கண் இல். 285

அளவின்கண் நின்றொழுகல் ஆற்றார் களவின்கண்
கன்றிய காத லவர். 286

களவென்னும் காரறி வாண்மை அளவென்னும்
ஆற்றல் புரிந்தார்கண் இல். 287

அளவறிந்தார் நெஞ்சத்து அறம்போல நிற்கும்
களவறிந்தார் நெஞ்சில் கரவு. 288

அளவல்ல செய்தாங்கே வீவர் களவல்ல
மற்றைய தேற்றா தவர். 289

கள்வார்க்குத் தள்ளும் உயிர்நிலை கள்ளார்க்குத்
தள்ளாது புத்தேள் உலகு. 290

'வாய்மை' என்று சொல்லப்படுவது யாது என்றால், அது பிறருக்குத் தீமை இல்லாதபடி யாதொரு சொல்லையும் எப்போதும் சொல்லுதல் ஆகும். 291

குற்றமே இல்லாத நன்மையைத் தருவது என்றால், பொய்யான சொற்களும்கூட வாய்மையின் இடத்தில் வைத்துச் சிறப்பாகக் கருதத் தகுந்தவை ஆகும். 292

ஒருவன், தன் நெஞ்சம் அறிவதாகிய ஒன்றைப் பற்றிப் பொய்த்துப் பேசாதிருப்பானாக; அப்படி பொய்த்தபின்னர், அவன் நெஞ்சமே அவனைச் சுடும். 293

உள்ளத்தால் பொய்யாது நடந்து வருவானாயின், அவன், உலகத்தார் உள்ளத்துள் எல்லாம் இருப்பவன் ஆகும் சிறந்த உயர்வைப் பெறுவான். 294

மனத்தோடு பொருந்திய வாய்மையையே ஒருவன் சொல்லி வருவானானால், அவன், தவத்தோடு தானமும் செய்பவரினும் மிகவும் சிறந்தவன் ஆவான். 295

பொய்யாமை போலப் புகழ் தருவது ஏதும் இல்லை; அதில் தளராமல் உறுதியாயிருப்பது ஒருவனுக்கு எல்லா அறத்தின் சிறப்பையும் தரும் 296

பொய்யாமை என்னும் அறத்தையே பொய்யாகாது தொடர்ந்து செய்துவந்தால், பிற அறச்செயல்கள் ஏதும் செய்யாத போதிலும்கூட, அது நன்மையைத் தரும். 297

புறவுடலின் தூய்மை நீராலே ஏற்படும்; உள்ளத்தின் தூய்மையானது, ஒருவன் வாய்திறந்து சொல்லும் அவனது வாய்மையாலே அடையப்படும். 298

புறவிருளைப் போக்கும் எல்லா விளக்கும் சிறந்த விளக்கு ஆகாது; சான்றோர்க்குப் பொய்யாமையாகிய விளக்கே அவற்றினும் சிறந்த விளக்காகத் தோன்றும். 299

யாம் மெய்ப்பொருளாக அறிந்தவற்றுள் எல்லாம், வாய்மையினும் எத்தன்மையாலும் சிறப்பான பொருள் இந்த உலகத்திலே வேறு எதுவும் இல்லை. 300

வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
தீமை இலாத சொலல். 291

பொய்ம்மையும் வாய்மை இடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கும் எனின். 292

தன்நெஞ்சு அறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்நெஞ்சே தன்னைச் சுடும். 293

உள்ளத்தாற் பொய்யாது ஒழுகின் உலகத்தார்
உள்ளத்துள் எல்லாம் உளன். 294

மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு
தானஞ்செய் வாரின் தலை. 295

பொய்யாமை அன்ன புகழில்லை எய்யாமை
எல்லா அறமும் தரும். 296

பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று. 297

புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை
வாய்மையால் காணப் படும். 298

எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு. 299

யாமெய்யாக் கண்ட வற்றுள் இல்லை எனைத்
வாய்மையின் நல்ல பிற. [தொன்றும் 300

தனக்குச் செல்லக்கூடிய இடத்திலும் சினத்தைக்காப்பவனே காப்பவன்; செல்லாத இடத்திலே காத்தால் என்ன? காவாதிருந்தால் என்ன? 301

செல்லாத இடத்திலே சினம் கொள்வதனால் தீமை வரும்; செல்லும் இடத்திலும் அதனிலும் தீமையானது வேறு ஏதும் இல்லை. 302

எவரிடத்திலும் சினங்கொள்ளாமல், அவர் தீச்செயலை மறத்தலே நல்லது; தீமையான விளைவுகள் அச்சினத்தினாலே வந்து சேரும். 303

முகமலர்ச்சியான நகையையும், அகமலர்ச்சியான உவகையையும் கொல்லும் சினத்தினும், உயிருக்குப் பகையானவை வேறு உளவோ? 304

ஒருவன் தன்னைக் காக்க விரும்பினால் சினம் எழாமல் காத்துக் கொள்க; காவாதிருந்தால், அச் சினமானது அவனையே முடிவில் கொன்றுவிடும். 305

சேர்ந்தவரைக் கொல்லும் இயல்புடைய சினமானது, 'தன் இனத்தார்' என்னும் பாதுகாவலான தெப்பத்தையும் சுட்டு எரித்துவிடும். 306

சினத்தையே செல்வம் என்று நினைத்து மேற்கொண்டவன் அதனாற் கெடுதல், நிலத்திலே அறைந்தவனின் கையானது நோவிலிருந்து தப்பாததுபோல் உறுதியாகும். 307

பலமாகக் கொழுந்துவிட்டு எரியும் நெருப்பில் வீழ்ந்தாற் போன்ற துன்பத்தை ஒருவன் செய்தபோதும், கூடுமானால், அவன்பால் வெகுளாமையே நன்று. 308

ஒருவன் உள்ளத்தாலும் சினத்தைப்பற்றி நினையாதவன் என்றால், அப்படிப்பட்டவன் நினைத்தது எல்லாம் உடனே அவனை வந்தடையும். 309

அளவுகடந்து சினத்திலே ஈடுபட்டவர் இறந்தவரைப் போன்றவர்; சினத்தைக் கைவிட்டவரோ முற்றும் துறந்த மேலோருக்குச் சமமாவர். 310

*செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பான் அல்லிடத்துக்*
*காக்கின்என் காவாக்கால் என்.* 301

*செல்லா இடத்துச் சினந்தீது செல்இடத்தும்*
*இல்அதனின் தீய பிற.* 302

*மறத்தல் வெகுளியை யார்மாட்டும் தீய*
*பிறத்தல் அதனான் வரும்.* 303

*நகையும் உவகையும் கொல்லும் சினத்திற்*
*பகையும் உளவோ பிற.* 304

*தன்னைத்தான் காக்கின் சினங்காக்க காவாக்கால்*
*தன்னையே கொல்லும் சினம்.* 305

*சினம்என்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி இனமென்னும்*
*ஏமப் புணையைச் சுடும்.* 306

*சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு*
*நிலத்தறைந்தான் கைபிழையா தற்று.* 307

*இணர்எரி தோய்வன்ன இன்னா செயினும்*
*புணரின் வெகுளாமை நன்று.* 308

*உள்ளிய தெல்லாம் உடனெய்தும் உள்ளத்தால்*
*உள்ளான் வெகுளி எனின்.* 309

*இறந்தார் இறந்தார் அனையர் சினத்தைத்*
*துறந்தார் துறந்தார் துணை.* 310

சிறப்பைத் தருகின்ற பெருஞ்செல்வமே பெற்றாலும், பிறருக்குத் துன்பம் செய்யாதிருத்தலே குற்றமற்ற அறிவாளரின் கொள்கையாகும். 311

கறுவுகொண்டு ஒருவன் துன்பம் செய்தபோதும், திரும்ப அவனுக்குத் துன்பம் தருவனவற்றைச் செய்யாதிருத்தலே குற்றமற்ற அறிவாளரின் கொள்கை 312

ஏதும் செய்யாத போதிலேயே தீமை செய்தவருக்கும், பதிலுக்குத் துன்பத்தைச் செய்தால், அது பின்னர் மீளாத் துயரத்தையே தரும். 313

துன்பம் செய்தவரைத் தண்டித்தல், அவர், தம் செய்கையை நினைத்து வெட்கப்படும்படியாக அவருக்கு நன்மைகளைச் செய்துவிடுதல் ஆகும். 314

பிறிதோர் உயிரின் துன்பத்தைத் தன் துன்பமேபோலக் கொள்ளாத இடத்தில், அறிவினாலே ஆகும் பயன்தான் ஏதும் உளதாகுமோ? 315

துன்பம் தருவன எனத் தான் உணர்ந்த ஒரு செயலைப் பிறரிடத்தே செய்தலை ஒருவன் எப்போதும் செய்யாமல் தவிர்க்க வேண்டும். 316

எவ்வளவினது ஆனாலும், எக்காலத்தில் ஆனாலும், எவருக்கும், மனத்தினாலும் பொருந்தாத துன்பங்களைச் செய்யாமலிருத்தலே சிறப்பு ஆகும். 317

தன் உயிருக்குத் துன்பமாதலைத் தான் அறிந்து வருந்தும் ஒருவன், மற்றைய உயிர்களுக்குத் துன்பத்தைச் செய்தல் என்பது, என்ன அறியாமையாலோ? 318

முற்பகலில் பிறருக்குத் துன்பத்தைச் செய்தால், பிற்பகலில் தமக்குத் துன்பங்கள் தாமாகவே வந்து சேரும் என்பதை அறிதல் வேண்டும். 319

துன்பம் தருவன எல்லாம் துன்பம் செய்தவரின்மேல் சென்று சேர்வன; ஆகவே, துன்பப்படாமலிருப்பதை விரும்புகிறவர் பிறருக்குத் துன்பம் செய்யாதிருப்பர். 320

சிறப்புஈனும் செல்வம் பெறினும் பிறர்க்குஇன்னா
செய்யாமை மாசற்றார் கோள். 311

கறுத்தின்னா செய்தவக் கண்ணும் மறுத்தின்னா
செய்யாமை மாசற்றார் கோள். 312

செய்யாமற் செற்றார்க்கும் இன்னாத செய்தபின்
உய்யா விழுமம் தரும். 313

இன்னாசெய் தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயம் செய்து விடல். 314

அறிவினால் ஆகுவது உண்டோ பிறிதின்நோய்
தந்நோய்போல் போற்றாக் கடை. 315

இன்னா எனத்தான் உணர்ந்தவை துன்னாமை
வேண்டும் பிறன்கண் செயல். 316

எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானாம்
மாணாசெய் யாமை தலை. 317

தன்னுயிர்க் கின்னாமை தானறிவான் என்கொலோ
மன்னுயிர்க் கின்னா செயல். 318

பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா
பிற்பகல் தாமே வரும். 319

நோயெல்லாம் நோய்செய்தார் மேலவாம் நோய்செய்
நோயின்மை வேண்டு பவர். [யார் 320

அறச்செயல் என்பது யாதென்றால் எந்த ஓர் உயிரையும் கொல்லாத செயலே; கொல்லும் செயல் பிற தீவினைகளை எல்லாம் கொண்டு வரும். 321

உள்ள உணவையும் பலரோடும் பங்கிட்டுத் தான் உண்ணும் இயல்பினை மேற்கொள்ளுதல், அறநூலோர் தொகுத்துக் கூறிய அறங்களுள் எல்லாம் மிகச் சிறந்தது! 322

ஒப்பற்ற நல்லறம் என்பது எந்தவுயிரையும் கொல்லாமல் இருத்தலே ஆகும்; அதற்கு அடுத்ததாக நல்லறம் என்று கருதப்படுவது பொய்யாமை ஆகும். 323

நல்ல ஒழுக்கம் எனப்படுவது யாதென்றால், எந்தவொரு உயிரையும் கொலை செய்யாமலிருத்தல் என்பதைக் கருதும் வாழ்க்கை நெறியே ஆகும். 324

வாழ்வின் நிலையாமை கண்டு பற்றுவிட்ட வருள் எல்லாம், கொலைப் பாவத்திற்குப் பயந்து, கொல்லாமை நெறியைப் போற்றுபவரே சிறந்தவர்கள். 325

கொல்லாமை ஆகிய அறத்தையே மேற்கொண்டு நடக்கிறவனுடைய வாழ்நாளின்மேல், உயிரைத் தின்னும் கூற்றமும் ஒருபோதும் செல்லாது. 326

தன்னுடைய உயிரையே விட்டுவிட நேர்வதானாலும்கூட, தான் மற்றொன்றினது இனிய உயிரைப் போக்கும் பாவச் செயலை எவரும் செய்யக்கூடாது. 327

கொலை செய்வதனாலே நன்மையாக வந்து சேரும் ஆக்கம் பெரிதானாலும், சான்றோருக்குக் கொன்றுவரும் ஆக்கம் இழிவானதே யாகும். 328

கொலையையே செய்தொழிலாக உடைய மக்கள், அதன் இழிவான தன்மையைத் தெரிந்தவரிடத்தில் தாழ்ந்த செயலினராகவே தோன்றுவர். 309

நோய் மிகுந்த உடலோடு உயிரும் போகாமல் வருந்தித் துன்புறுகின்ற வாழ்வை உடையவர், பிற உயிர்களை அவற்றின் உடலிலிருந்து போக்கியவரேயாவர். 330

அறவினை யாதெனில் கொல்லாமை கோறல்
பிறவினை எல்லாம் தரும். 321

பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை. 322

ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று. 323

நல்லாறு எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
கொல்லாமை சூழும் நெறி. 324

நிலையஞ்சி நீத்தாருள் எல்லாம் கொலையஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் தலை. 325

கொல்லாமை மேற்கொண்டு ஒழுகுவான் வாழ்நாள்மேற்
செல்லாது உயிருண்ணும் கூற்று. 326

தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறிது
இன்னுயிர் நீக்கும் வினை. 327

நன்றாகும் ஆக்கம் பெரிதெனினும் சான்றோர்க்குக்
கொன்றாகும் ஆக்கம் கடை 328

கொலைவினைய ராகிய மாக்கள் புலைவினையர்
புன்மை தெரிவார் அகத்து. 329

உயிருடம்பின் நீக்கியார் என்ப செயிருடம்பிற்
செல்லாத்தீ வாழ்க்கை யவர். 330

நிலைத்து நில்லாத பொருள்களை எல்லாம் நிலையானவை என்று எண்ணி மயங்குகின்ற இழிவான அறிவுடைமை மிகவும் தாழ்ந்ததாகும். 331

பெரும்பொருள் வந்தடைதல் கூத்தாடுமிடத்திலே கூட்டம் வந்து கூடுவதைப் போன்றதாகும்; அது போய்விடுவதும் அக்கூட்டம் கலைவதைப் போன்றதே. 332

நிலைத்து இராத தன்மையுடையது செல்வம்; அதனை ஒருவன் அடைந்தால், அது நிலைப்பதற்கான அறமான செயல்களை அப்போதே செய்யவேண்டும். 333

வாழ்வை ஆராய்ந்து உண்மை உணர்பவரைப் பெற்றால், 'நாள்' என்பது ஒரு கால அளவுபோலத் தன்னைக் காட்டி உயிரை அறுக்கும் வாள் என்பது விளங்கும். 334

நாக்கு உள்ளே இழுத்துக்கொண்டு விக்குள் மேலாக எழுந்து வருவதற்கு முன்பாகவே, நல்ல செயல்களை விரைவாகச் செய்ய வேண்டும். 335

'நேற்று உள்ளவனாக இருந்த ஒருவன், இன்று இல்லை' என்னும் நிலையாமையாகிய பெருமையை உடையதுதான் இந்த உலகம் ஆகும். 336

அடுத்த பொழுதில் உயிர் வாழும் வாழாது என்பதைத் தெரியாதவர்கள் நினைப்பது, கோடியும் அல்ல; அதன்மேலும் அளவற்ற பலவாகும். 337

தான் இருந்த கூடானது தனித்துக் கிடக்கவும், பறவை பறந்து வெளியேறிப் போய்விட்டது போன்றதுதான் உடலோடு உயிருக்குள்ள தொடர்பு. 338

ஒருவன் செயலில்லாமல் தூங்குவதைப்போன்றது சாக்காடு; அவன் மீண்டும் உறக்கத்திலிருந்து விழித்துக் கொள்வது போல்வதே பிறப்பு. 339

உடலினுள் ஒரு மூலையிலே குடியிருந்த உயிருக்கு, நிலையாக நுழைந்து தங்கியிருப்பதற்குரிய தகுதிவாய்ந்த ஓர் இடம் அமையவில்லை போலும்! 340

நில்லாத வற்றை நிலையின என்றுணரும்
புல்லறி வாண்மை கடை. 331

கூத்தாட்டு அவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கும் அதுவிளிந் தற்று. 332

அற்கா இயல்பிற்றுச் செல்வம் அதுபெற்றால்
அற்குப ஆங்கே செயல். 333

நாளென ஒன்றுபோற் காட்டி உயிரீரும்
வாள்அது உணர்வார்ப் பெறின். 334

நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை
மேற்சென்று செய்யப் படும். 335

நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்
பெருமை உடைத்திவ் வுலகு. 336

ஒருபொழுதும் வாழ்வது அறியார் கருதுப
கோடியும் அல்ல பல. 337

குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
உடம்போடு உயிரிடை நட்பு. 338

உறங்குவது போலும் சாக்காடு உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு. 339

புக்கில் அமைந்தின்று கொல்லோ உடம்பினுள்
துச்சில் இருந்த உயிர்க்கு. 340

எந்த எந்தப் பொருளில் ஆசைகொள்வதிலிருந்து ஒருவன் விடுபட்டவன் ஆகின்றானோ, அந்த அந்தப் பொருளைக் குறித்து அவன் துன்பம் அடைவதில்லை. 341

துன்பம் இல்லாத வாழ்வை விரும்பினால், ஆசைகளை எல்லாம் விட்டுவிட வேண்டும்; அப்படி விட்டு விட்டபின் இவ்வுலகில் அடையக்கூடிய இன்பம் பலவாகும். 342

ஐந்து வகையான புலன்களின் ஆசைகளையும் அடக்கி வெற்றி கொள்ள வேண்டும்; அதற்கு வேண்டிய பொருளாசைகளை ஒருசேர விட்டுவிட வேண்டும். 343

ஒரு பொருளின்மீதும் ஆசை இல்லாததே தவநெறியின் இயல்பாகும்; ஆசை உள்ளதானால் மீளவும் உலகபோகத்தில் மயங்கியதே யாகும். 344

பிறவியாகிய துன்பத்தை ஒழிக்க முயல்பவருக்கு உடம்பும் மிகையான ஒரு பொருள்; ஆகவே, மற்றயை ஆசைத் தொடர்புகள் எல்லாம் எதற்காகவோ? 345

உடலை 'யான்' எனவும், பொருள்களை 'எனது' எனவும் நினைக்கின்ற மயக்கத்தை அறுத்துவிடுகிறவன், வானோர்க்கும் உயர்ந்த உலகம் சேர்வான். 346

பொருள்கள்மீதுள்ள பற்றுகளையே இறுகப் பற்றிக்கொண்டு ஆசையை விடாதவர்களுக்குத் துன்பங்களும் பற்றிக் கொண்டு விடாமல் இருக்கும். 347

அனைத்தையும் துறந்தவர்களே மேலான நிலையினர் ஆவர்; மற்றையோர் மயங்கி ஆசை வலையில் அகப்பட்டுக்கொண்டவர்களே ஆவர். 348

பற்றுகள் அறுந்துபோன அப்பொழுதே பிறப்பாகிய பந்தமும் அறுந்து போகும்; மேலும், உலக நிலையாமையும் அப்போது காணப்படும். 349

பற்று இல்லாதவனான இறைவனது பற்றினை மட்டுமே பற்றுக; உலகப் பற்றுகளை விடுவதற்காக, அதனையே எப்போதும் விடாமல் பற்றிக் கொள்க. 350

யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன். 341

வேண்டின்உண் டாகத் துறக்க துறந்தபின்
ஈண்டுஇயற் பால பல. 342

அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய எல்லாம் ஒருங்கு. 343

இயல்பாகும் நோன்பிற்கொன் றின்மை உடைமை
மயலாகும் மற்றும் பெயர்த்து. 344

மற்றும் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்கல்
உற்றார்க்கு உடம்பும் மிகை. 345

யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்கு
உயர்ந்த உலகம் புகும். 346

பற்றி விடாஅ இடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு. 347

தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர். 348

பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கும் மற்று
நிலையாமை காணப் படும். 349

பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு. 350

உண்மையில் பொருளற்றவைகளைப் பொருளாகக் கருதி உணர்கின்ற மயக்கத்தினாலேயே, சிறப்பற்ற பலவகைப் பிறப்புக்களும் உண்டாகின்றன. 351

மயக்கம் நீங்கிய குற்றமற்ற மெய்யறிவு உடையவர்களுக்கு, அவ்வுணர்வு, இருளிலிருந்து விடுபட்டு அடைகின்றதான இன்பத்தையும் கொடுக்கும். 352

ஐயத்திலிருந்து நீங்கித் தெளிவுபெற்ற மெய்யறிவாளருக்கு, இவ் வையகத்தினும், வானம் மிகவும் அண்மையானதும் உறுதியானதும் ஆகும். 353

மெய்யுணர்வு இல்லாதவர்களுக்கு, ஐம்புலன்களின் உணர்வுகளை எல்லாம் முறைப்படியே பெற்றுள்ளபோதிலும் பயன் யாதும் இல்லை. 354

எப்பொருள் எத்தகைய தன்மையோடு தோன்றினாலும், மயங்காமல், அப் பொருளின் மெய்யான இயல்பைத் தெளிவாகக் காண்பதே அறிவாகும். 355

கற்க வேண்டிய கல்வியைக் கற்று, மெய்ப்பொருளையும் அறிந்தவர், மீண்டும் இவ்வுலகில் பிறவிகளைத் தாம் எடுத்து வராத நெறியை மேற்கொள்வார்கள். 356

என்றும் உளதான மெய்ப்பொருளை உள்ளம் ஆராய்ந்து அறிந்துவிட்டதானால், மீளவும் தனக்குப் பிறப்பு உள்ளதென்று அவன் எண்ணவேண்டாம். 357

பிறப்புக்குக் காரணமான அறியாமைகள் நீங்குவதற்குச் சிறப்பான துணை எனப்படும் செம்பொருளை முயன்று காண்பதே மெய்யுணர்வு ஆகும். 358

எல்லாப் பொருள்களுக்கும் சார்பான செம்பொருளை உணர்ந்து, பற்றுக் கெடுமாறு ஒழுகினால், சார்வதற்குரிய துன்பங்கள் திரும்பவும் வந்து சாரமாட்டா. 359

காமம், வெகுளி, மயக்கம் என்னும் இவை மூன்றின் பெயர்களைக்கூட உள்ளத்திலிருந்து அறவே நீக்கிவிட்டால், பிறவித் துன்பமும் கெடும். 360

பொருளல் லவற்றைப் பொருளென் றுணரும்
மருளானாம் மாணாப் பிறப்பு. 351

இருள்நீங்கி இன்பம் பயக்கும் மருள்நீங்கி
மாசறு காட்சி யவர்க்கு. 352

ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வானம் நணியது உடைத்து. 353

ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர்வு இல்லா தவர்க்கு. 354

எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு. 355

கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி. 356

ஓர்த்துள்ளம் உள்ளது உணரின் ஒருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு. 357

பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்பது அறிவு. 358

சார்புணர்ந்து சார்பு கெடஒழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய். 359

காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
நாமம் கெடக்கெடும் நோய். 360

எல்லா உயிருக்கும் எக்காலத்திலும் பிறவி என்னும் துன்பத்தைத் தருகின்றதான வித்து, 'அவா' என்பதுதான் என்று ஆன்றோர் கூறுவர் 361

ஒருவன் எதையேனும் விரும்புவதானால், பிறவாமை என்பதையே விரும்ப வேண்டும்; அந்த நிலை அவா இல்லாத நிலையை விரும்பினால் வரும். 362

அவாவற்ற தன்மைபோலச் சிறந்த செல்வம் இவ்வுலகில் யாதும் இல்லை; எவ்விடத்தும் அதற்கு இணையானதான செல்வமும் யாதும் இல்லை. 363

தூய்மையான நிலை என்பது அவாவில்லாத நிலையே ஆகும்; அந்த நிலை, வாய்மையையே விரும்பி நடந்தால் தானாகவே நம்மை வந்து சேரும் 364

பற்று அற்றவர் என்பவர்கள் அவா அற்றவரே; அவா அறாத மற்றையவர் எல்லாரும் அவ்வளவாகப் பற்று அற்றவர் அல்லர். 365

ஒருவனை அவன் தளர்ச்சி கண்டு வஞ்சிப்பது அவா ஆகும்; அதனால், அவாவுக்குப் பயந்து ஒதுங்கி வாழ்வதே மேன்மையான அறநெறி ஆகும். 366

அவாவினை முழுவதும் அறுத்து விட்டால், கெடாமல் வாழ்வதற்கான நல்வினைகள், தான் விரும்பியபடியே வந்து ஒருவனுக்கு வாய்க்கும். 367

அவா இல்லாதவருக்குத் துன்பம் என்பதும் இல்லையாகும்; அவா உள்ளதானால் துன்பமும் ஒழியாமல் மேன்மேலும் வந்துகொண்டே இருக்கும். 368

அவா என்கின்ற துன்பத்தினுள் கொடிய துன்பமானது கெடுமானால், வாழ்வில், இன்பம் இடையறாமல் வந்து வாய்த்துக்கொண்டிருக்கும் 369

ஒருபோதும் நிரம்பாத அவாவினைக் கைவிட்டால், அந்தப் பொழுதிலேயே, பெரிதான இன்பவாழ்வை அந்நிலைமையானது தானாகவே தந்துவிடும். 370

அவாஎன்ப எல்லா உயிர்க்கும்எஞ் ஞான்றும்
தவாஅப் பிறப்பீனும் வித்து. 361

வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும். 362

வேண்டாமை அன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை
யாண்டும் அஃதொப்பது இல். 363

தூஉய்மை என்பது அவாவின்மை மற்றது
வாஅய்மை வேண்ட வரும். 364

அற்றவர் என்பார் அவாவற்றார் மற்றையார்
அற்றாக அற்றது இலர். 365

அஞ்சுவ தோரும் அறனே ஒருவனை
வஞ்சிப்ப தோரும் அவா. 366

அவாவினை ஆற்ற அறுப்பின் தவாவினை
தான்வேண்டும் ஆற்றான் வரும். 367

அவாவில்லார்க் கில்லாகும் துன்பம் அஃ துண்டேல்
தவாஅது மேன்மேல் வரும். 368

இன்பம் இடையறாது ஈண்டும் அவாவென்னும்
துன்பத்துள் துன்பம் கெடின். 369

ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே
பேரா இயற்கை தரும். 370

*ஆவதற்குரிய ஊழ் வந்தால் சோர்வில்லாத முயற்சிகள் தோன்றும்; கைப்பொருள் போவதற்குரிய ஊழ் வந்தால் சோம்பல் தோன்றும்.* *371*

*இழப்பதற்கான ஊழ் ஒருவனைப் பேதையாக்கும்; ஆவதற்கான ஊழ் வந்தால் ஒருவனது அறிவை விரிவாக்கி அவனுக்குப் பல நன்மைகளைத் தரும்.* *372*

*நுண்மையான நூல்கள் பலவற்றை முயன்று கற்றாலும், ஊழின் நிலைமைக்குத் தகுந்தபடி உள்ளதாகும் அறிவே மேம்பட்டுத் தோன்றும்.* *373*

*ஊழின் காரணத்தால் உலகத்து இயற்கையானது இருவேறு வகைப்படும்; செல்வராதல் வேறு ஊழ்; தெளிவான அறிவினராதல் வேறு ஊழ் ஆகும்.* *374*

*செல்வம் தேடும் முயற்சிக்கு, நல்லூழால் தீயவும் நல்லவை யாவதும், தீயூழால் நல்லவைகளும் தீயவை தருகின்ற தன்மையவாதலும் உண்டு.* *375*

*வருந்திக் காப்பாற்ற முயன்றாலும் நல்லூழ் இல்லாதபோது எதுவுமே ஆகாது; கொண்டுபோய் வெளியே சொரிந்தாலும் நல்லூழிருந்தால் நம் பொருள் போகாது.* *376*

*ஊழை வகுத்தவன் வகுத்துவிட்ட வகைப்படி அல்லாமல், கோடியாகப் பொருள் தொகுத்தவர்க்கும் அவற்றைத் துய்த்தல் என்பது அரிதாகும்.* *377*

*வந்தடைவதான இன்பங்கள் வந்து சேராமற் போகுமானால், துய்க்கும் பொருள் இல்லாதவர்கள் தம்முடைய ஆசைகளைத் துறப்பார்கள்!* *378*

*ஊழால் நன்மைகள் விளையும்போது, அவற்றை நல்லவையாகக் காண்பவர்கள், அஃது இல்லாத கேடு காலத்தில் துன்பப்படுவதுதான் எதற்காக?* *379*

*ஊழைக் காட்டிலும் பெரிதும் வலிமையானவை யாவை உள்ளன! மற்றொன்றை வலியது என்று கருதினாலும், அங்கும் ஊழே முன்வந்து நிற்கும்!* *380*

ஆகூழால் தோன்றும் அசைவின்மை கைப்பொருள்
போகூழால் தோன்றும் மடி. 371

பேதைப் படுக்கும் இழவூழ் அறிவகற்றும்
ஆகலூழ் உற்றக் கடை. 372

நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றுந்தன்
உண்மை அறிவே மிகும். 373

இருவே றுலகத் தியற்கை திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு. 374

நல்லவை எல்லாஅம் தீயவாம் தீயவும்
நல்லவாம் செல்வம் செயற்கு. 375

பரியினும் ஆகாவாம் பாலல்ல உய்த்துச்
சொரியினும் போகா தம. 376

வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது. 377

துறப்பார்மன் துப்புரவு இல்லார் உறற்பால
ஊட்டா கழியும் எனின். 378

நன்றாங்கால் நல்லவாக் காண்பவர் அன்றாங்கால்
அல்லற் படுவ தெவன். 379

ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினும் தான்முந் துறும். 380

## பொருட்பால்

381 முதல் 630 : அரசியல்

631 முதல் 950 : அங்கவியல்

951 முதல் 1080 : ஒழிபியல்

படை, குடி, விளைபொருள், அமைச்சர், நண்பர், அரண் என்னும் ஆறு உறுப்புக்களையும் சிறப்பாகப் பெற்றவன் அரசருள் சிங்க ஏறு ஆவான். 381

அஞ்சாமை, எளியோர்க்குக் கொடுத்து உதவும் ஈகை, அறிவு, ஊக்கம், என்னும் நான்கும் குறைவில்லாமல் இருப்பது வேந்தருக்கு இயல்பு ஆதல் வேண்டும். 382

நாடாளும் மன்னனுக்கு, விரைவாகச் செயலைச் செய்தலும், அதனை அறியும், அறிவும், செய்யும் துணிவும் என்னும் மூன்று திறனும் நீங்காமல் இருக்க வேண்டும். 383

அரசநெறியிலிருந்தும் வழுவாமலும், நெறியல்லாதவைகளை நாட்டைவிட்டு நீக்கியும், மறமாட்சியில் தாழ்ச்சியின்மை என்னும் மானமும் உடையவனே அரசன். 384

பொருள் வருவாய்க்கான வழிகளை உண்டாக்கலும், வரும் பொருளைச் சேமித்தலும், பாதுகாத்தலும், நாட்டின் நலத்துக்குத் தக்கபடி செலவிடுதலும் வல்லதே அரசு. 385

தன்னைக் காண வருவார்க்குக் காட்சிக்குத் தான் எளியனாயும், கடுஞ்சொல் சொல்லாதவனாயும் அரசன் விளங்கினால், அவன் நாட்டை உலகமே உயர்வாகக் கூறும். 386

இனிமையான சொல்லோடு, துன்புறுவார்க்கு வேண்டியதைக் கொடுத்தும் காப்பாற்றவல்ல அரசன், தன் மனத்தில் கருதியவாறே உலகமும் அமையும். 387

முறைமையோடு ஆட்சிசெய்து மக்களைக் காப்பாற்றும் மன்னவன், அம் மக்களுக்குத் தெய்வம் என்று சொல்லப்படும் உயர்நிலையிலே வைத்து மதிக்கப்படுவான். 388

சான்றோர்கள் கண்டித்துச் சொல்வது கேள்விக்கு வெறுப்பாயிருந்தாலும், பொறுத்து, அக்குறைகளை நீக்கும் பண்புள்ள வேந்தனின் குடைநிழலில், உலகம் தங்கும். 389

கொடையும், இரக்க குணமும், செங்கோன்மையும், குடி காத்தலும் என்னும் நான்கையும் சிறப்பாகப் பெற்றவன் வேந்தர்க்கு எல்லாம் ஒளிவிளக்கு ஆவான். 390

படைகுடி கூழ்அமைச்சு நட்புஅரண் ஆறும்
உடையான் அரசருள் ஏறு. 381

அஞ்சாமை ஈகை அறிவுஊக்கம் இந்நான்கும்
எஞ்சாமை வேந்தற்கு இயல்பு. 382

தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்
நீங்கா நிலன்ஆள் பவர்க்கு. 383

அறன்இழுக்காது அல்லவை நீக்கி மறன்இழுக்கா
மானம் உடையது அரசு. 384

இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த
வகுத்தலும் வல்லது அரசு. 385

காட்சிக்கு எளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்
மீக்கூறும் மன்னன் நிலம். 386

இன்சொலால் ஈத்தளிக்க வல்லாற்குத் தன்சொலால்
தான்கண் டனைத்துஇவ் வுலகு. 387

முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறைஎன்று வைக்கப் படும். 388

செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்
கவிகைக்கீழ்த் தங்கும் உலகு. 389

கொடைஅளி செங்கோல் குடிஓம்பல் நான்கும்
உடையானாம் வேந்தர்க்கு ஒளி. 390

கற்பதற்குத் தகுதியான நூல்களைப் பழுதில்லாமல் கற்க வேண்டும்; கற்றதன் பின்னர் கற்ற அக்கல்வியின் தகுதிக்குத் தகுந்தபடி நடக்கவும் வேண்டும். 391

'எண்' என்று சொல்லப்படுவதும், 'எழுத்து' என்று கூறப்படுவதும் என்னும் இவை இரண்டும், இவ்வுலகில் வாழும் உயிர்களுக்குக் 'கண்' என்பார்கள். 392

'கண்' உடையவர் என்று உயர்வாகக் கூறப்படுவோர் கற்றவரே ஆவர்; கல்லாதவர்கள் தம் முகத்தில் இரண்டு புண் உடையவர்கள் ஆவர். 393

எல்லாரும் மகிழும் வகையிலே கூடியிருந்து, 'இனி என்று மீளக் கூடுவோம்' என்று எண்ணும்படியாகப் பிரிதல் கல்வியறிவினரது செயல் ஆகும். 394

செல்வர்களின் முன்னே உதவிகேட்கும் எளியவர் பணிவோடு நிற்பதுபோல, ஆசிரியரிடம் பணிந்து நின்று கற்றவரே சிறந்தவர்; கல்லாதவரோ கடையர்! 395

மணலிலே தோண்டும் கிணற்றில், தோண்டிய அளவுக்கே நீர் ஊறும்; மாந்தருக்கும் அவரவர் முயன்று கற்றதன் அளவுக்கே அறிவும் ஊறிச் சுரக்கும். 396

கற்றவனுக்கு எந்த நாடும் நாடாகும்; எந்த ஊரும் ஊராகும்; இதுவே உண்மையாக இருந்தும் ஒருவன் சாகும்வரைக்கும் கல்லாமலிருப்பது எதனால்? 397

ஒரு பிறவியிலே தான் கற்ற கல்வியானது, ஒருவனுக்குத் தொடர்ந்து வரும் ஏழு பிறப்புக்களிலும் அவனைப் பாதுகாக்கும் சிறப்புடையது ஆகும். 398

தாம் இன்பம் அடைவதாகிய கல்வியினாலே உலகத்தாரும் இன்பம் அடைவதைக் கண்டு, கற்றறிந்தவர், மேன்மேலும் தாம் கற்பதையே விரும்புவார்கள். 399

'அழிவில்லாத சிறந்த செல்வம்' என்பது கல்விச் செல்வமே; மற்றைய பொன் பொருள் மண் என்னும் செல்வங்கள் ஒருவனுக்குச் சிறந்த செல்வம் ஆகா. 400

கற்கக் கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக. 391

எண்என்ப ஏனை எழுத்துஎன்ப இவ்விரண்டும்
கண்என்ப வாழும் உயிர்க்கு. 392

கண்ணுடையர் என்பவர் கற்றோர் முகத்துஇரண்டு
புண்ணுடையர் கல்லா தவர். 393

உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில். 394

உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றும் கற்றார்
கடையரே கல்லா தவர். 395

தொட்டனைத்து ஊறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத்து ஊறும் அறிவு. 396

யாதானும் நாடாமல் ஊராமால் என்ஒருவன்
சாந்துணையும் கல்லாத வாறு. 397

ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப்பு உடைத்து. 398

தாம்இன் புறுவது உலகுஇன் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார். 399

கேடுஇல் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு
மாடுஅல்ல மற்றை யவை. 400

நிரம்பிய நூலறிவு இல்லாமல் கற்றவர் அவையிலே சென்று ஒருவன் பேசுதல், அரங்கம் இழைக்காமலே வட்டாடினால் போன்ற அறியாமையான செயல் ஆகும். 401

கல்லாதவன், தானும் அவையிற் பேசவேண்டும் என்று விரும்புதல், முலைகளிரண்டும் இல்லாதவளான பெண் பெண்மையை விரும்புதல் போன்ற அறியாமை ஆகும். 402

கற்றவர்களின் முன்பாகச் சென்று சொல்லாடாதிருந்தால், கல்லாதவர்களும், அந்த அளவுக்கு மிகவும் நல்லவர்களாகவே கற்றவரால் கருதப்படுவர். 403

கல்லாதவனது அறிவு சில சமயங்களிலே மிகவும் நன்றாயிருந்தாலும், அறிவுடையவர்கள் அதனை நன்றென்று ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். 404

கல்லாத ஒருவன், தன்னையும் கற்றவர்போல மதித்துக் கொண்டு சொல்லாடினால், அவனுக்கு இயல்பாக உள்ள மதிப்பும் கெட்டுப் போய்விடும். 405

'உயிரோடு இருக்கின்றார்' என்னும் அளவினரே அல்லாமல், எந்தப் பயனும் இல்லாத களர்நிலத்தைப் போன்றவர்களே கல்லாதவர் ஆவர். 406

நுட்பமாகவும் சிறப்பாகவும் நுழைந்து கற்ற அறிவுநலம் இல்லாதவனின் உடல் அழகு, மண்ணால் அழகாகச் செய்த ஒரு பாவையின் உடல் அழகு போன்றதே! 407

கல்வியறிவு உடைய நல்லவரிடம் உள்ளதான வறுமையைவிடக் கல்லாதவரிடம் சேர்ந்த அளவற்ற செல்வமானது பெரிதும் துன்பம் தருவதாகும் 408

மேலான குடியிலே பிறந்தவராயினும், கல்லாத மடமையாளர், தாழ்ந்த குடியிலே பிறந்தும் கற்றவரைப் போலப் பெருமை இல்லாதவர் ஆவர். 409

அறிவு விளங்கும் நூல்களைக் கல்லாதவர்கள், மக்களை நோக்க விலங்குகள் இழிந்தவை ஆவதுபோல, கற்றவரைக் கருதத் தாமும் இழிந்தவர் ஆவர். 410

அரங்குஇன்றி வட்டாடி அற்றே நிரம்பிய
நூல்இன்றிக் கோட்டி கொளல். 401

கல்லாதான் சொற்கா முறுதல் முலைஇரண்டும்
இல்லாதாள் பெண்காமுற் றற்று. 402

கல்லா தவரும் நனிநல்லர் கற்றார்முன்
சொல்லா திருக்கப் பெறின். 403

கல்லாதான் ஒட்பம் கழியநன்று ஆயினும்
கொள்ளார் அறிவுடை யார். 404

கல்லா ஒருவன் தகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும். 405

உளர்என்னும் மாத்திரையர் அல்லால் பயவாக்
களர்அனையர் கல்லா தவர். 406

நுண்மாண் நுழைபுலம் இல்லான் எழில்நலம்
மண்மாண் புனைபாவை அற்று. 407

நல்லார்கண் பட்ட வறுமையின் இன்னாதே
கல்லார்கண் பட்ட திரு. 408

மேற்பிறந்தார் ஆயினும் கல்லாதார் கீழ்ப்பிறந்தும்
கற்றார் அனைத்துஇலர் பாடு. 409

விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்றாரோடு ஏனை யவர். 410

கேள்வியால் அடைகின்ற அறிவே செல்வங்களுள் சிறந்த செல்வம் ஆகும்; அந்தக் கேள்விச் செல்வம் பிற செல்வங்களுள் எல்லாம் முதன்மையானதும் ஆகும். 411

செவிக்கு உணவான கேள்வி இல்லாதபொழுது, உடலைக் காப்பதன் பொருட்டாக வயிற்றுக்கும் சிறிதளவான உணவு அறிவுள்ளவரால் தரப்படும். 412

செவியுணவு ஆகிய கேள்வியை உடையவர், இவ்வுலகத்தில் இருப்பவரானாலும், அவியுணவை ஏற்றுக்கொள்ளும் வானுலகத்தோத் தேவர்களோடு ஒப்பாவார்கள். 413

தான் முயன்று கற்கவில்லை என்றாலும், கற்றவரிடம் கேட்டாவது அறிவு பெறவேண்டும்; அது ஒருவன் தளர்ச்சி அடையும்போது ஊன்றுகோல்போலத் துணையாகும். 414

நல்ல ஒழுக்கம் உடையவரது வாய்ச்சொற்கள், வழுக்கும் சேற்றில் வழுக்காமல் செல்ல உதவும் ஊன்றுகோல்போல ஒருவனுக்கு எப்போதும் உதவியாக விளங்கும். 415

எவ்வளவு சிறிது என்ற போதும் நல்ல பேச்சுக்களையே கேட்கவேண்டும்; அது அந்த அளவுக்கேனும் சிறந்த பெருமையைக் கேட்டவனுக்குத் தவறாமல் தரும். 416

நுட்பமாகக் கற்றுணர்ந்த அறிவோடு கேள்வியறிவும் உடையவர்கள், பிறழ ஒன்றை உணர்ந்தாலும், தமக்குப் பேதைமை தருகின்ற சொற்களைச் சொல்லமாட்டார்கள். 417

கேள்வியால் துளைக்கப்படாத செவிகள், பிற ஒலிகளை எல்லாம் கேட்குமாயினும், உண்மையில் செவிடான காதுகளே ஆகும். 418

நுண்மையான கேள்வி அறிவைப் பெறாதவர்கள், தாம் வணக்கமாகப் பேசும் வாயினர் ஆகுதல் அருமையே! கேள்வியறிவு பெற்றவர்கள் பணிவாகவே பேசுவார்கள். 419

கேள்வியாகிய அறிவுச் சுவையை உணராது, வாயால் அறியும் நாக்கின் சுவையுணர்வு மட்டுமே கொண்டவர்கள் இறந்தாலும் வாழ்ந்தாலும் ஒன்றுதான். 420

செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்
செல்வத்துள் எல்லாம் தலை. 411

செவிக்குஉணவு இல்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கும் ஈயப் படும். 412

செவியுணவிற் கேள்வி உடையார் அவியுணவின்
ஆன்றாரோடு ஒப்பர் நிலத்து. 413

கற்றிலன் ஆயினும் கேட்க அஃதுஒருவற்கு
ஒற்கத்தின் ஊற்றாம் துணை. 414

இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல் அற்றே
ஒழுக்கம் உடையார்வாய்ச் சொல். 415

எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும். 416

பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லார் இழைத்
ஈண்டிய கேள்வி யவர். [துணர்ந்து 417

கேட்பினும் கேளாத் தகையவே கேள்வியால்
தோட்கப் படாத செவி. 418

நுணங்கிய கேள்வியர் அல்லார் வணங்கிய
வாயின ராதல் அரிது. 419

செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினும் என். 420

இறுதிக்காலம் வரையும் காப்பாற்றும் கருவி அறிவு ஆகும்; பகைவருக்கும் உட்புகுந்து அழிக்க இயலாத கோட்டையும் அந்த அறிவு ஆகும். 421

மனத்தை அது சென்ற இடங்களிலேயே செல்லவிடாமல், தீமைகளிலிருந்து விலக்கி, நன்மையில் மட்டுமே செல்லவிடுவது அறிவு ஆகும். 422

எந்தப் பொருளைப்பற்றியும், எவரெவரிடமிருந்து கேட்பதானாலும், அப் பொருளினது மெய்யான தன்மைகளைக் காண்பதுதான் அறிவு ஆகும். 423

கேட்பவருக்குப் புரியும்படி எளிமையாகத் தான் விளக்கிச் சொல்லியும், பிறரின் பேச்சுக்களில் உள்ள நுண்மையான பொருளைக் காண்பதும், அறிவு ஆகும். 424

உயர்ந்தவர்களைத் தன்னுடையவர்களாகச் செய்து கொள்வதே அறிவு; அத் தொடர்பிலே முதலில் மகிழ்தலும் பின்னர் குவிதலும் இல்லாததும் அறிவு ஆகும். 425

உயர்ந்தோர் எவ்வாறு வாழ்கின்றார்களோ, அவ்வாறே, அந்த உயர்ந்தவர்களோடு தானும் அங்ஙனமே வாழ்வதுதான் அறிவுடைமை ஆகும். 426

பின்னே வரப்போவதை முன்னாலேயே அறிபவர்களே அறிவுடையவர்; அவ்வாறு அறிந்து நடப்பதற்குக் கல்லாதவர்களே அறிவில்லாதவர் ஆவர். 427

அஞ்ச வேண்டியவைகளுக்கு அஞ்சாமல் நடப்பது அறிவில்லாத தன்மை ஆகும்; அஞ்சவேண்டியதற்கு அஞ்சி விலகிநடப்பதே அறிவுடையவர் செயலாகும். 428

பின்னர் வரப்போவதை முன்னதாகவே அறிந்து காக்கும் அறிவுடையவர்க்கு, அவர் நடுங்கும்படியாக வருவதான ஒரு துன்பமும் இல்லை. 429

அறிவுடையோர் எல்லா நன்மையுமே உடையவர் ஆவர்; அறிவில்லாதவர் எதனை உடையவரானாலும் எந்த நன்மையும் இல்லாதவரே ஆவர். 430

அறிவுஅற்றம் காக்கும் கருவி செறுவார்க்கும்
உள்ளழிக்கல் ஆகா அரண். 421

சென்ற இடத்தால் செலவிடாது தீதுஒரீஇ
நன்றின்பால் உய்ப்பது அறிவு. 422

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு. 423

எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்
நுண்பொருள் காண்பது அறிவு. 424

உலகம் தழீஇயது ஒட்பம் மலர்தலும்
கூம்பலும் இல்லது அறிவு. 425

எவ்வது உறைவது உலகம் உலகத்தோடு
அவ்வது உறைவது அறிவு. 426

அறிவுடையார் ஆவது அறிவார் அறிவிலார்
அஃதுஅறி கல்லா தவர். 427

அஞ்சுவது அஞ்சாமை பேதைமை அஞ்சுவது
அஞ்சல் அறிவார் தொழில். 428

எதிரதாக் காக்கும் அறிவினார்க்கு இல்லை
அதிர வருவதோர் நோய். 429

அறிவுடையார் எல்லாம் உடையார் அறிவிலார்
என்னுடைய ரேனும் இலர். 430

செருக்கும், சினமும், சிறுமைக் குணமும் இல்லாதவருடைய பெருஞ் செல்வமானது சான்றோரால் மதிக்கப்படும் தன்மையை உடையது ஆகும். 431

ஈயாத உலோபமும், மாட்சியில்லாத மானவுணர்வும், தகுதியில்லாத உவகையும் தலைவனாக இருப்பவனுக்குக் கேடுதரும் குற்றங்கள் ஆகும். 432

பழிச்சொல்லுக்கு வெட்கப்படுகின்றவர்கள், தினை அளவான சிறு குற்றம் தம்மிடம் வந்தாலும், அதனைப் பனையளவு பெரிதாகக் கருதி வருந்துவார்கள். 433

தனக்கு முடிவைத் தருகின்ற கொடிய பகை குற்றமே; ஆகவே, குற்றம் செய்யாதிருப்பதே பொருளாகத் தன்னை எப்போதும் காத்துக் கொள்க. 434

குற்றம் வருவதற்கு முன்பே, வராமல் காத்துக் கொள்ளாதவன் வாழ்க்கையானது, நெருப்பின் முன்னர் வைத்த வைக்கோல் போர் போலக் கெடும். 435

தன் குற்றத்தையும் வராமல் நீக்கிக் கொண்டு, பிறர் குற்றங்களையும் கண்டறிந்து நீக்குவானானால், அரசனுக்கு என்ன குற்றம் உண்டாகும்? 436

செல்வம் பெற்ற போது அதனாலே செய்யவேண்டிய செயல்களைச் செய்யாமல் தவறியவனுடைய செல்வமானது, நிலைக்கும் தன்மையற்று, அழியும். 437

செல்வத்தின்மேல் பற்றுக்கொண்ட உள்ளம் எனப்படும் கஞ்சத்தனம், எந்தக் குற்றங்களோடும் எண்ணப்படும் ஒன்றாக இல்லாமற், பெருங் குற்றமாகும். 438

எப்போதும் தன்னையே வியந்து பேசுதல் கூடாது; நன்மை பயவாத செயல்களையும் ஒருபோதும் செய்ய விரும்புதலும் செய்தலும் கூடாது. 439

தன் விருப்பத்தைப் பிறர் அறியாதபடி நுகர வல்லவனானால், அவனைப் பகைத்தவர் செய்யும் சூழ்ச்சிகள் எல்லாம் பயனில்லாமல் அழிந்து போகும். 440

செருக்கும் சினமும் சிறுமையும் இல்லார்
பெருக்கம் பெருமித நீர்த்து. 431

இவறலும் மாண்புஇறந்த மானமும் மாணா
உவகையும் ஏதம் இறைக்கு. 432

தினைத்துணையாம் குற்றம் வரினும் பனைத்துணையாக்
கொள்வர் பழிநாணு வார். 433

குற்றமே காக்க பொருளாக் குற்றமே
அற்றம் தரூஉம் பகை. 434

வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும். 435

தன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றம் காண்கிற்பின்
என்குற்றம் ஆகும் இறைக்கு. 436

செயற்பால செய்யாது இவறியான் செல்வம்
உயற்பால தன்றிக் கெடும். 437

பற்றுள்ளம் என்னும் இவறன்மை எற்றுள்ளும்
எண்ணப் படுவதொன்று அன்று. 438

வியவற்க எஞ்ஞான்றும் தன்னை நயவற்க
நன்றி பயவா வினை. 439

காதல காதல் அறியாமை உய்க்கிற்பின்
ஏதில ஏதிலார் நூல். 440

அறத்தின் தன்மைகளை அறிந்து முதிர்ந்த அறிவுடையவரது நட்பினை, கொள்ளும் திறன் அறிந்து ஆராய்ந்து பெற்றுக் கொள்ளல் வேண்டும். 441

நாட்டிற்கு வந்தடைந்த துன்பத்தை நீக்கி, மேலும் நாட்டில் துன்பம் வராதபடி முற்படக் காக்கும் தகுதியுடைய பெரியோரையே துணையாகக் கொள்ளல் வேண்டும். 442

பெரியோரையே விரும்பித் தமக்குரிய சுற்றத்தினராகப் பெற்றுக்கொள்ளுதல், பெறுதற்கரிய பேறுகளுள் எல்லாம் அரிதான பெரும்பேறு ஆகும். 443

தன்னினும் பெரியோராக உள்ளவர்கள் தன் சுற்றத்தினராக ஆகுமாறு நடந்துவருதல், ஒருவனது வலிமையுள் எல்லாம் தலையான வலிமை ஆகும். 444

தகுதியான வழிகளை ஆராய்ந்து சொல்பவரையே கண்ணாகக் கொண்டு உலகம் நடத்தலால், மன்னவன், அவரை ஆராய்ந்து தன் சுற்றமாக்கிக் கொள்ளல் வேண்டும். 445

தகுதியுடைய பெரியோர்களின் துணையுள்ளவனாகத் தான் நடந்துகொள்ள வல்லவனைப் பகைவர் பகைத்துச் செய்யக்கூடிய துன்பம் ஏதுமில்லை. 446

இடித்துக் கூறித் திருத்தும் துணைவரான பெரியோரைத் துணையாகக் கொண்டவரை, எவர்தாம் கெடுக்கக்கூடிய வல்லமை உடையவர்? 447

இடித்துச் சொல்லித் திருத்துபவர் இல்லாத பாதுகாப்பற்ற மன்னன், தன்னைக் கெடுப்பவர் எவரும் இல்லாதபோதும், தானாகவே கெடுவான். 448

முதல் இல்லாத வாணிகருக்கு அதனால் வரும் ஊதியமும் இல்லையாகும்; அவ்வாறே தன்னைத் தாங்கும் துணையில்லாதவர்க்கு உலகில் நிலைபேறும் இல்லை. 449

பலரோடும் பகைத்துக் கொள்வதைவிட, நல்லோருடன் கொண்ட தொடர்பைக் கைவிட்டு விடுதல், அதனினும் பதின்மடங்கு தீமை தருவதாகும். 450

## 45. பெரியாரைத் துணைக்கோடல்

அறன்அறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை
திறன்அறிந்து தேர்ந்து கொளல். 441

உற்றநோய் நீக்கி உறாஅமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல். 442

அரியவற்றுள் எல்லாம் அரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல். 443

தம்மிற் பெரியார் தமரா ஒழுகுதல்
வன்மையுள் எல்லாம் தலை. 444

சூழ்வார்கண் ணாக ஒழுகலான் மன்னவன்
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல். 445

தக்கார் இனத்தனாய்த் தான்ஒழுக வல்லானைச்
செற்றார் செயக்கிடந்த தில். 446

இடிக்கும் துணையாரை ஆள்வாரை யாரே
கெடுக்கும் தகைமை யவர். 447

இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பார் இலானும் கெடும். 448

முதல்இலார்க்கு ஊதியம் இல்லை மதலையாம்
சார்புஇலார்க்கு இல்லை நிலை. 449

பல்லார் பகைகொளலின் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல். 450

பெரியோர் சிற்றினத்தைக் காணின் அஞ்சி ஒதுங்குவார்கள்; சிறியாரோ அதுவே தம் சுற்றமாகக் கருதித் தம்முடன் சேர்த்துக் கொள்வார்கள். 451

நிலத்தின் தன்மையால், அதிற் சேர்ந்த நீரின் தன்மை மாறுபடும்; அவ்வாறே, மாந்தர்க்கும் அவரவர் சேர்ந்த இனத்தின் தன்மைப்படியே அறிவும் ஆகும். 452

மாந்தர்க்கு உணர்ச்சி என்பது மனத்தின் தன்மையால் உண்டாவதாகும்; இவன் இன்னவன் எனப்படும் சொல்லானது அவனவன் சேர்ந்த இனத்தாலே உண்டாகும். 453

ஒருவனது மனத்தில் உள்ளதுபோலக் காட்டினாலும், ஒருவனுக்கு அவன் சேர்ந்த இனத்தை யொட்டியதாகவே அறிவு உண்டாகும். 454

மனம் தூய்மை யாதலும், செய்யும்தொழில் தூய்மை யாதலும் ஆகிய இரண்டும், தான் சேர்ந்த இனத்தின் தூய்மையை ஒட்டியே வரும். 455

மனத்திலே தூய்மை உடையவர்களுக்கு எஞ்சி நிற்பதான புகழ் முதலியவை நன்றாக ஆகும்; சேர்ந்த இனம் தூய்மையானவர்க்கு நன்மையாகாத செயல் யாதுமில்லை. 456

மனத்தின் நல்ல நிலையே மன்னுயிர்க்கு ஆக்கம் தரும்; இனத்தின் நல்ல துணையோ எல்லாவகையான புகழையும் ஒருவனுக்குத் தருவதாகும். 457

சான்றோர் மனநலத்தினை நல்லபடியே உடையவரானாலும், அவருக்குத் தாம் சேர்ந்திருக்கும் இனத்தது நலமே எல்லாப் புகழையும் தரும். 458

மனத்தின் செம்மையாலே மறுமை இன்பம் உண்டாகும்; மற்று அந்த மறுமையும், சேர்ந்த இனத்தின் செம்மையால் நல்ல பாதுகாப்புடன் இருக்கும். 459

நல்ல இனத்தைக் காட்டிலும் துணையாவது உலகத்தில் யாதுமில்லை; தீய இனத்தைவிட அல்லல் படுத்துவதும் உலகத்தில் யாதுமில்லை. 460

சிற்றினம் அஞ்சும் பெருமை சிறுமைதான்
சுற்றமாச் சூழ்ந்து விடும். 451

நிலத்துஇயல்பான் நீர்திரிந்து அற்றாகும் மாந்தர்க்கு
இனத்தியல்பது ஆகும் அறிவு. 452

மனத்தான்ஆம் மாந்தர்க்கு உணர்ச்சி இனத்தான்ஆம்
இன்னான் எனப்படும் சொல். 453

மனத்துளது போலக் காட்டி ஒருவற்கு
இனத்துளது ஆகும் அறிவு. 454

மனந்தூய்மை செய்வினை தூய்மை இரண்டும்
இனந்தூய்மை தூவா வரும். 455

மனந்தூயார்க்கு எச்சம்நன்று ஆகும் இனந்தூயார்க்கு
இல்லைநன்று ஆகா வினை. 456

மனநலம் மன்உயிர்க்கு ஆக்கம் இனநலம்
எல்லாப் புகழும் தரும். 457

மனநலம் நன்குஉடையர் ஆயினும் சான்றோர்க்கு
இனநலம் ஏமாப்பு உடைத்து. 458

மனநலத்தின் ஆகும் மறுமை மற்றுஅஃதும்
இனநலத்தின் ஏமாப்பு உடைத்து. 459

நல்லினத்தின் ஊங்கும் துணைஇல்லை தீயினத்தின்
அல்லற் படுப்பதூஉம் இல். 460

ஒரு செயலைச் செய்வதற்கு முன்பாக, அதனால் முதலில் அழியக்கூடியதும், பின்னர் ஆகிவரக்கூடியதும், கிடைக்கும் மிச்சமும் கருதியபின்னரே செய்ய வேண்டும். 461

தொழில் தெரிந்த நண்பர்களுடன் கலந்து எதையும் ஆராய்ந்து செய்பவருக்கு, முடிவதற்கு அரிய பொருள் என்று சொல்லக்கூடியது யாதொன்றுமே இல்லை. 462

வரப்போவதாகக் கருதும் ஆக்கத்தை எண்ணி, செய்துள்ள முதலீட்டையும் இழக்கின்ற முயற்சியினை அறிவுடையவர்கள் ஒருபோதும் மேற்கொள்ள மாட்டார்கள். 463

தமக்கு இகழ்ச்சி தருவதான ஒரு குறைபாட்டுக்கு அஞ்சுகிறவர்கள், ஊதியம் வரும் என்று தெளிவில்லாத செயலை ஒருபோதும் தொடங்க மாட்டார்கள். 464

ஒரு செயலைப்பற்றி எல்லாவகையிலும் முற்றவும் ஆராயாமல் செய்யத் தொடங்குதல், பகைவரை நல்ல பயிருள்ள பாத்தியுள் நிலைபெறுத்துவது போன்ற செயலாகும். 465

செய்யத் தகுந்தது அல்லாத ஒரு செயலைச் செய்தாலும் பொருள் கெடும்; செய்யத்தகுந்த செயலைச் செய்யாமையாலும் பொருள் கெடும். 466

நன்றாக எண்ணிய பின்னரே ஒரு செயலைச் செய்யத் துணிய வேண்டும்; 'துணிந்த பின்னர் எண்ணுவோம்' என்று எதையும் நினைப்பது குற்றமாகும். 467

செய்வதற்கு உரிய வழிகளிலே முயன்று செய்யப்படாத தொழிலானது, பலர் துணைநின்று பின்னர்க் காத்தாலும் கெட்டுப் போய்விடும். 468

அவரவரது இயல்புகளைத் தெரிந்து கொண்டு, அவரவர்க்குத் தகுந்தபடி செய்யாவிட்டால், நன்மை செய்வதிலும்கூடக் குற்றம் உண்டாகிவிடும். 469

உயர்ந்தோர் இகழ்ச்சியாக நினையாத செயல்களையே ஆராய்ந்து செய்யவேண்டும்; உயர்ந்தோர் தம் தகுதியோடு பொருந்தாதவற்றை ஏற்கவே மாட்டார்கள். 470

அழிவதூஉம் ஆவதூஉம் ஆகி வழிபயக்கும்
ஊதியமும் சூழ்ந்து செயல். 461

தெரிந்த இனத்தோடு தேர்ந்துஎண்ணிச் செய்வார்க்கு
அரும்பொருள் யாதொன்றும் இல். 462

ஆக்கம் கருதி முதல்இழக்கும் செய்வினை
ஊக்கார் அறிவுடை யார். 463

தெளிவு இலதனைத் தொடங்கார் இழிவுஎன்னும்
ஏதப்பாடு அஞ்சு பவர். 464

வகைஅறச் சூழாது எழுதல் பகைவரைப்
பாத்திப் படுப்பதோர் ஆறு. 465

செய்தக்க அல்ல செயக்கெடும் செய்தக்க
செய்யாமை யானும் கெடும். 466

எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்
எண்ணுவம் என்பது இழுக்கு. 467

ஆற்றின் வருந்தா வருத்தம் பலர்நின்று
போற்றினும் பொத்துப் படும். 468

நன்றுஆற்றல் உள்ளும் தவறுஉண்டு அவரவர்
பண்புஅறிந்து ஆற்றாக் கடை. 469

எள்ளாத எண்ணிச் செயல்வேண்டும் தம்மொடு
கொள்ளாத கொள்ளாது உலகு. 470

செயலில் வலிமையும், தன் வலிமையும், மாற்றானது வலிமையும், துணைசெய்வாரின் வலிமையும் ஆராய்ந்தே செயலைச் செய்ய வேண்டும். 471

தன்னாலே முடியக்கூடியவனை ஆராய்ந்து அறிந்து, அச் செயலிலேயே நிலைத்துநின்று முயற்சி செய்பவர்களுக்கு முடியாத செயல் எதுவும் இல்லை. 472

தம்மிட.முள்ள வலிமையை அறியாதவராய், மனவெழுச்சி யினாலே தூண்டப்பட்டுச் செயலைத் தொடங்கிவிட்டு, இடையிலே முரிந்துபோனவர்கள் உலகிற் பலராவர். 473

மற்றவரோடு பொருந்தி நட.க்காதவனாகித் தன் வலிமை அளவை அறியாதவனும் ஆகி, தன்னை வல்லவன் என்று வியந்து நட ப்பவன் விரைவிற் கெடுவான். 474

மென்மையான மயிலிறகை ஏற்றியுள்ள வண்டியும், அம் மயிலிறகையே அளவுக்கு மிகுதியாக ஏற்றினால் அச்சு முரிந்து கெடும். 475

மரத்தின் நுனிக்கொம்பு வரையும் ஏறிவிட்ட வர்கள், அதனையும் கடந்து மேலே செல்வதற்கு முயன்றால் அது அவர்கள் உயிருக்கே இறுதியாகி விடும். 476

தன்னிடமுள்ள பொருளின் அளவைத் தெரிந்து, அதற்குத் தகுந்த அளவே கொடுத்து உதவுக; அது பொருளைப் போற்றி வழங்குவதற்குரிய நெறியாகும் 477

வருமானம் வருகின்ற வழியானது சிறிதாக இருந்தாலும், அது செலவாகிப் போகும் வழியானது விரியாதிருந்தால், அவனுக்குக் கேடில்லை. 478

தன்னுடைய செல்வத்தின் அளவை அறிந்து அதற்கு ஏற்றபடி வாழாதவனுடைய வாழ்க்கை உள்ளதுபோலத் தோன்றினாலும் இல்லாததாய்க் கெடும். 479

தன்னுடைய செல்வத்தின் அளவை ஆராயாது அளவு கடந்து உதவிவந்தால், அவன் செல்வத்தின் அளவும் விரைவில் கெட்டுப்போகும். 480

வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும்
துணைவலியும் தூக்கிச் செயல். 471

ஒல்வ தறிவது அறிந்ததன் கண்தங்கிச்
செல்வார்க்குச் செல்லாதது இல். 472

உடைத்தம் வலியறியார் ஊக்கத்தின் ஊக்கி
இடைக்கண் முரிந்தார் பலர். 473

அமைந்தாங்கு ஒழுகான் அளவறியான் தன்னை
வியந்தான் விரைந்து கெடும். 474

பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டம்
சால மிகுத்துப் பெயின். 475

நுனிக்கொம்பர் ஏறினார் அஃதிறந்து ஊக்கின்
உயிர்க்கிறுதி யாகி விடும். 476

ஆற்றின் அளவறிந்து ஈக அதுபொருள்
போற்றி வழங்கும் நெறி. 477

ஆகாறு அளவிட்டி தாயினும் கேடில்லை
போகாறு அகலாக் கடை. 478

அளவறிந்து வாழாதான் வாழ்க்கை உளபோல
இல்லாகித் தோன்றாக் கெடும். 479

உளவரை தூக்காத ஒப்புர வாண்மை
வளவரை வல்லைக் கெடும். 480

தன்னைவிட வலிமையான கூகையைப் பகல் நேரத்தில் காக்கை போரிட்டு வென்றுவிடும்; அவ்வாறே பகைவரை வெல்லும் வேந்தர்க்கும் தகுந்த காலம் வேண்டும். 481

காலத்தோடு பொருந்த முயற்சிகளைச் செய்து வருதல், செல்வத்தைத் தம்மைவிட்டுப் போகாமல் பிணித்து வைக்கும் கயிறு ஆகும். 482

ஏற்ற கருவிகளோடு, தகுதியான காலத்தையும் அறிந்து செயலைச் செய்தால், செய்வதற்கு அரிய செயல் என்பதும் உண்டோ? 483

தகுதியான காலத்தை ஆராய்ந்து, ஏற்ற இடத்திலேயும் செய்தால், உலகத்தையே அடைய நினைத்தாலும் அதுவும் கைகூடும். 484

உலகை வெற்றி கொள்ளக் கருதுகின்றவர்கள், அதற்கு ஏற்ற காலத்தை எதிர்பார்த்து, அதுவரையும் மனந்தளராமல் காத்திருப்பார்கள். 485

ஊக்கம் உடையவன் ஒருவன் பகைவர்மேல் போருக்குச் செல்லாமல் ஒடுங்கியிருப்பது, போரிடும் ஆட்டுக்கடா பகையைத் தாக்குவதற்குப் பின்வாங்கும் தன்மையது. 486

அறிவுடையவர், பகைவர் கெடுதல் செய்த அந்தக்கணமே தன் சினத்தை வெளியே காட்டார்கள்; தகுந்த காலத்தை எதிர்பார்த்து உள்ளத்தில் மட்டுமே சினம் கொள்வார்கள். 487

தமக்குச் சாதகமான காலம் வரும் வரையிலும் பகைவரைக் கண்டால் பணிந்துபோக, அவர்கட்கு முடிவுகாலம் வரும்போது அவர்கள் தலை கீழே விழும். 488

கிடைப்பதற்கு அருமையான காலம் வந்து வாய்த்தபோது, அப்போதே, நாம் செய்வதற்கு அரியவான செயல்களைச் செய்து வெற்றிபெற வேண்டும். 489

காலத்தை எதிர்பார்க்க வேண்டிய பருவத்தில், கொக்கைப் போல இருந்து; காலம் வாய்த்தபோதில் கொக்கு மீனைக் குத்தினாற்போலத் தவறாமல் செய்துமுடிக்கவேண்டும். 490

பகல்வெல்லுங் கூகையைக் காக்கை இகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது. 481

பருவத்தோடு ஒட்ட ஒழுகல் திருவினைத்
தீராமை யார்க்கும் கயிறு. 482

அருவினை என்ப உளவோ கருவியான்
காலம் அறிந்து செயின். 483

ஞாலம் கருதினும் கைகூடும் காலம்
கருதி இடத்தாற் செயின். 484

காலம் கருதி இருப்பர் கலங்காது
ஞாலம் கருது பவர். 485

ஊக்கம் உடையான் ஒடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேருந் தகைத்து. 486

பொள்ளென ஆங்கே புறம்வேரார் காலம்பார்த்து
உள்வேர்ப்பர் ஒள்ளி யவர். 487

செறுநரைக் காணின் சுமக்க இறுவரை
காணின் கிழக்காம் தலை. 488

எய்தற்கு அரியது இயைந்தக்கால் அந்நிலையே
செய்தற்கு அரிய செயல். 489

கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த இடத்து. 490

பகைவரை முற்றுவதற்குத் தகுதியான இடத்தைக் கண்டபின் அல்லாமல், எந்தச் செயலையும் செய்யவேண்டாம்; அவர் வலிமையை இகழாமலும் இருக்கவேண்டாம். 491

மாறுகொள்ள வல்லவரான வலிமையாளருக்கும், அரணைச் சேர்ந்திருத்தலினால் உண்டாகும் வெற்றியானது பலவகைப் பயன்களையும் தரும். 492

தகுந்த இட த்தை அறிந்துகொண்டு, பகைவர்களோடு போராடுதலைச் சிறப்பாகச் செய்தால், அவர்க்கு எதிர்நிற்க ஆற்றாதவரும், போரிட்டு அவரை அழிப்பர். 493

தகுதியான இடத்தை ஆராய்ந்து பற்றிக் கொண்டவர்கள், போரையும் நெருக்கிச் செய்தாரானால், அவரை வெல்ல எண்ணியவர், தம் எண்ணம் இழப்பார்கள். 494

ஆழமான நீரினுள் மற்றைய உயிர்களை முதலை வெற்றி கொள்ளும்; நீரைவிட்டு வெளியே வந்தால், முதலையை மற்றைய விலங்குகள் கொன்றுவிடும். 495

நிலத்திலே ஓடுவதற்குரிய வலிய சக்கரங்களைக்கொண்ட தேர்கள் கடலில் ஓடா; கடலில் ஓடும் கப்பல்களும் நிலத்தில் ஓடமாட்டா. 496

செய்யவேண்டியவைகளை எல்லாம் நன்றாக ஆராய்ந்து, தகுதியான இடத்திலும் செய்வாரானால், அவருக்கு மனவுறுதியைத் தவிரத் துணை எதுவும் வேண்டாம். 497

சிறு படை யினை உடையவனும், தன் வலிமையைச் செலுத்தக்கூடிய இடத்தில் சேர்ந்திருந்தால், பெரும்படை உடையவனும் தன் முயற்சியில் தோல்வி காண்பான். 498

கடக்க முடியாத அரணும், பிற சிறப்புக்களும் இல்லாத வரானாலும், அவர்கள் வாழும் நாட்டினுள் சென்று தாக்கி அவரை வெற்றிபெறுதல் அரிதாகும். 499

போர்க்களத்தில் வேலேந்திய வீரரையும் கோத்து எடுத்த கொம்புடைய அஞ்சாத களிற்றையும், அதன் கால் ஆழ்கின்ற சேற்று நிலத்தில், சிறுநரிகள் கொன்றுவிடும். 500

தொடங்கற்க எவ்வினையும் எள்ளற்க முற்றும்
இடங்கண்ட பின்னல் லது. 491

முரண்சேர்ந்த மொய்ம்பி னவர்க்கும் அரண்சேர்ந்தாம்
ஆக்கம் பலவுந் தரும். 492

ஆற்றாரும் ஆற்றி அடுப இடனறிந்து
போற்றார்கண் போற்றிச் செயின். 493

எண்ணியார் எண்ணம் இழப்பர் இடனறிந்து
துன்னியார் துன்னிச் செயின். 494

நெடும்புனலுள் வெல்லும் முதலை அடும்புனலின்
நீங்கின் அதனைப் பிற. 495

கடலோடா கால்வல் நெடுந்தேர் கடலோடும்
நாவாயும் ஓடா நிலத்து. 496

அஞ்சாமை அல்லால் துணைவேண்டா எஞ்சாமை
எண்ணி இடத்தாற் செயின். 497

சிறுபடையான் செல்லிடம் சேரின் உறுபடையான்
ஊக்கம் அழிந்து விடும். 498

சிறைநலனும் சீரும் இலரெனினும் மாந்தர்
உறைநிலத்தோடு ஒட்டல் அரிது. 499

காலாழ் களரின் நரியடுங் கண்ணஞ்சா
வேலாள் முகத்த களிறு. 500

அறம், பொருள், இன்பம், தன் உயிருக்கு அச்சம் என்னும் நான்கினது வகையாலும் ஆராய்ந்தே, ஒருவன்மீது நம்பிக்கை கொள்ள வேண்டும். 501

நல்ல குடியிலே பிறந்து, குற்றங்கள் இல்லாதவனாய், பழிச் சொல் வரக்கூடாதென்று அஞ்சும் மானமுள்ளவனிடத்திலேயே நம்பிக்கை வைக்க வேண்டும். 502

அருமையான நூல்களைக் கற்று, குற்றங்கள் எதுவும் இல்லாதவரிடத்திலும், ஆராய்ந்தால் அறியாமை இல்லாமல் இருப்பது என்பது அருமையாகும். 503

ஒருவனது குணங்களையும் குற்றங்களையும் ஆராய்ந்து, அவை இரண்டினுள் மிகுதியானவற்றைத் தெரிந்து, அதற்குத் தகுந்தபடியே அவனைக் கொள்ள வேண்டும். 504

ஒருவர் தாம் அடையும் பெருமைக்கும், மற்றொருவர் தாம் அடையும் சிறுமைக்கும், அவரவர்களின் செயல்களே தகுந்த உரைகல் ஆகும். 505

உலகப்பற்று இல்லாதவரை நம்ப வேண்டாம்; அவர் பற்றில்லாதவர்; அதனால் பிறர் கூறும் பழிச்சொல்லுக்கு வெட்கப்பட மாட்டார்கள். 506

அறியவேண்டியவைகளை அறியாத ஒருவரைத் துணையாக, அன்புடைமை காரணமாகத் தேர்ந்து கொண்டால் எல்லாவகையான அறியாமையையும் அது தரும். 507

தெளிவாக ஆராயாமல் ஒருவனைத் துணையாக நம்பியவனுக்கு, அவனுக்குமட்டுமின்றி அவன் வழிமுறையில் வருபவர்களுக்கும் தீராத துன்பம் உண்டாகும். 508

ஆராயாமல் யாரையுமே நம்புதல் வேண்டாம்; ஆராய்ந்து நம்பியதன் பின்னால், அவர் சொல்லும் பொருள்களை நல்லவையாகவே நம்புதல் வேண்டும். 509

ஒருவனைப்பற்றி ஆராயாமல் நம்புவதும், அப்படி ஆராய்ந்து நம்பியவனிடத்திலே சந்தேகம் கொள்ளுவதும் தீராத துன்பத்தையே தரும். 510

அறம்பொருள் இன்பம் உயிரச்சம் நான்கின்
திறந்தெரிந்து தேறப் படும். 501

குடிப்பிறந்து குற்றத்தின் நீங்கி வடுப்பரியும்
நாணுடையான் கட்டே தெளிவு. 502

அரியகற்று ஆசற்றார் கண்ணும் தெரியுங்கால்
இன்மை அரிதே வெளிறு. 503

குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல். 504

பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல். 505

அற்றாரைத் தேறுதல் ஓம்புக மற்றவர்
பற்றிலர் நாணார் பழி. 506

காதன்மை கந்தா அறிவறியார்த் தேறுதல்
பேதைமை யெல்லாம் தரும். 507

தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
தீரா இடும்பை தரும். 508

தேறற்க யாரையும் தேராது தேர்ந்தபின்
தேறுக தேறும் பொருள். 509

தேரான் தெளிவும் தெளிந்தான்கண் ஐயுறவும்
தீரா இடும்பை தரும். 510

ஒரு செயலால் வருகின்ற நன்மையையும் தீமையையும் ஆராய்ந்து, நல்லதைச் செய்யும் தன்மையுடையவனையே அந்தச் செயலுக்குப் பயன்படுத்த வேண்டும். 511

செல்வம் வருவதற்குரிய வழிகளைப் பெருகச்செய்து, அதனால் தன்னை வளமைப்படுத்திக் கொண்டு, மேலும் தகுந்தவற்றை ஆராய்பவனே செயலைச் செய்வானாக. 512

அன்பு, அறிவு, தெளிவு, பேராசை இல்லாமை என்னும் இந் நான்கு குணங்களும் நன்றாகக் கொண்டவனையே செயலுக்கு உரியவனாகத் தெளிய வேண்டும். 513

எல்லாவகையிலும் ஆராய்ந்து தெளிந்தபோதும், செய்யும் செயலின் வகையினாலே பொருத்தமற்று வேறுபடும் மாந்தர்கள் உலகில் பலர் ஆவர். 514

செய்யும் செயலைப்பற்றி நன்றாக அறிந்து, இடையில் வரும் துன்பங்களைத் தாங்கிச் செய்பவனை அல்லாமல், இவன் சிறந்தவன் என்று யாருக்கும் வேலை தரக்கூடாது. 515

செய்பவனைப்பற்றி நன்கு ஆராய்ந்து, செய்யும் செயலையும் ஆராய்ந்து, செய்யத்தகுந்த காலத்தோடு பொருந்தவே செயலைச் செய்ய வேண்டும். 516

இந்தச் செயலை, இன்ன காரணத்தால், இவன் செய்து முடிப்பான் என்று ஆராய்ந்து, அந்தச் செயலை அவனிடமே செய்யுமாறு விட்டுவிடுதல் வேண்டும். 517

இந்த வேலைக்குத் தகுந்தவன் இவன் என்று ஆராய்ந்து கண்டபின்னால், அவனையே அந்த வேலைக்கு உரியவனாகச் செய்ய வேண்டும். 518

எப்போதும் தன் தொழிலிலே முயற்சி உடையவனது நட்பினைப் பாராட்டாமல், வேறாக நினைப்பவனைவிட்டுச் செல்வம் தானும் நீங்கிவிடும். 519

தொழிலைச் செய்பவன் தன்கடமையைக் கோணாமல் செய்வானானால் உலகமும் கோணாது; ஆதலால் மன்னன் நாள் தோறும் அத்தகையவனையே செயலில் வைப்பானாக. 520

## 52. தெரிந்து வினையாடல்

நன்மையும் தீமையும் நாடி நலம்புரிந்த
தன்மையான் ஆளப் படும். 511

வாரி பெருக்கி வளம்படுத்து உற்றவை
ஆராய்வான் செய்க வினை. 512

அன்பறிவு தேற்றம் அவாவின்மை இந்நான்கும்
நன்குடையான் கட்டே தெளிவு. 513

எனைவகையான் தேறியக் கண்ணும் வினைவகையான்
வேறாகும் மாந்தர் பலர். 514

அறிந்தாற்றிச் செய்கிற்பாற்கு அல்லால் வினைதான்
சிறந்தானென்று ஏவற்பாற் றன்று. 515

செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோடு
எய்த உணர்ந்து செயல். 516

இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்து
அதனை அவன்கண் விடல். 517

வினைக்குரிமை நாடிய பின்றை அவனை
அதற்குரிய னாகச் செயல். 518

வினைக்கண் வினையுடையான் கேண்மை வேறாக
நினைப்பானை நீங்கும் திரு. 519

நாடோறும் நாடுக மன்னன் வினைசெய்வான்
கோடாமை கோடா துலகு. 520

ஒருவன் வறுமையாளன் ஆகிய போதும், பழையபடியே அவனிடம் அன்பு பாராட்டுதல் என்பது சுற்றத்தார் இடம் மட்டுமே காணப்படும் தனி இயல்பாகும். 521

அன்பில் நீங்காத சுற்றத்தார் அமைந்தனரானால், அது, குறைவில்லாமல் வளருகின்ற பல செல்வ நலங்களையும் ஒருவனுக்குக் கொடுப்பதாகும். 522

சுற்றத்தாரோடு மனங்கலந்து பழகாத ஒருவனுடைய வாழ்வானது, கரையில்லாத குளப்பரப்பிலே நீர் நிரம்பினாற் போலப் பயனற்றதாகும். 523

சுற்றத்தாரால் தான் சூழ்ந்திருக்கும்படியாக வாழ்தலே, ஒருவன் செல்வத்தைப் பெற்றதனாலே அடைந்த பயனாக இருக்க வேண்டும். 524

சுற்றத்தார்க்கு வேண்டிய பொருளைக் கொடுத்தலும், அவரோடு இனிதாகப் பேசுதலும் செய்வானாயின், அவன் சுற்றத்தார் பலராலும் சூழப்படுவான். 525

மிகுதியாகக் கொடுக்கும் இயல்புள்ளவனாயும், சினத்தை விரும்பாதவனாயும் ஒருவன் இருந்தால், அவனைப்போல் சுற்றம் உடையவர் உலகில் யாரும் இல்லை. 526

காக்கை உணவைக் கண்டதும் மறைக்காமல் தன் இனத்தைக் கூவி உடனிருந்தே உண்ணும். அத்தகைய இயல்பினருக்கே சுற்றப் பெருக்கமும் உண்டாகும். 527

எல்லாரையும் ஒரே தன்மையாகப் பொதுப்பட நோக்காது, அவரவர் தகுதிக்கேற்ப நோக்கிப் செய்வன செய்தால், அச்சிறப்பைக் கருதிச் சுற்றத்தார் சூழ்வர். 528

சுற்றத்தாராக இருந்து தன்னைப் பிரிந்தவர்கள், பிரிவதற்கு ஏற்பட்ட காரணத்தை நீக்கிவிட்டால், மீண்டும் அவர்களே வந்து சேர்ந்திருப்பார்கள். 529

காரணம் இல்லாமல் தன்னிடமிருந்து பிரிந்து, பின் ஒரு காரணத்தால் தன்பால் வந்த உறவினனை, அரசன் அதனைச் செய்து அவனைத் தழுவிக் கொள்ளவேண்டும். 530

பற்றற்ற கண்ணும் பழைமை பாராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே யுள. 521

விருப்பறாச் சுற்றம் இயையின் அருப்பறா
ஆக்கம் பலவும் தரும். 522

அளவளாவு இல்லாதான் வாழ்க்கை குளவளாக்
கோடின்றி நீர்நிறைந் தற்று. 523

சுற்றத்தாற் சுற்றப்பட ஒழுகல் செல்வந்தான்
பெற்றத்தாற் பெற்ற பயன். 524

கொடுத்தலும் இன்சொலும் ஆற்றின் அடுக்கிய
சுற்றத்தான் சுற்றப் படும். 525

பெருங்கொடையான் பேணான் வெகுளி அவனின்
மருங்குடையார் மாநிலத் தில். 526

காக்கை கரவா கரைந்துண்ணும் ஆக்கமும்
அன்னநீ ரார்க்கே யுள. 527

பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின்
அதுநோக்கி வாழ்வார் பலர். 528

தமராகித் தற்றுறந்தார் சுற்றம் அமராமைக்
காரணம் இன்றி வரும். 529

உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்தன்
இழைத்திருந்து எண்ணிக் கொளல். 530

சிறப்பான உவகையாலே மகிழ்ச்சியடைந்து, அதனால் கொள்ளும் மறதியானது, அளவுகடந்து கொள்ளும் சினத்தைக் காட்டிலும் தீமை தருவதாகும். 531

நாளுக்குநாள் பெருகும் வறுமைத் துயரமானது ஒருவனது அறிவைக் கெடுத்தலைப்போல, மறதியானது, ஒருவனது புகழையும் தவறாமல் கெடுத்து விடும். 532

மறதி உடையவர்களுக்கு புகழ் உடைமை என்பது இல்லை. அது உலகத்திலுள்ள எத்தகைய நூலோர்க்கும் ஒத்ததாக விளங்கும் ஒரு முடிவு ஆகும். 533

அச்சம் உடையவர்களுக்கு அரண்காவல் இருந்தும் பயனில்லை, அவ்வாறே மறதி உடையவர்களுக்கு நல்ல செல்வநலம் இருந்தாலும் அதனால் பயன் இல்லை. 534

துன்பம் வருவதற்கு முன்னாகவே தன்னைக் காத்துக் கொள்ளாமல் மறதியாக இருந்தவன், பின்னர்த் துன்பம் வந்த போது, தன்பிழையை நினைத்து வருந்துவான். 535

மறதியில்லாத இயல்பு எவரிடத்தும் எக்காலத்தும் குறையாமல் இருந்தால், அதற்கு ஒப்பாக நன்மை தருவது வேறு எதுவும் இல்லை. 536

மறவாமை என்னும் கருவியினாலே எதனையும் பேணிச் செய்தால், செய்வதற்கு அரியன என்று நினைத்துக் கைவிடும் செயல்களும் இல்லையாகும். 537

சான்றோர்கள் சிறந்தவையாகப் போற்றும் கடமைகளைப் போற்றிச் செய்தல் வேண்டும். அவ்வாறு செய்யாமல் மறந்தவருக்கு எழுமையும் நன்மை இல்லை. 538

தாம், தம்முடைய மகிழ்ச்சியினாலே செருக்கடையும்போது, முன்னர் அப்படிப்பட்ட மகிழ்ச்சியினாலே மறதியடைந்து கெட்டழிந்தவர்களை நினைத்துப் பார்க்க வேண்டும். 539

தான் அடையக் கருதியதை இடைவிடாமல் மறதியின்றி நினைக்கக் கூடுமானால், ஒருவன், தான் நினைத்ததை அடைதல் என்பது எளிதாயிருக்கும். 540

இறந்த வெகுளியில் தீதே சிறந்த
உவகை மகிழ்ச்சியிற் சோர்வு. 531

பொச்சாப்புக் கொல்லும் புகழை அறிவினை
நிச்ச நிரப்புக்கொன் றாங்கு. 532

பொச்சாப்பார்க் கில்லை புகழ்மை அதுவுலகத்து
எப்பானூ லோர்க்குந் துணிவு. 533

அச்ச முடையார்க் கரணில்லை யாங்கில்லை
பொச்சாப்பு உடையார்க்கு நன்கு. 534

முன்னுறக் காவாது இழுக்கியான் தன்பிழை
பின்னூறு இரங்கி விடும். 535

இழுக்காமை யார்மாட்டும் என்றும் வழுக்காமை
வாயி னதுவொப்ப தில். 536

அரியவென் றாகாத இல்லை பொச்சாவாக்
கருவியாற் போற்றிச் செயின். 537

புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டுஞ் செய்யாது
இகழ்ந்தார்க்கு எழுமையும் இல். 538

இகழ்ச்சியிற் கெட்டாரை உள்ளுக தாந்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து. 539

உள்ளிய தெய்தல் எளிதுமன் மற்றுந்தான்
உள்ளிய துள்ளப் பெறின். 540

நடுநிலைமை தவறாமல், யாரிடத்தும் இரக்கம் காட்டாமல், குற்றத்தின் கடுமையை ஆராய்ந்து, அதற்குத் தகுந்த தண்டனை விதிப்பதே அரசனுக்கு முறையாகும். 541

மழையின் செம்மையை எதிர்பார்த்து உலகத்து உயிர்கள் எல்லாம் வாழும்; மன்னவனின் செங்கோன்மையை எதிர் பார்த்துக் குடிகள் வாழ்வார்கள். 542

அந்தணரது நூல்களுக்கும், உலகில் அறம் நிலைப்பதற்கும் அடிப்படையாக நின்றது, மன்னவனது அறம் தவறாத செங்கோன்மையே ஆகும். 543

குடிகளை அணைத்துக்கொண்டு செங்கோல் செலுத்தும் மாநிலத்து வேந்தனின் அடிகளைத் தழுவி, இவ்வுலகத்து, வாழ்வும் நிலைபெறுவதாகும். 544

அரசனுக்குரிய இயல்போடு செங்கோல் செலுத்தும் மன்னவனின் நாட்டிலே, பருவமழையும், விளைபொருள்களும் ஒருங்கே மலிந்திருக்கும். 545

மன்னவனுக்கு வெற்றியளிப்பது அவன் கையிலுள்ள வேல் அல்ல; அவன் செங்கோன்மை கோணாமல் இருந்ததானால் அதுவே வெற்றி அளிப்பதாகும். 546

உலகத்தாரை எல்லாம் மன்னவன் காப்பாற்றி வருவான்; முறை தவறாமல் அவன் செங்கோல் செலுத்தி வந்தால், அது அவனைக் காப்பாற்றி நிற்கும். 547

முறையிட வருபவரது காட்சிக்கு எளியவனாய், அவர்கள் குறைகளைக்கேட்டு ஆராய்ந்து முறைசெய்யாத மன்னவன், தாழ்ந்த நிலையிலே சென்று தானே கெடுவான். 548

குடிகளைப் பகைவரிடமிருந்து காத்தும், அவர்களுக்கு நன்மை செய்து பேணியும், குற்றங்களை நீக்கியும் முறைசெய்தால் வேந்தனுக்குக் குற்றம் இல்லை; அதுவே அவன் தொழில். 549

கொடிய செய்வாரைக் கொலைத்தண்டனையால் தண்டித்தும் மற்றவர்களை அருளோடு காத்தும் முறைசெய்தல், பசும் பயிரில் களையெடுப்பது போன்ற சிறந்த செயலாகும் 550

ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந்து யார்மாட்டும்
தேர்ந்துசெய் வஃதே முறை. 541

வானோக்கி வாழும் உலகெல்லாம் மன்னவன்
கோனோக்கி வாழுங் குடி. 542

அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்
நின்றது மன்னவன் கோல். 543

குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு. 544

இயல்புளிக் கோலோச்சும் மன்னவன் நாட்ட
பெயலும் விளையுளும் தொக்கு. 545

வேலன்று வென்றி தருவது மன்னவன்
கோலதூஉம் கோடா தெனின். 546

இறைகாக்கும் வையக மெல்லாம் அவனை
முறைகாக்கும் முட்டாச் செயின். 547

எண்பதத்தான் ஓரா முறைசெய்யா மன்னவன்
தண்பதத்தான் தானே கெடும். 548

குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்
வடுவன்று வேந்தன் தொழில். 549

கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர். 550

குடிகளை வருந்தச்செய்யும் செயல்களையே மேற்கொண்டு தீமை செய்து ஆட்சி நடத்துகிற வேந்தன், கொலையையே தொழிலாகக் கொண்டவரிலும் கொடியவனாவான். 551

அரசன் குடிகளிடம் முறைகடந்து பொருளைக் கேட்பது, கையிலே வேலோடு நிற்கும் கள்வன், 'எல்லாவற்றையும் தந்துவிடு' என்று கேட்பதைப் போன்றதாகும். 552

நாட்டிலே நாள்தோறும் ஏற்படும் நிலைமையை ஆராய்ந்து தகுந்தபடி முறைசெய்யாத மன்னவன், நாளுக்கு நாள் தன் நாட்டையும் கெடுத்துவிடுவான். 553

மேல் நடப்பதைப்பற்றி கருதாமல், முறைதவறி அரசாளுகின்ற மன்னவன், தன் பொருள் வளத்தையும், நாட்டு மக்களது அன்பையும், ஒருங்கே இழந்து விடுவான். 554

கொடுங்கோல் ஆட்சியால் அல்லல்பட்ட மக்கள், அதைப் பொறுக்கமாட்டாது அழுத கண்ணீரே, ஓர் அரசனின் செல்வத்தை அழிக்கும் படை ஆகும். 555

செங்கோன்மையால்தான் மன்னர்க்குப் புகழ் நிலைக்கிறது; அந்தச் செங்கோன்மை இல்லை என்றால், பிறவற்றால் வரும் புகழ் எல்லாம் நிலை பெறாது. 556

மழையில்லாத நிலைமை உலகத்துக்கு எத்தகைய துன்பம் தருமோ, அவ்வாறே அரசனின் அருளில்லாத தன்மை, அவன் நாட்டில் வாழ்பவருக்குத் துன்பம் தரும். 557

முறைப்படி ஆட்சி செய்யாத மன்னவனின் கொடுங்கோலின்கீழ் வாழ்ந்திருந்தால், ஏழ்மையைக் காட்டிலும், செல்வம் உடைமையே துன்பம் தரும். 558

ஆட்சிமுறை கோணி மன்னவன் ஆட்சி செய்தால், பருவ மழையானது தவறிப்போக, மேகமும் வேண்டுங்காலத்து மழை பொழியாது ஒதுங்கிப் போகும். 559

காவலன் முறையோடு நாட்டைக் காத்து வராவிட்டால், அந்நாட்டிலே பசுக்களும் பால்வளம் குன்றும்; அறு தொழிலோரும் மறைநூல்களை மறப்பார்கள். 560

கொலைமேற்கொண் டாரிற் கொடிதே அலைமேற்
அல்லவை செய்தொழுகும் வேந்து. (கொண்டு 551

வேலொடு நின்றான் இடுவென் றதுபோலும்
கோலொடு நின்றான் இரவு. 552

நாடொறும் நாடி முறைசெய்யா மன்னவன்
நாடொறும் நாடு கெடும். 553

கூழும் குடியும் ஒருங்கிழக்கும் கோல்கோடிச்
சூழாது செய்யும் அரசு. 554

அல்லற்பட் டாற்றாது அழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை. 555

மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை அஃதின்றேல்
மன்னாவாம் மன்னர்க் கொளி. 556

துளியின்மை ஞாலத்திற்கு எற்றற்றே வேந்தன்
அளியின்மை வாழும் உயிர்க்கு. 557

இன்மையின் இன்னாது உடைமை முறைசெய்யா
மன்னவன் கோற்கீழ்ப் படின். 558

முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி
ஒல்லாது வானம் பெயல். 559

ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூன்மறப்பர்
காவலன் காவான் எனின். 560

ஒருவனுடைய குற்றத்தைத் தகுந்த வழிகளாலே ஆராய்ந்து, மீளவும் அதைச் செய்யாதபடி, குற்றத்திற்குத் தகுந்தபடி தண்டிப்பதே வேந்தன் கடமையாகும். 561

நெடுங்காலம் ஆக்கம் நீங்காமல் இருத்தலை விரும்புகிறவர்கள், குற்றஞ் செய்தவரைத் தண்டிக்கும்போது, கடுமையைக் காட்டினாலும் அளவோடு தண்டிப்பாராக. 562

குடிகள் அச்சம் அடையும் செயல்களைச் செய்கின்ற கொடுங்கோல் அரசன், மிகவும் விரைவாகவே கெட் டுப்போய் அழிவை அடைவான். 563

'எம் அரசன் கடுமையானவன்' என்று மக்கள் சொல்லும் பழிச்சொல்லுக்கு ஆளாகிய வேந்தன், தன் ஆயுளும் விரைவில் கெட்டுப்போக, அழிவை அடைவான். 564

எளிதாகக் காணமுடியாத தன்மையும், கடுமையான முகங்காட்டும் இயல்பும் உள்ளவனின் பெருஞ்செல்வம், பேயால் கவனித்துக் காக்கும் புதையல் போன்றதாகும் 565

கடுமையான பேச்சும், இரக்கமற்ற தன்மையும் உடையவனானால், அவ்வரசனது பெருஞ்செல்வமும் நீடித்திருக்காமல் தேய்ந்து அப்போதே கெடும். 566

கடுமையான சொல்லும், முறைகடந்த தண்டனையும், அவ்வரசனுடைய பகைவரை வெல்லும் வலிமையைத் தேய்த்து அழிக்கும் அரமாகும். 567

அமைச்சர் முதலானவரோடு கலந்து ஆராய்ந்து செய்யாமல், தன் சினத்தின் வழியிலேயே சென்று பிறரைச் சீறுவானானால், அவனுடைய செல்வம் சுருங்கும் 568

போர் வருவதற்கு முன்பாகவே பாதுகாப்பு ஏற்பாடுகளைச் செய்யாத வேந்தன், அது வந்த காலத்தில், பாதுகாப்பு இல்லாமல் அஞ்சியவனாக, அழிந்து போவான். 569

கொடுங்கோல் ஆட்சியானது மூடர்க 'ளயே தனக்குத் துணையாக்கிக் கொள்ளும்; அந்த ஆட்ச ்ய அல்லாமல் பூமிக்குப் பாரம் என்பது வேறு யாதும் இல்ல. 570

தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தால்
ஒத்தாங்கு ஒறுப்பது வேந்து. 561

கடிதோச்சி மெல்ல எறிக நெடிதாக்கம்
நீங்காமை வேண்டு பவர். 562

வெருவந்த செய்தொழுகும் வெங்கோலன் ஆயின்
ஒருவந்தம் ஒல்லைக் கெடும். 563

இறைகடியன் என்றுரைக்கும் இன்னாச்சொல் வேந்தன்
உறைகடுகி ஒல்லைக் கெடும். 564

அருஞ்செவ்வி இன்னா முகத்தான் பெருஞ்செல்வம்
பேஎய்கண் டன்ன துடைத்து. 565

கடுஞ்சொல்லன் கண்ணிலன் ஆயின் நெடுஞ்செல்வம்
நீடின்றி ஆங்கே கெடும். 566

கடுமொழியுங் கையிகந்த தண்டமும் வேந்தன்
அடுமுரண் தேய்க்கும் அரம். 567

இனத்தாற்றி எண்ணாத வேந்தன் சினத்தாற்றிச்
சீறின் சிறுகுந் திரு. 568

செருவந்த போழ்திற் சிறைசெய்யா வேந்தன்
வெருவந்து வெய்து கெடும். 569

கல்லார்ப் பிணிக்குங் கடுங்கோல் அதுவல்லது
இல்லை நிலக்குப் பொறை. 570

'கண்ணோட்டம்' என்று சொல்லப்படுகின்ற மிகப் பெரிய அழகு இருப்பதனாலேதான், இவ்வுலகமும் அழிவு அடையாமல் நிலைப்பெற்றிருக்கிறது. 571

உலக நடைமுறை என்பது கண்ணோட்டத்தினால் நடந்து வருவதே; ஆகவே, கண்ணோட்டம் இல்லாதவர்கள் இருப்பது உலகத்திற்கு வீண் சுமைதான். 572

பொருளோடு பாடல் பொருந்தவில்லை என்றால் அந்த இசையினால் பயன் இல்லை; அதுபோலவே, கண்ணோட்டத் தோடு அமையாத கண்களாலும் பயன் இல்லை. 573

தேவையான அளவுக்குக் கண்ணோட்டம் இல்லாத கண்ணானது, முகத்திலே இருப்பதுபோலத் தோன்றுவதைத் தவிர, உடையவனுக்கு என்ன நன்மையைத் தரும்? 574

கண்ணுக்கு அழகுதரும் ஆபரணம் கண்ணோட்டமே! அந்தக் கண்ணோட்டமாகிய ஆபரணம் இல்லையானால், அது 'புண்' என்றே சான்றோரால் கருதப்படும். 575

கண்ணோடு பொருந்தியவராக இருந்தும், கண்ணோட்டம் ஆகிய செயலைச் செய்யாதவர்கள், மண்ணோடு பொருந்தியுள்ள மரத்தைப் போன்றவர்கள் ஆவர். 576

கண்ணோட்டம் இல்லாதவர்கள், கண்கள் இருந்தாலும் குருடர்களே; கண்ணுடையவர்கள், கண்ணோட்டம் இல்லாமல் இருத்தல் என்பது பொருத்தமில்லை. 577

தொழிலிலே கெடுதல் ஏற்படாமல், எவரிடமும் கண்ணோட்டத் துடன் நடந்துகொள்ள வல்லவர்களுக்கு, இவ்வுலகமே உரிமை உடையதாகும். 578

தம்மை வருத்தும் தன்மை உடையவரிடத்திலும், கண்ணோட்டம் உடையவராக, அவரது குற்றத்தையும் பொறுத்து நடக்கும் பண்பே சிறந்ததாகும். 579

விரும்பத்தகுந்த 'கண்ணோட்டம்' என்னும் நாகரிகத்தை விரும்பும் சான்றோர்கள், பழகியவர் நஞ்சைப் பெய்வதைக் கண்டாலும், அதனை உண்டு அமைவார்கள். 580

கண்ணோட்டம் என்னுங் கழிபெருங் காரிகை
உண்மையான் உண்டிவ் வுலகு. 571

கண்ணோட்டத் துள்ளது உலகியல் அஃதிலார்
உண்மை நிலக்குப் பொறை. 572

பண்ணென்னாம் பாடற் கியைபின்றேல் கண்ணென்னாம்
கண்ணோட்டம் இல்லாத கண். 573

உளபோல் முகத்தெவன் செய்யும் அளவினால்
கண்ணோட்டம் இல்லாத கண். 574

கண்ணிற்கு அணிகலம் கண்ணோட்டம் அஃதின்றேல்
புண்ணென்று உணரப் படும். 575

மண்ணோடு இயைந்த மரத்தனையர் கண்ணோடு
இயைந்துகண் ணோடா தவர். 576

கண்ணோட்ட மில்லவர் கண்ணிலர் கண்ணுடையார்
கண்ணோட்டம் இன்மையும் இல். 577

கருமஞ் சிதையாமற் கண்ணோட வல்லார்க்கு
உரிமை உடைத்திவ் வுலகு. 578

ஒருத்தாற்றும் பண்பினார் கண்ணுங்கண் ணோடிப்
பொறுத்தாற்றும் பண்பே தலை. 579

பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர். 580

ஒற்றர்களும், புகழ் அமைந்த அறநூலும் என்னும் இந்த இரண்டு பகுதியையுமே, ஒரு மன்னன் தனக்குரிய இரு கண்களாகக் கொள்ளல் வேண்டும். 581

எல்லாருக்கும் நிகழ்கின்ற எல்லாவற்றையும், எல்லாக் காலத்திலும், மிகவும் விரைவாக ஒற்றர்மூலம் அறிந்து கொள்ளுதல், வேந்தனுக்கு உரிய தொழிலாகும். 582

பகைநாட்டு நிகழ்ச்சிகளை ஒற்றர்மூலமாகத் தெரிந்து கொண்டு, அவற்றின் பொருளையும் ஆராய்ந்து தெளியாத மன்னன், போரில் வெற்றி கொள்வதற்கு வழியே இல்லை. 583

அரசன் செயல்களைச் செய்பவர்கள், அரசனுக்கு உரிய சுற்றத்தினர், அரசனை விரும்பாத பகைவர், என்று சொல்லப் படும் அனைவரையும் ஆராய்வதே, ஒற்றரின் கடமை. 584

சந்தேகப்படாத மாற்றுருவுடன், எவருடைய பார்வைக்கும் அஞ்சாமல், அறிந்ததைத் தன் அரசனைத்தவிரப் பிறருக்கு வெளிப்படுத்தாமலிருக்க வல்லவனே ஒற்றன். 585

புகமுடியாத இடங்களுக்கும், துறவியர் வேடத்தோடு சென்று, அனைத்தையும் ஆராய்ந்து, எவர் யாது செய்தாலும் அதனால் சோர்வடையாதவனே ஒற்றன். 586

மறைவான பேச்சுக்களையும் கேட்டு அறியக்கூடிய திறமை உள்ளவனாகி, தான் அறிந்தவற்றில் எவ்விதச் சந்தேகமும் இல்லாதவனே நல்ல ஒற்றன். 587

ஓர் ஒற்றன் அறிந்துவந்து சொன்ன செய்தியையும், மற்றுமோர் ஒற்றனை ஏவி அறிந்து வருமாறு செய்து, உண்மையை ஒப்பிட்டு அறிதல் வேண்டும். 588

ஓர் ஒற்றன் மற்மோர் ஒற்றனை அறியாதபடி பார்த்துக் கொள்வதோடு, இப்படி மூன்று ஒற்றர் சொல்வதையும் ஒருங்கே ஆராய்ந்தே, உண்மை தெளியவேண்டும் 589

பிறர் அறியும்படியாக ஒற்றனுக்குச் சிறப்புக்களைச் செய்யக் கூடாது; செய்தால், மறைக்க வேண்டிய இரகசியத்தை அரசனே வெளிப்படுத்தினவன் ஆவான். 590

ஒற்றும் உரைசான்ற நூலும் இவையிரண்டும்
தெற்றென்க மன்னவன் கண். 581

எல்லார்க்கும் எல்லாம் நிகழ்பவை எஞ்ஞான்றும்
வல்லறிதல் வேந்தன் தொழில். 582

ஒற்றினான் ஒற்றிப் பொருள்தெரியா மன்னவன்
கொற்றங் கொளக்கிடந்தது இல். 583

வினைசெய்வார் தம்சுற்றம் வேண்டாதார் என்றாங்கு
அனைவரையும் ஆராய்வது ஒற்று. 584

கடாஅ உருவொடு கண்அஞ்சாது யாண்டும்
உகாஅமை வல்லதே ஒற்று. 585

துறந்தார் படிவத்த ராகி இறந்தாராய்ந்து
என்செயினும் சோர்விலது ஒற்று. 586

மறந்தவை கேட்கவற் றாகி அறிந்தவை
ஐயப்பாடு இல்லதே ஒற்று. 587

ஒற்றொற்றித் தந்த பொருளையும் மற்றுமோர்
ஒற்றினால் ஒற்றிக் கொளல். 588

ஒற்றொற் றுணராமை ஆள்க உடன்மூவர்
சொல்தொக்க தேறப் படும். 589

சிறப்பறிய ஒற்றின்கண் செய்யற்க செய்யின்
புறப்படுத்தா னாகும் மறை. 590

ஊக்கம் உடைமையே 'உடையவர்' என்று சொல்லப்படும் சிறப்புக்கு உரியது; ஊக்கம் இல்லாதவர் வேறு எதைப் பெற்றிருந்தாலும் உடையவர் அல்லர். 591

ஊக்கம் உடைமையே ஒருவனது நிலையான செல்வம் ஆகும்; மற்றைய செல்வங்கள் எல்லாம் நிலைத்திருக்காமல் ஒரு காலத்தில் நீங்கியும் போய்விடும். 592

உறுதியான ஊக்கத்தையே தம்முடைய கைப்பொருளாகப் பெற்றவர்கள், தாம் செல்வம் இழந்தபோதும், இழந்தோமே என்று நினைத்து, வருந்த மாட்டார்கள். 593

தளராத ஊக்கம் உடையவர்களிடத்திலே, ஆக்கம், தானே அவரிருக்கும் இடத்திற்கு வழிகேட்டுக்கொண்டு போய்ச் சென்று, அவரிடம் நிலையாகச் சேர்ந்திருக்கும். 594

நீர்ப்பூக்களினது தண்டின் நீளமானது நீரின் ஆழத்தின் அளவினது ஆகும்; அதுபோலவே, மக்களின் உயர்வும் அவர்களுடைய ஊக்கத்தின் அளவினதே ஆகும். 595

உயர்ந்த நிலைகளையே நினைவில் எல்லாரும் நினைத்து வரவேண்டும்; அந்த நிலை கைகூடாதபோதும், அப்படி நினைப்பதைமட்டும் கைவிடவே கூடாது. 596

தன்னுடம்பில் தைத்துள்ள அம்புகளாலே வேதனை அடைந்த போதும், களிறு, தன் பெருமையை நிலைநிறுத்தும்; அவ்வாறே ஊக்கமுள்ளவர் அழிவிலும் தளரமாட்டார்கள். 597

'யாம் வள்ளன்மை உடையோம்' என்னும் இறுமாந்த நிலையை, ஊக்கம் இல்லாதவர்கள், இவ்வுலகத்தில் ஒருபோதும் அடையவே மாட்டார்கள். 598

பெருத்த உடலும் கூர்மையான கொம்புகளும் இருந்தாலும், யானையானது, மனவூக்கமுள்ள புலி தன்மீது பாய்ந்தால், தான் அச்சம் கொள்ளும். 599

ஒருவனுக்கு உள்ள செல்வம் என்பது ஊக்கமே! அந்த ஊக்கம் ஆகிய செல்வம் இல்லாதவர், உருவத்தால் மக்கள் போலத் தோன்றினாலும், மரங்களைப் போன்றவரே! 600

உடையர் எனப்படுவது ஊக்கம் அஃதில்லார்
உடையது உடையரோ மற்று. 591

உள்ளம் உடைமை உடைமை பொருளுடைமை
நில்லாது நீங்கி விடும். 592

ஆக்கம் இழந்தேமென்று அல்லாவார் ஊக்கம்
ஒருவந்தம் கைத்துடை யார். 593

ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா
ஊக்கம் உடையான் உழை. 594

வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
உள்ளத் தனையது உயர்வு. 595

உள்ளுவ தெல்லாம் உயர்வுள்ளல் மற்றது
தள்ளினும் தள்ளாமை நீர்த்து. 596

சிதைவிடத்து ஒல்கார் உரவோர் புதையம்பிற்
பட்டுப்பா டூன்றுங் களிறு. 597

உள்ளம் இலாதவர் எய்தார் உலகத்து
வள்ளியம் என்னுஞ் செருக்கு. 598

பரியது கூர்ங்கோட்ட தாயினும் யானை
வெரூஉம் புலிதாக் குறின். 599

உரமொருவற்கு உள்ள வெறுக்கை அஃதில்லார்
மரம் மக்களாதலே வேறு. 600

ஒருவன் வந்துபிறந்த குடியென்னும் அணையா விளக்கானது, சோம்பல் என்னும் மாசு படரப்பட , ஒளி மழுங்கி, முடிவில் அணைந்தும் போய்விடும். 601

தாம் பிறந்த குடியை மேன்மேலும் உயர்ந்த குடியாக உயர்த்த விரும்புகிறவர்கள், சோம்பலை அறவே விலக்கி, முயற்சியாளராக விளங்க வேண்டும். 602

விலக்கவேண்டிய சோம்பலைத் தன்னிடத்தே கொண்டிருக்கும் அறிவற்றவன், பிறந்த குடியின் பெருமையானது, அவன் அறிவதற்கு முன்பாகவே அழிந்துவிடும். 603

சோம்பலிலே ஆழ்ந்துவிட்டுச் சிறந்த முயற்சிகளிலே ஈடுபடாமல் இருப்பவருடைய குடிப்பெருமையும் கெட்டு, குற்றமும் நாளுக்குநாள் பெருகும். 604

சோம்பல், எதையும் தாமதமாகவே செய்தல், மறதி, தூக்கம் என்னும் நான்கும், தாம் அழிந்துவிடக் கருதும் தன்மை கொண்டவர்கள், விரும்பி ஏறும் கப்பல்களாம். 605

நாடாளும் தலைவருடைய தொடர்பு இயல்பாக வந்து கிடைத்த காலத்திலும், சோம்பல் உடையவர்கள், அதனால் எந்தவிதமான சிறந்த பயனையும் அடைவதில்லை. 606

சோம்பலை விரும்பி, நல்ல முயற்சிகளைக் கைவிடுகிறவர்கள், கடுமையாகப் பிறர் இகழ்ந்து பேசுகின்ற சொற்களைக் கேட்கின்ற நிலைமையை அடைவார்கள். 607

நல்ல குடியிலே பிறந்தவனிடம், சோம்பல் என்பது சேர்ந்து விடுமானால், அது, அவனை, அவன் எதிரிகளுக்கு விரைவில் அடிமைப்படுத்தி விடும். 608

ஒருவன், தன்னிடமுள்ள சோம்பலை ஒழித்துவிட்டான் என்றால், அவன் தன் குடும்பத்தை நடத்துவதில் ஏற்பட்ட குற்றங்கள் எல்லாம் நீங்கிவிடும். 609

சோம்பல் இல்லாத அரசன், தன் அடியாலே உலகத்தை அளந்த திருமால் தாவிய நிலப்பரப்பு எல்லாம், தானும் தன் முயற்சியால் ஒருங்கே பெற்றுவிடுவான். 610

குடியென்னுங் குன்றா விளக்கம் மடியென்னும்
மாசூர மாய்ந்து கெடும். 601

மடியை மடியா ஒழுகல் குடியைக்
குடியாக வேண்டு பவர். 602

மடிமடிக் கொண்டொழுகும் பேதை பிறந்த
குடிமடியும் தன்னினும் முந்து. 603

குடிமடிந்து குற்றம் பெருகும் மடிமடிந்து
மாண்ட உஞற்றி லவர்க்கு. 604

நெடுநீர் மறவி மடிதுயில் நான்கும்
கெடுநீரார் காமக் கலன். 605

படியுடையார் பற்றமைந்தக் கண்ணும் மடியுடையார்
மாண்பயன் எய்தல் அரிது. 606

இடிபுரிந்து எள்ளுஞ்சொல் கேட்பர் மடிபுரிந்து
மாண்ட உஞற்றி லவர். 607

மடிமை குடிமைக்கண் தங்கின்தன் ஒன்னார்க்கு
அடிமை புகுத்தி விடும். 608

குடியாண்மை யுள்வந்த குற்றம் ஒருவன்
மடியாண்மை மாற்றக் கெடும். 609

மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான்
தாஅய தெல்லாம் ஒருங்கு. 610

இச்செயலை நம்மாலே செய்ய முடியாதென்று தளர்ச்சி கொள்ளாமல் இருக்கவேண்டும்; இடைவிடாத முயற்சியானது அதனைச் செய்துமுடிக்கும் வலிமையைத் தரும். 611

ஒரு செயலைச் செய்துமுடிக்காமல் இடையிலே விட்டவரை உலகமும் கைவிடும்; ஆதலால், செய்யும் செயலிடத்திலே முயற்சியற் றிருப்பதை விட்டுவிட வேண்டும். 612

'எல்லாருக்கும் உதவி செய்தல்' என்னும் செருக்கானது, விடாத முயற்சி உடையவர்கள் என்னும் பண்பிலேதான் நிலைத்திருப்பது ஆகும். 613

போருக்கு அஞ்சுகின்ற பேடியின் கையிலுள்ள வாளிடத்தில் ஆண்மைச் செயல் எதுவும் தோன்றாததுபோல, விடாமுயற்சி இல்லாதவன் உதவுகின்ற தன்மையும் கெட்டுப்போகும். 614

தன் இன்பத்தை விரும்பாமல், எடுத்த செயலை முடிப்பதையே விரும்புகின்றவன், தன் சுற்றத்தாரின் துன்பத்தைப் போக்கி, அவர்களைத் தாங்கும் தூண் ஆவான். 615

இடைவிடாத முயற்சியானது ஒருவனுடைய செல்வத்தைப் பெருகச் செய்யும்; முயற்சி இல்லாமையோ, அவனிட த்து இல்லாமையை உண்டாக்கும். 616

சோம்பல் இல்லாதவனின் முயற்சியிலே தாமரையாளான திருமகள் சென்று வாழ்வாள்; சோம்பலிலே கருநிறம் உடைய மூதேவிதான் சென்று வாழ்வாள். 617

நல்ல விதி இல்லாமலிருத்தல் என்பது குற்றம் ஆகாது; அறிய வேண்டியவைகளை அறிந்து முயற்சி செய்யாமல் இருப்பதே ஒருவனுக்குப் பழி ஆகும். 618

தெய்வத்தின் அருளாலே கைகூடாது போனாலும், ஒருவனுடைய முயற்சியானது, தன் உடல் வருத்தத்தின் கூலியைத் தப்பாமல் தந்துவிடும். 619

சோர்வு இல்லாமல் இடைவிடாது முயற்சிகளைச் செய்பவர்கள், கெடுதலான விதியையும் வென்று, புறங்காட்டி ஓடச்செய்பவர் ஆவார்கள். 620

அருமை யுடைத்தென்று அசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும். 611

வினைக்கண் வினைகெடல் ஓம்பல் வினைக்குறை
தீர்ந்தாரின் தீர்ந்தன்று உலகு. 612

தாளாண்மை யென்னுந் தகைமைக்கண் தங்கிற்றே
வேளாண்மை யென்னுஞ் செருக்கு. 613

தாளாண்மை இல்லாதான் வேளாண்மை பேடிகை
வாளாண்மை போலக் கெடும். 614

இன்பம் விழையான் வினைவிழைவான் தன்கேளிர்
துன்பம் துடைத்தூன்றுந் தூண். 615

முயற்சி திருவினை யாக்கும் முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும். 616

மடியுளான் மாமுகடி யென்ப மடியிலான்
தாளுளாள் தாமரையி னாள். 617

பொறியின்மை யார்க்கும் பழியன்று அறிவறிந்து
ஆள்வினை இன்மை பழி. 618

தெய்வத்தா னாகாது எனினும் முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும். 619

ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர். 620

துன்பங்கள் வரும்போது, மனம் தளராமல், நகைத்து ஒதுக்குக; துன்பங்களைக் கடப்பதற்கு அதனைவிடச் சிறந்த வழி வேறு எதுவும் இல்லை. 621

வெள்ளமாகப் பெருகிவருகின்ற துன்பங்களும், அறிவு உடையவன் தன் உள்ளத்திலே நினைத்தபோது, அவனைவிட்டு மறைந்து போய்விடும். 622

இடையூறுகள் வந்தபோது அதற்காக வருந்தாத மனத்தெளிவு உள்ளவர்கள், துன்பத்துக்குத் துன்பம் உண்டாக்கி அதனைப் போக்கி விடுவார்கள். 623

தடைப்படும் இடங்களில் எல்லாம், தளர்ந்துவிடாமல் வண்டியை இழுத்துச் செல்லும் எருதைப்போன்ற ஊக்கம் உடையனுக்கு நேரிடும் துன்பங்களே துன்பம் அடையும். 624

மேன்மேலும் துன்பங்கள் வந்தாலும், நெஞ்சம் கலங்காதவனுக்கு நேர்ந்த துன்பமானது, தானே துன்பப்பட்டு அவனிடமிருந்து விலகிப் போகும். 625

'பொருள் அடைந்தோம்' என்று அதனைப் போற்றிக் காப்பதற்கு அறியாதவர்கள், வறுமைக் காலத்தில் 'பொருளை இழந்தோம்' என்று துன்பம் அடைவாரோ? 626

இவ்வுடலானது துன்பங்களுக்கு இலக்கானது என்று அறிந்து, அதற்கு வரும் துன்பங்களுக்கு உள்ளம் கலங்காமல் இருப்பவர்களே மேலோர்கள். 627

இன்பம் உண்டாகியபோது அதனை விரும்பாதவனாக, துன்பம் வருதலும் இயல்பு என்று உணர்பவன், எந்தக் காலத்திலும் துன்பம் அடையமாட்டான். 628

இன்பமான காலத்திலும் இன்பத்தை நுகர விரும்பாதவன் எவனோ, அவன், துன்பமான காலத்திலும் எத்தகைய ஒரு துன்பமும் அடைய மாட்டான். 629

துன்பமே தனக்கு இன்பமானது என்று கருதித் தொழிலைச் செய்பவன், அவன் எதிரிகளும் அவன் முயற்சியை விரும்பும் சிறந்த நிலைமையை அடைவான். 630

இடுக்கண் வருங்கால் நகுக அதனை
அடுத்தூர்வது அஃதொப்பது இல். 621

வெள்ளத் தனைய இடும்பை அறிவுடையான்
உள்ளத்தின் உள்ளக் கெடும். 622

இடும்பைக்கு இடும்பை படுப்பர் இடும்பைக்கு
இடும்பை படாஅ தவர். 623

மடுத்தவா யெல்லாம் பகடன்னான் உற்ற
இடுக்கண் இடர்ப்பாடு உடைத்து. 624

அடுக்கி வரினும் அழிவிலான் உற்ற
இடுக்கண் இடுக்கட் படும். 625

அற்றேமென்று அல்லற் படுபவோ பெற்றேமென்று
ஓம்புதல் தேற்றா தவர். 626

இலக்கம் உடம்பிடும்பைக் கென்று கலக்கத்தைக்
கையாறாக் கொள்ளாதாம் மேல். 627

இன்பம் விழையான் இடும்பை இயல்பென்பான்
துன்பம் உறுதல் இலன். 628

இன்பத்துள் இன்பம் விழையாதான் துன்பத்துள்
துன்பம் உறுதல் இலன். 629

இன்னாமை இன்பம் எனக்கொளின் ஆகுந்தன்
ஒன்னார் விழையுஞ் சிறப்பு. 630

ஒரு செயலைச் செய்வதற்கு வேண்டிய கருவிகளையும், ஏற்ற காலத்தையும், செய்யும் வகையையும், செயலின் அருமையும், நன்கு சிந்திப்பவனே, நல்ல அமைச்சன். 631

மனவலிமையும், குடிகளைக் காத்தலும், அறநூல்களைக் கற்று அறிந்திருத்தலும், விடாமுயற்சியும், ஐம்புலங்களின் தூய்மையும் சிறந்திருப்பவனே, அமைச்சன். 632

பகைவரோடு சேர்ந்துள்ளவரைப் பிரித்தலும், தம்மவரைப் பிரிந்து போகாமல் காத்தலும், பிரிந்து போயினவரை முயன்று மீண்டும் சேர்த்தலும் வல்லவனே, அமைச்சன். 633

எதனையும் நன்கு ஆராய்ந்து அறிதலும், ஆராய்ந்தபின்பே செய்தலும், எதனையும் சந்தேகத்துக்கு இடமில்லாமல் சொல்லுதலும் வல்லவனே, நல்ல அமைச்சன். 634

நீதிநெறிகளைத் தெரிந்து, பொருள் நிரம்பிய சொல்லை உடையவனாய், எப்போதும் செயலாற்றும் திறனை நன்கு அறிந்தவனாய், இருப்பவனே, நல்ல அமைச்சன். 635

இயல்பான நுண்ணறிவும், அதனோடு சேர்ந்த நூலறிவும் உடையவரான அமைச்சர்களின் எதிராக, எந்த நுட்பமான சூழ்ச்சிகளும் நிற்கமுடியாமல் போய்விடும் 636

செயலைச் செய்யும் முறைகளை நூலறிவால் அறிந்திருந்த போதும், அதனை, உலகத்தின் இயற்கையையும் அறிந்து, அதற்கேற்றபடியே முறையாகச் செய்ய வேண்டும். 637

அறிந்து சொல்பவரின் அறிவுரைகளை ஏற்றுக்கொள்ளாமல், தானும் அறிவில்லாதவனான அரசனானாலும், அவனுக்கும் உறுதி கூறுதல் அமைச்சரது கடமை யாகும். 638

அருகில் இருந்தவாறே தன் அரசனுக்குப் பழுதினைக் கருதும் மந்திரியைவிட, எழுபதுகோடிப் பகைவர் ஏற்படுவதையும் அந்த அரசன் பொறுத்துக் கொள்ளலாம். 639

முறையாக ஆராய்ந்து அறிந்து உணர்ந்த போதிலும் செயல் திறமை இல்லாதவரான அமைச்சர்கள், முடிவில்லாத செயல்களையே செய்வார்கள். 640

கருவியும் காலமும் செய்கையும் செய்யும்
அருவினையும் மாண்டது அமைச்சு. 631

வன்கண் குடிகாத்தல் கற்றறிதல் ஆள்வினையோடு
ஐந்துடன் மாண்டது அமைச்சு. 632

பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்லது அமைச்சு. 633

தெரிதலும் தேர்ந்து செயலும் ஒருதலையாச்
சொல்லலும் வல்லது அமைச்சு. 634

அறனறிந்து ஆன்றமைந்த சொல்லன்எஞ் ஞான்றும்
திறனறிந்தான் தேர்ச்சித் துணை. 635

மதிநுட்பம் நூலோடு உடையார்க்கு அதிநுட்பம்
யாவுள முன்நிற் பவை. 636

செயற்கை அறிந்தக் கடைத்தும் உலகத்து
இயற்கை அறிந்து செயல். 637

அறிகொன்று அறியான் எனினும் உறுதி
உழையிருந்தான் கூறல் கடன். 638

பழுதெண்ணும் மந்திரியின் பக்கத்துள் தெவ்வோர்
எழுபது கோடி உறும். 639

முறைப்படச் சூழ்ந்தும் முடிவிலவே செய்வர்
திறப்பாடு இலாஅ தவர். 640

நாவன்மை என்னும் சிறப்பைப் பெற்றிருப்பது ஒரு தனிச் சிறப்பாகும், அந்தச் சிறப்பு மற்றெந்தச் சிறப்பினுள்ளும் அடங்காத ஒரு சிறந்த சிறப்புமாகும். 641

மேன்மையும் கெடுதியும் பேச்சினாலேயே வருவதனால் சொல்லிலே சோர்வு உண்டாகாதபடி எப்போதும் ஒருவன் தன்னைக் காத்துப் பேணிவருதல் வேண்டும். 642

கேட்பவர் உள்ளத்தைப் பிணிக்கும் தன்மை உடையவாயும், பகைவரும் கேட்பதற்கு விருப்பப்படும் வகையிலும் சொல்லப்படுவதே சிறந்த சொல்வன்மை ஆகும். 643

கேட்பவரது மனப்பான்மையை அறிந்தே எந்தச் சொல்லையும் சொல்லவேண்டும்; அப்படிச் சொல்வதைவிட மேலான அறமும் பொருளும் யாதும் இல்லை. 644

தாம் சொல்ல நினைத்த சொல்லை வெல்லக்கூடிய மற்றொரு சொல் இல்லை என்பதை நன்றாக அறிந்தபின்பே, அந்தச் சொல்லை யாவரும் சொல்ல வேண்டும். 645

தாம் சொல்லும்போது பிறர் விரும்புமாறு சொல்லிப் பிறர் சொல்லும்போது அதன் பயனை அறிந்து ஏற்றுக் கொள்ளுதலே, மேன்மையில் குற்றமற்றவரது கொள்கை. 646

சொல்வன்மை உடையவன், சொற்சோர்வு இல்லாதவன், சபைக்கு அஞ்சாதவன், ஆகிய ஒருவனைப் பேச்சில் வெல்லுவது என்பது, எவருக்குமே அருமையாகும். 647

கருத்தை நிரல்படக் கோத்து, இனிய முறையில் சொல்வதற்கு வல்லவர்களைப் பெற்றால், இவ்வுலகம் அவர்கள் ஏவியதைக் கேட்டு, விரைந்து தொழில் செய்யும். 648

குறையில்லாத சில சொற்களாலே தம் கருத்தை விளக்கிச் சொல்வதற்கு அறியாதவர்களே, பல சொற்களைச் சொல்வதற்கு, எப்போதும் விரும்புவார்கள். 649

தாம் கற்றவைகளைப் பிறரும் அறியும்படியாக விளக்கிச் சொல்லத் தெரியாதவர், கொத்தாக மலர்ந்திருந்தும் மணம் வீசாத மலரைப் போன்றவர்கள் ஆவர். 650

நாநல மென்னும் நலனுடைமை அந்நலம்
யாநலத்து உள்ளதூஉம் அன்று. 641

ஆக்கமும் கேடும் அதனால் வருதலால்
காத்தோம்பல் சொல்லின்கண் சோர்வு. 642

கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாம் சொல். 643

திறனறிந்து சொல்லுக சொல்லை அறனும்
பொருளும் அதனினூஉங்கு இல். 644

சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை
வெல்லுஞ்சொல் இன்மை அறிந்து. 645

வேட்பத்தாம் சொல்லிப் பிறர்சொற் பயன்கோடல்
மாட்சியின் மாசற்றார் கோள். 646

சொலல்வல்லன் சோர்விலன் அஞ்சான் அவனை
இகல்வெல்லல் யார்க்கும் அரிது. 647

விரைந்து தொழில்கேட்கும் ஞாலம் நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின். 648

பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற
சிலசொல்லல் தேற்றா தவர். 649

இணருழ்த்தும் நாறா மலரனையர் கற்றது
உணர விரித்துரையா தார். 650

துணைவர்களால் உண்டாகும் நன்மை செல்வத்தை மட்டுமே தரும்; செய்யும் செயலின் செம்மையோ ஒருவன் விரும்பிய எல்லாவற்றையுமே தரும். 651

புகழுடன் கூடியதாகவும் நன்மை தருவதாகவும் அமையாத செயல்களை, எந்தக்காலத்திலும், ஒருவன் செய்யாமல் நீக்கிவிட வேண்டும். 652

மேலாக உயர்வதற்கு நினைக்கின்றவர்கள், தங்களுடைய மதிப்பைக் கெடுக்கும் எந்த ஒரு செயலையும் எப்போதும் செய்யாமல் இருக்க வேண்டும். 653

கலக்கம் இல்லாத அறிவை உடையவர்கள், தாம் இடையூறுகளுக்கு உட்பட நேர்ந்த காலத்திலும், இழிவான செயல்கள் எதையுமே செய்ய மாட்டார்கள். 654

'என்ன செய்தோம்' என்று பின்னர் வருந்தக்கூடியதான செயல்களைச் செய்யவே கூடாது; செய்துவிட்டால், பின்னர் அதைப்பற்றி வருந்தாமலிருப்பது நன்று. 655

தன்னைப் பெற்ற தாயின் பசித் துன்பத்தைக் கண்ணால் கண்ட போதிலும், மேலோர்கள் பழிக்கும் செயல்களை ஒருவன் செய்யவே கூடாது. 656

பழிகளைச் செய்து, அதனாலே வந்தடைந்த செல்வப் பெருக்கத்தை காட்டிலும், சான்றோர்களது வறுமையின் மிகுதியே மிகவும் சிறந்ததாகும். 657

செய்யத் தகாதவை என்று சான்றோரால் விலக்கப்பட்ட செயல்களைக் கடிந்து ஒதுக்காமல் செய்தவர்களுக்கு, அவை நன்மையாக முடிந்தாலும், துன்பத்தையே தரும். 658

பிறர் அழும்படியாகச் செய்து பெற்றுக்கொண்ட செல்வம் எல்லாம், நாம் அழும்படியாக அகன்று போகும்; நல்ல வழியில் வந்தவற்றை இழந்தாலும் பின்னர் பயன்தரும். 659

தீய வழிகளாலே பொருளைச் சேர்த்து ஒருவனைக் காப்பாற்றுதல் என்பது, பசுமண் கலத்தினுள் நீரைப்பெய்து அதைக் கசியாமல் காப்பாற்றுவது போன்றதாகும். 660

## 66. வினைத் தூய்மை

*துணைநலம் ஆக்கம் தரூஉம் வினைநலம்*
*வேண்டிய எல்லாம் தரும்.* 651

*என்றும் ஒருவுதல் வேண்டும் புகழொடு*
*நன்றி பயவா வினை.* 652

*ஓஒதல் வேண்டும் ஒளிமாழ்கும் செய்வினை*
*ஆஅதுவும் என்னு மவர்.* 653

*இடுக்கட் படினும் இளிவந்த செய்யார்*
*நடுக்கற்ற காட்சி யவர்.* 654

*எற்றென்று இரங்குவ செய்யற்க செய்வானேல்*
*மற்றன்ன செய்யாமை நன்று.* 655

*ஈன்றாள் பசிகாண்பான் ஆயினும் செய்யற்க*
*சான்றோர் பழிக்கும் வினை.* 656

*பழிமலைந்து எய்திய ஆக்கத்தில் சான்றோர்*
*கழிநல் குரவே தலை.* 657

*கடிந்த கடிந்தொரார் செய்தார்க்கு அவைதாம்*
*முடிந்தாலும் பீழை தரும்.* 658

*அழக்கொண்ட எல்லாம் அழப்போம் இழப்பினும்*
*பிற்பயக்கும் நற்பா லவை.* 659

*சலத்தாற் பொருள்செய்தே மார்த்தல் பசுமட்*
*கலத்துள்நீர் பெய்திரீஇ யற்று.* 660

மேற்கொண்ட செயலைச் செம்மையாக முடிக்கும் திறமை என்பது, ஒருவனது மனவலிமையே; பிற வலிமைகள் எல்லாம் சிறந்த வலிமைகள் ஆகா. 661

ஆராய்ந்து அறிந்தவர்களின் கொள்கையானது, இடையூறு வரும் முன்பாகவே விலக்கிக் கொள்ளுதலும், வந்தால் மனம் தளராமையும் ஆகிய, இரண்டு வழிகளே ஆகும். 662

செயலில் ஆண்மையாவது, முடிந்தபின் வெளியே புலப்படுமாறு அதுவரை மறைத்துச் செய்வதாம்; இடையில் வெளிப்பட்டால், அது தீராத துன்பத்தையே தரும். 663

'இதனை இப்படி யிப்படிச் செய்வோம்' என்று சொல்லுதல் எல்லாருக்கும் எளிதாகும்; சொல்லியபடி செய்து முடித்தலோ, மிகவும் அருமையாக இருக்கும். 664

எண்ணத்தாலே சிறந்த மனவுறுதி கொண்டவர்களது தொழில் திறமையானது, மன்னன் மனத்திலும் சென்று பதிவதனால், பலராலும் நன்கு மதிக்கப்படும். 665

ஒரு செயலைச் செய்வதற்கு நினைத்தவர்கள், தாம் எண்ணிய எண்ணத்திலே உறுதி உடையவர்களானால், நினைத்ததை நினைத்தபடியே செய்து, வெற்றி அடைவார்கள். 666

உருளுகின்ற பெரிய தேருக்கு அச்சாணிபோல நின்று காப்பவரையும் உலகம் உடையது; அதனால், ஒருவரது சிறிதான உருவத்தைப் பார்த்து இகழக் கூடாது. 667

மனம் கலங்காமல் தெளிவோடு மேற்கொண்ட செயலில், இடையிலே சோர்வில்லாமலும், காலம் கடத்தாமலும் ஈடுபட்டு, விரைவாகவே செய்ய வேண்டும். 668

முதலிலே வருகின்ற துன்பங்களால் வருத்தம் அடைய நேர்ந்தாலும், முடிவிலே இன்பம் தருகின்ற செயல்களை மனத் துணிவுடனே செய்துமுடிக்க வேண்டும். 669

எந்த வகையிலே உறுதி உடையவரானாலும், செய்யும் செயலிலே மனவுறுதி இல்லாதவர்களை உலகம் மதியாது; சிறந்தோராகவும் ஏற்றுக் கொள்ளாது. 670

*வினைத்திட்பம் என்பது ஒருவன் மனத்திட்பம்*
*மற்றைய எல்லாம் பிற.* *661*

*ஊறொரால் உற்றபின் ஒல்காமை இவ்விரண்டின்*
*ஆறென்பர் ஆய்ந்தவர் கோள்.* *662*

*கடைக்கொட்கச் செய்தக்க தாண்மை இடைக்கொட்கின்*
*எற்றா விழுமந் தரும்.* *663*

*சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாம்*
*சொல்லிய வண்ணம் செயல்.* *664*

*வீறெய்தி மாண்டார் வினைத்திட்பம் வேந்தன்கண்*
*ஊறெய்தி உள்ளப் படும்.* *665*

*எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்*
*திண்ணிய ராகப் பெறின்.* *666*

*உருவுகண்டு எள்ளாமை வேண்டும் உருள்பெருந்தேர்க்கு*
*அச்சாணி அன்னார் உடைத்து.* *667*

*கலங்காது கண்ட வினைக்கண் துளங்காது*
*தூக்கங் கடிந்து செயல்.* *668*

*துன்பம் உறவரினுஞ் செய்க துணிவாற்றி*
*இன்பம் பயக்கும் வினை.* *669*

*எனைத்திட்பம் எய்தியக் கண்ணும் வினைத்திட்பம்*
*வேண்டாரை வேண்டாது உலகு.* *670*

ஒரு செயலைப்பற்றிய ஆராய்ச்சியின் முடிவு, மனத்தில் துணிவு பெறுவதே ஆகும்; அவ்வாறு துணிவு கொண்டபின், அதனைச் செய்யாமல் காலம் கடத்துதல் தீமையாகும். 671

காலம் கடந்து செய்வதற்கு உரிய செயல்களைக் காலம் தாழ்த்தியே செய்யவேண்டும்; கடத்தாமல் செய்வதற்குரிய செயல்களை விரைந்து செய்ய வேண்டும். 672

செய்யக்கூடிய இடங்களில் எல்லாம் செயலைச் செய்வது நன்மையே; செய்ய இயலாதபோது, அதை முடிப்பதற்கேற்ற வழிகளை ஆராய்ந்தபின்பே செய்தல் வேண்டும். 673

செய்யும் செயலையும், ஒழிக்கும் பகையையும், குறைவிடாமல் செய்துவிடவேண்டும்; அவற்றின் மிச்சம் தீயின் ஒழிவைப் போலப் பெருகிப் பெருங்கேடு உண்டாக்கிவிடும். 674

வேண்டிய பொருள், கருவிகள், தக்க காலம், செயலறிவு, உரிய இடம் என்னும் ஐந்தையும் மயக்கமில்லாமல் ஆராய்ந்து கொண்ட பின்னரே, செய்தல் வேண்டும். 675

செயலின் முடிவைப்பற்றியும், இடையில்வரும் இடையூறுகளைப் பற்றியும், முடித்தபின் அடையும் பெரும்பயனையும் ஆராய்ந்தே, ஒரு செயலைச் செய்தல் வேண்டும். 676

ஒரு செயலைச் செய்வதற்குரிய செயல்முறையாவது, அதனை முன்பே செய்துமுடித்துத் தெளிந்தவனிடம் கேட்டறிந்து, அவைகளைத் தாமும் மேற்கொள்ளுதல் ஆகும். 677

மதநீரால் கன்னம் நனையும் யானையைக் கொண்டு, வேறான யானையைக் கட்டுவதைப்போல, பழகிய செயலின் அறிவைக் கொண்டே பிற செயல்களையும் செய்தல் வேண்டும். 678

மாறுபட்டவரையும் தம்முடன் பொருந்துமாறு செய்து செயலிலே ஈடுபடுதல், நண்பருக்கு நல்லவை செய்வதிலும் மிகவும் விரைவாகச் செய்வதற்கு உரியதாகும். 679

ஒன்றைச் செய்யும் வல்லமை இல்லாதவருள், பயந்து இடையில் குறைப்பட்டவர்கள், பெரியோரைப் பணிந்து கேட்டு, அவர் கூறியபடி நடந்துகொள்ள வேண்டும். 680

சூழ்ச்சி முடிவு துணிவெய்தல் அத்துணிவு
தாழ்ச்சியுள் தங்குதல் தீது. 671

தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க
தூங்காது செய்யும் வினை. 672

ஒல்லும்வா யெல்லாம் வினைநன்றே ஒல்லாக்கால்
செல்லும்வாய் நோக்கிச் செயல். 673

வினைபகை என்றிரண்டின் எச்சம் நினையுங்கால்
தீயெச்சம் போலத் தெறும். 674

பொருள்கருவி காலம் வினைஇட னோடு ஐந்தும்
இருள்தீர எண்ணிச் செயல். 675

முடிவும் இடையூறும் முற்றியாங்கு எய்தும்
படுபயனும் பார்த்துச் செயல். 676

செய்வினை செய்வான் செயன்முறை அவ்வினை
உள்ளறிவான் உள்ளங் கொளல். 677

வினையான் வினையாக்கிக் கோடல் நனைகவுள்
யானையால் யானையாத் தற்று. 678

நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே
ஒட்டாரை ஒட்டிக் கொளல். 679

உறைசிறியார் உள்நடுங்கல் அஞ்சிக் குறைபெறின்
கொள்வர் பெரியார்ப் பணிந்து. 680

தன் நாட்டின்மீது அன்பும், உயர்ந்த குடிப்பிறப்பும், வேந்தன் விரும்புகின்ற உயர்ந்த பண்புகள் அமைதலும் தூது உரைப்பவனுக்கு வேண்டிய பண்புகள். 681

தன் நாட்டிடத்திலே அன்பும், தெளிவான அறிவும், எதையும் ஆராய்ந்து பேசும் சொல்வன்மையும், தூது உரைப்பவனுக்கு இன்றியமையாத மூன்று தகுதிகள். 682

அரசியல் நூல்கள் அறிந்தவருள் தான் வல்லவனாதலும், வேல் வீரர்களுள் வெற்றித்திறனைக் கொண்டவனாக இருத்தலும், தூதுஉடையவனுக்கு வேண்டிய சிறந்த தகுதிகள். 683

இயல்பாகவே அமைந்த நுண்ணறிவும், தோற்றக் கவர்ச்சியும், ஆராய்ந்துபெற்ற கல்வியறிவும் என்னும் இம்மூன்றின் செறிவை உடையவனே தூது உரைப்பவன் ஆவான். 684

விரிக்காமல் தொகுத்துச் சொல்லியும், இன்னாச் சொற்களை நீக்கியும், கேட்கும் மாற்றார் மகிழுமாறு சுவைபடச் சொல்லியும், தன் நாட்டிற்கு நன்மை விளைவிப்பவனே தூதன். 685

கற்பன கற்றறிந்து, அவரது கடும்பார்வைக்கு அஞ்சாமல்; சொல்வதை அவர்கள் மனத்திற் பதியும்படி சொல்லிக் காலத்தோடு பொருந்துவதை அறிபவனே தூதன். 686

தன் கடமையை அறிந்து, நிறைவேற்றும் காலத்தையும் கருத்திற் கொண்டு, ஏற்ற இடத்தையும் தெரிந்து, நன்றாகச் சிந்தித்துச் சொல்பவனே சிறந்த தூதன். 687

நடத்தையிலே தூய்மையும், தக்க துணைவரை உடைமையும், மனத்திலே துணிவு உடைமையும் ஆகிய இம்மூன்றினையும் வாய்த்திருப்பவனாக விளங்குதலே தூதனின் பண்பு. 688

தன் அரசன் சொல்லியனுப்பியதைப் பிற வேந்தரிடம் சென்று உரைப்பவனாகிய தூதன், வடுப்படும் சொல்லை வாய்சோர்ந்தும் சொல்லாத திறன் உடையவனாக இருக்க வேண்டும். 689

தன் உயிருக்கே முடிவைத் தந்தாலும், அதற்கு அஞ்சித் தன் கடமையிலே குறைவுபடாது; தன் வேந்தனுக்கு நன்மை தரும் உறுதிப்பாட்டை செய்துமுடிப்பவனே தூதன். 690

அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் வேந்தவாம்
பண்புடைமை தூதுரைப்பான் பண்பு. 681

அன்பறிவு ஆராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்கு
இன்றி யமையாத மூன்று. 682

நூலாருள் நூல்வல்லன் ஆகுதல் வேலாருள்
வென்றி வினையுரைப்பான் பண்பு. 683

அறிவுரு ஆராய்ந்த கல்விஇம் மூன்றன்
செறிவுடையான் செல்க வினைக்கு. 684

தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி
நன்றி பயப்பதாம் தூது. 685

கற்றுக்கண் அஞ்சான் செலச்சொல்லிக் காலத்தால்
தக்கது அறிவதாம் தூது. 686

கடனறிந்து காலங் கருதி இடனறிந்து
எண்ணி யுரைப்பான் தலை. 687

தூய்மை துணைமை துணிவுடைமை இம்மூன்றின்
வாய்மை வழியுரைப்பான் பண்பு. 688

விடுமாற்றம் வேந்தர்க்கு உரைப்பான் வடுமாற்றம்
வாய்சோரா வன்க ணவன். 689

இறுதி பயப்பினும் எஞ்சாது இறைவற்கு
உறுதி பயப்பதாம் தூது. 690

மாறுபடும் வேந்தரைச் சேர்ந்து வாழ்கின்றவர்கள், அவரை விட்டு மிகவும் நீங்காமலும், மிகவும் நெருங்காமலும், தீயில் குளிர்காய்பவரைப் போலப் பழகிவர வேண்டும். 691

மன்னர் விரும்புகின்ற பொருள்களைத் தானும் விரும்பாதிருக்கும் தன்மையானது, அம்மன்னராலே நிலைத்திருக்கும் செல்வங்களை ஒருவனுக்குத் தருவதாக விளங்கும் 692

அரசன் சினம்கொண்டால் அவனைத் தெளிவித்தல் அரிதானதால், அரசனைச் சார்ந்திருப்பவர், பொறுத்தற்கரிய பிழைகள் தம்மிட ம் நேராமல் காத்துக்கொள்ள வேண்டும். 693

அறிவாற்றலில் சிறந்த பெரியவர்கள் கூடியுள்ள அரசவையில் இருக்கும்போது, காதோடு காதாகப் பேசுவதையும், பிறரோடு சேர்ந்து சிரிப்பதையும், நீக்கிவிட வேண்டும். 694

அரசனின் மறைவான பேச்சுக்களைக் கேளாமலும், அதன் தொடர்பாக எதுவும் சொல்லாமலும் இருந்து, அவனாகச் சொன்னால் மட்டுமே கேட்டல் வேண்டும். 695

அரசனது உள்ளக்குறிப்பை அறிந்து, காலத்தையும் கருத்திற் கொண்டு, அரசனுக்கு வெறுப்புத்தராத சொற்களை, அவன் விரும்பிக் கேட்கும்படி சொல்ல வேண்டும். 696

அரசன் விரும்புகிற செய்திகளைமட்டும் அவனிடம் சொல்லியும், அவனுக்குரியவை அல்லாதனபற்றி அரசனிடம் சொல்லாமற் கைவிடுதலும் வேண்டும். 697

'இளையவர்' என்று கருதியோ, 'இனமுறை' என்று கருதியோ இகழாமல், நிலைபெற்ற அறிவுடன் அரசனிடம் நடந்து கொள்ளுதல் வேண்டும். 698

'தாம் அரசராலே மதித்துக் கொள்ளப்பட்டோம்' என்றும், அவர் ஏற்றுக்கொள்ளாத செயல்களைக் குற்றம் இல்லாத அறிவுடையவர்கள் செய்ய மாட்டார்கள். 699

'மிகப் பழையகாலத் தொடர்புடையோர்' என்று நினைத்தும் பண்பில்லாத செயல்களைச் செய்பவனின் நெருக்கமான உரிமை, அவனுக்கே கெடுதல் தரும். 700

அகலா தணுகாது தீக்காய்வார் போல்க
இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார். 691

மன்னர் விழைய விழையாமை மன்னரான்
மன்னிய ஆக்கம் தரும். 692

போற்றின் அரியவை போற்றல் கடுத்தபின்
தேற்றுதல் யார்க்கும் அரிது. 693

செவிச்சொல்லுஞ் சேர்ந்த நகையும் அவித்தொழுகல்
ஆன்ற பெரியா ரகத்து. 694

எப்பொருளும் ஓரார் தொடரார்மற் றப்பொருளை
விட்டக்கால் கேட்க மறை. 695

குறிப்பறிந்து காலங் கருதி வெறுப்பில
வேண்டுப வேட்பச் சொலல். 696

வேட்பன சொல்லி வினையில எஞ்ஞான்றும்
கேட்பினும் சொல்லா விடல். 697

இளையர் இனமுறையர் என்றிகழார் நின்ற
ஒளியோ டொழுகப் படும். 698

கொளப்பட்டேம் என்றெண்ணிக் கொள்ளாத செய்யார்
துளக்கற்ற காட்சி யவர். 699

பழைய மெனக்கருதிப் பண்பல்ல செய்யும்
கெழுதகைமை கேடு தரும். 700

ஒருவன் சொல்வதன்முன்பாகவே, குறிப்பால் அவன் கருத்தை அறியக்கூடியவன், வற்றாத கடலால் சூழப் பெற்றுள்ள உலகத்துக்கே அணிகலன் ஆவான். 701

கொஞ்சமும் ஐயப்படாத வகையிலே, பிறர் உள்ளத்திலுள்ள எண்ணங்களை உணர்ந்துகொள்ளக் கூடியவனைத் தெய்வத் தோடு சமமாகக் கொள்ளுதல் வேண்டும். 702

ஒருவரது முகக்குறிப்பினாலேயே, அவரது கருத்துக்களை உணர்கின்றவரை, உறுப்பினுள் எதனைக் கொடுத்தேனும் துணையாக்கிக் கொள்ளல் வேண்டும். 703

தாம் செய்வதற்குக் குறித்த ஒரு செயலைச் சொல்வதற்கு முன்பாகவே குறிப்பால் அறிந்து செய்பவர்களோடு, பிறர் நிலையால் ஒத்தாலும் பயனால் ஒப்பாகார். 704

ஒருவர் ஒரு கருத்தைக் குறிப்பால் காட்டியபோது, அதனை உணராமலிருந்தால், உடலுறுப்புக்களுள் கண் என்பது என்ன பயனைச் செய்வதாகுமோ? 705

தன்னை அடுத்திருக்கும் ஓர் உருவத்தைத் தன்னிடத்தே காட்டும் பளிங்கைப்போல, ஒருவர் நெஞ்சம் கடுத்ததனை அவரது முகமும் தெளிவாகக் காட்டிவிடும். 706

முகத்தைக் காட்டிலும் அறிவால் மிக்கது வேறு யாதும் உண்டோ? உள்ளம் மகிழ்ந்தாலும் சினந்தாலும், தான் முந்திக் கொண்டு அதனை வெளியே காட்டிவிடும். 707

முகத் தோற்றத்தால் ஒருவருக்கு நேர்ந்த துயரத்தை உணர்பவரைத் துணையாக அடைந்தால், அவர் எதிரே நின்றாலே போதும்; எதுவுமே சொல்ல வேண்டாம். 708

கண் பார்வையால் கருத்தை வகைப்படுத்தி உணர்பவரைத் துணையாகப் பெற்றால், ஒருவரது பகைமையையும், நட்பையும், அவரது கண்களே நமக்குச் சொல்லிவிடும். 709

நுண்ணறிவு உடையோம் என்பவர் பிறரை அளந்தறியும் அளவுகோல் யாதென ஆராயுங்காலத்து, அப் பிறரது கண் அல்லாமல் பிற உறுப்புக்கள் யாதும் இல்லை. 710

கூறாமை நோக்கிக் குறிப்பறிவான் எஞ்ஞான்றும்
மாறாநீர் வையக் கணி. 701

ஐயப் படாஅது அகத்தது உணர்வானைத்
தெய்வத்தோடு ஒப்பக் கொளல். 702

குறிப்பிற் குறிப்புணர் வாரை உறுப்பினுள்
யாது கொடுத்தும் கொளல். 703

குறித்தது கூறாமைக் கொள்வாரோ டேனை
உறுப்போர் அனையரால் வேறு. 704

குறிப்பிற் குறிப்புணரா வாயின் உறுப்பினுள்
என்ன பயத்தவோ கண். 705

அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம். 706

முகத்தின் முதுக்குறைந்தது உண்டோ உவப்பினும்
காயினும் தான்முந் துறும். 707

முகம்நோக்கி நிற்க அமையும் அகம்நோக்கி
உற்றது உணர்வார்ப் பெறின். 708

பகைமையும் கேண்மையும் கண்ணுரைக்கும் கண்ணின்
வகைமை உணர்வார்ப் பெறின். 709

நுண்ணியம் என்பார் அளக்குங்கோல் காணுங்கால்
கண்ணல்லது இல்லை பிற. 710

சொல்லின் தொகையை அறிந்த தூய அறிவாளர்கள், அவையின் தன்மையை அறிந்து, தாம் சொல்லப் போவதையும் நன்றாக ஆராய்ந்தே, எதனையும் சொல்லவேண்டும். 711

சொல்லின் நடையை அறிந்த நல்லறிவை உடையவர்கள், தாமிருக்கும் அவையின் தன்மையைத் தெரிந்து, சொல்ல வேண்டியவற்றை உணர்ந்தே, சொல்ல வேண்டும். 712

தாமிருக்கும் அவையின் தன்மையை அறியாதவர்களாக, ஒன்றைச் சொல்பவர்கள் சொல்லின் வகையை அறியாதவர்கள்; அவர்களால் எதையுமே சாதிக்க முடியாது. 713

அறிவினாலே ஒளியுடையவர் முன்பாகத் தாமும் அறிவொளி யினர் ஆகவேண்டும்; அறிவிலாதவர் முன்பாக, சுண்ணாம்பு வண்ணங் கொள்ளுதல்போல ஆகிவிடவேண்டும். 714

அறிவால் முதிர்ந்தவர் அவையிலே, அவர்கள் கருத்துக்களைக் கேட்டறியும் முன்பாக எதையும் சொல்லாத அடக்கமானது, சிறந்த நன்மை தருவதாகும். 715

விரிந்த அறிவு நுட்பங்களை அறிந்தவர்முன் சென்று பேசிக் குற்றப்படுதல், ஆற்று வெள்ளத்தில் நீந்துபவன் இடையிலே நிலை தளர்ந்தால் போன்றதாம். 716

குற்றம் இல்லாமல் சொற்களின் பொருள்களைத் தெரிவதற்கு வல்லமை உடையவர்களிடையே, கற்றறிந்த கல்வியறிவு மேலும் விளக்கம்பெற்றுத் தோன்றும். 717

சொல்லின் பயனை உணர்கின்றவர்களின் முன்பாக ஒன்றைச் சொல்லுதல், நல்ல பயிர் வளருகின்ற பாத்தியினுள்ளே, நீர் சொரிந்தாற் போலப் பெரும்பயன் தருவதாகும். 718

நல்ல அறிவாளர்கள் கூடியுள்ள அவையிலே, அவர்களுக்கு நன்றாகப் பதியுமாறு சொல்லுகிறவர்கள், புல்லறிவினர் கூட்டத்திலே, மறந்தும் பேசாதிருக்க வேண்டும். 719

தம்போன்ற அறிவுடையவர்கள் அல்லாதவரின் முன்பாக ஒன்றைப்பற்றி விரிவாகப் பேசுதல் அங்கணத்துள்ளே அமுதத்தைக் கொட்டியதுபோலப் பாழாகிவிடும். 720

அவையறிந்து ஆராய்ந்து சொல்லுக சொல்லின்
தொகையறிந்த தூய்மை யவர். 711

இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லுக சொல்லின்
நடைதெரிந்த நன்மை யவர். 712

அவையறியார் சொல்லல்மேற் கொள்பவர் சொல்லின்
வகையறியார் வல்லதூஉம் இல். 713

ஒளியார்முன் ஒள்ளிய ராதல் வெளியார்முன்
வான்சுதை வண்ணம் கொளல். 714

நன்றென்ற வற்றுள்ளும் நன்றே முதுவருள்
முந்து கிளவாச் செறிவு. 715

ஆற்றின் நிலைதளர்ந் தற்றே வியன்புலம்
ஏற்றுணர்வார் முன்னர் இழுக்கு. 716

கற்றறிந்தார் கல்வி விளங்கும் கசடறச்
சொற்றெரிதல் வல்லார் அகத்து. 717

உணர்வது உடையார்முன் சொல்லல் வளர்வதன்
பாத்தியுள் நீர்சொரிந் தற்று. 718

புல்லவையுள் பொச்சாந்தும் சொல்லற்க நல்லவையுள்
நன்கு செலச்சொல்லு வார். 719

அங்கணத்துள் உக்க அமிழ்தற்றால் தங்கணத்தர்
அல்லார்முன் கோட்டி கொளல். 720

சொற்களின் தொகை அறிந்த தூய அறிவாளர்கள், அவையின் தன்மையை அறிந்து, வலியவர் அவையிலே வாய்சோர்ந்து எதனையும் பேசமாட்டார்கள். 721

'கற்றவர்களுள் கற்றவர்' என்று புகழப்படுகின்றவர்கள், கற்றவர் அவையின்முன், தாம் கற்றதை அவர்கள் ஏற்றுக் கொள்ளுமாறு எடுத்துச் சொல்லக்கூடியவர்களே ஆவர். 722

போர்க்களத்தின் நடுவே அஞ்சாமல் சென்று சாவையும் ஏற்பவர்கள் பலர்; ஆனால், கற்றோர் அவையிலே சென்று பேசக் கூடிய அஞ்சாமை உடையவர்கள் மிகமிகச்சிலரே! 723

தாம் கற்றவைகளைக் கற்றோர்கள் மனங்கொள்ளும்படியாகச் சொல்லி, தம்மிலும் மிகுதியாகக் கற்றவர்களிடம், தாமும் எஞ்சிய மிகுதியைக் கேட்டுக்கொள்ளல் வேண்டும். 724

அவையினருக்கு அஞ்சாமல், அங்கே எழும் கேள்விகளுக்கு விடை சொல்லும்பொருட்டு, அதற்கு வேண்டிய நூல்களைப் பொருள்நயம் அறிந்து கற்றுக்கொள்ளல் வேண்டும். 725

அஞ்சாமை இல்லாதவர்க்கு அவர் ஏந்தியுள்ள வாளினால் என்ன பயன்? நுட்பமான அறிவையுடையவர் அவையிலே பேச அஞ்சுபவர்க்கு நூலறிவாலும் பயன் இல்லை. 726

பகைவர் நடுவே புகுந்த, பேடியின் கையிலேயுள்ள கூர்மையான வாள் பயன்படாததைப்போல, அவையில் பேசுவதற்கு அஞ்சுகிறவன் நூலறிவும் பயன்படாது. 727

நல்லவர்கள் அவையிலே, அவர்கள் ஏற்றுக்கொள்ளும்படி நல்ல பொருள்பற்றிப் பேசத் தெரியாதவர்கள் பலவகையான நூல்களைக் கற்றவரானாலும் பயன் இல்லாதவரே! 728

தாம் பல நூல்களைக் கற்று அறிந்திருந்தாலும், நல்லறிவு உடையவர் அவையிலே பேசுவதற்கு அஞ்சுகிறவர்கள், கல்லாதவரினும் கடைப்பட்டவர்கள் ஆவர். 729

அவைக்கு அச்சமடைந்து, தாம் கற்றவற்றை அவையினர் ஏற்கும் வண்ணம் சொல்ல முடியாதவர்கள், அறிவுள்ளவரே என்றாலும், அறிவற்றவர்களுக்கே சமமாவார்கள். 730

வகையறிந்து வல்லமை வாய்சோரார் சொல்லின்
தொகையறிந்த தூய்மை யவர். 721

கற்றாருள் கற்றார் எனப்படுவர் கற்றார்முன்
கற்ற செலச்சொல்லு வார். 722

பகையகத்துச் சாவார் எளியர் அரியர்
அவையகத்து அஞ்சா தவர். 723

கற்றார்முன் கற்ற செலச்சொல்லித் தாம்கற்ற
மிக்காருள் மிக்க கொளல். 724

ஆற்றின் அளவறிந்து கற்க அவையஞ்சா
மாற்றம் கொடுத்தற் பொருட்டு. 725

வாளொடென் வன்கண்ணர் அல்லார்க்கு நூலொடென்
நுண்ணவை அஞ்சு பவர்க்கு. 726

பகையகத்துப் பேடிகை ஒள்வாள் அவையகத்து
அஞ்சு மவன்கற்ற நூல். 727

பல்லவை கற்றும் பயமிலரே நல்லவையுள்
நன்கு செலச்சொல்லா தார். 728

கல்லா தவரின் கடையென்ப கற்றறிந்தும்
நல்லார் அவையஞ்சு வார். 729

உளரெனினும் இல்லாரொடு ஒப்பர் களனஞ்சிக்
கற்ற செலச்சொல்லா தார். 730

நாட்டு மக்களின் தேவைக்குக் குறையாத விளைபொருளும், தகுதியுடைய சான்றோர்களும், தாழ்வில்லாத செல்வத்தை உடையவரும் ஒன்று சேர்ந்திருப்பதே, நல்ல நாடாகும். 731

பெரும் பொருள்பெருக்கத்தால் அனைவராலும் விரும்பத் தகுந்ததாகியும், கேடுகள் இல்லாததாகியும், மிகுதியான விளைச்சலை உடையதாகியும் விளங்குவதே, நல்ல நாடு. 732

வேற்றுநாட்டாரையும் தாங்குவதற்கான நிலையில், அவரைத் தாங்கிக் காத்தும், தம் அரசனுக்குரிய இறைப்பொருளை முழுவதும் கொடுத்தும் காப்பதே, நல்ல நாடாகும். 733

நீங்காத பசித்துன்பமும், தீராத நோய்களும், மேல்வந்து தாக்கும் பகைவர்களும் தன்னைச் சேராமல், வலிமையோடும் வளமோடும் விளங்குவதே, நல்ல நாடாகும். 734

பலவாகப் பிரிந்து இயங்கும் கூட்டங்களும், நாட்டைப் பாழாக்கும் உட்பகையும், வேந்தனைத் துன்புறுத்தும் கொலை வெறியுள்ள குறுநில மன்னரும், இல்லாதது நாடு. 735

பகைவராலே கெடுதல்களை அறியாததாய், இயற்கையின் மாறுபாடுகளால் கெட்டவிடத்திலும் வளம் குன்றாமலிருக்கும் நாடுதான், நாடுகளுள் சிறந்த நாடாகும். 736

கீழ்நீரும் மேல்நீரும் என்னும் இருநீர்வளமும், வளம் வாய்ந்த மலைகளும், ஆறுகளும், வலிமையான அரண்களும், ஒரு நாட்டிற்கு வேண்டிய உறுப்புக்களாம். 737

மக்கள் நோயில்லாமலிருத்தல், செல்வம் உடைமை, விளை பொருள் பெருக்கம், இன்பந்தரும் கவின்கலைகள், நல்ல காவல் என்னும் இவ் ஐந்துமே, நாட்டிற்கு அழகு! 738

வேற்று நாடுகளை எதற்கும் வேண்டாதபடி, எல்லா வளமும் கொண்டதே நல்ல நாடு என்பர்; பிறர் உதவியை நாடி அதனால் வளமைவரும் நாடு, நாடே ஆகாது. 739

மேற்சொல்லியவை எல்லாம் சிறப்பாகவே அமையப் பெற்றிருந் தாலும், ஆட்சிநடத்தும் வேந்தன் பொருத்தமில்லாமலிருக்கும் நாடு, பயனற்ற நாடு ஆகும். 740

*தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்*
*செல்வரும் சேர்வது நாடு.* *731*

*பெரும்பொருளால் பெட்டக்க தாகி அருங்கேட்டால்*
*ஆற்ற விளைவது நாடு.* *732*

*பொறையொருங்கு மேல்வருங்கால் தாங்கி இறைவற்கு*
*இறையொருங்கு நேர்வது நாடு.* *733*

*உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்*
*சேராது இயல்வது நாடு.* *734*

*பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும் வேந்தலைக்கும்*
*கொல்குறும்பும் இல்லது நாடு.* *735*

*கேடறியாக் கெட்ட விடத்தும் வளங்குன்றா*
*நாடென்ப நாட்டின் தலை.* *736*

*இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்*
*வல்லரணும் நாட்டிற்கு உறுப்பு.* *737*

*பிணியின்மை செல்வம் விளைவின்பம் ஏமம்*
*அணியென்ப நாட்டிற்கிவ் வைந்து.* *738*

*நாடென்ப நாடா வளத்தன நாடல்ல*
*நாட வளந்தரும் நாடு.* *739*

*ஆங்கமைவு எய்தியக் கண்ணும் பயமின்றே*
*வேந்தமைவு இல்லாத நாடு.* *740*

பகைவருக்கு அஞ்சாமல் மேற்சென்று போரிட வல்லவர்களுக்கும் அரண் செல்வம்; அஞ்சி உள்ளேயிருந்து தம்மைக் காத்துக்கொள்ள நினைப்பவருக்கும் அரண் செல்வம். 741

நீலமணிபோன்ற நீரினையுடைய அகழியும், வெளியான நிலப் பரப்பும், உயரமான மலையும், மரநிழலாற் செறிந்த காடும் கொண்டுள்ளதே, பாதுகாப்பான நல்ல அரண்! 742

'உயரமும், அகலமும், உறுதியும், பகைவரால் நெருங்குவதற்கு அருமையும் என்னும் நான்கும், சிறப்பாக அமைந்ததே அரண்' என்று போரியல் நூல்கள் கூறும். 743

காக்கவேண்டும் இடத்தினால் சிறிதானதாகவும், உள்ளே பெரிதான பரப்பை உடையதாகவும், பகைவரது மன ஊக்கத்தை முற்றும் அழிக்கவல்லதே நல்ல அரண் ஆகும். 744

பகைவராலே கைப்பற்றுவதற்கு அரியதாயும், தன்னிடத்தே கொண்டுள்ள உணவுப் பொருள்களை உடையதாயும், அகத்தாரது போர்நிலைக்கு எளியதாயும் அமைந்ததே அரண். 745

அகத்தாருக்குத் தேவையான எல்லாப் பொருள்களையும் உடையதாய், அழிவிடத்து உதவிக்காக்கும் நல்ல காவல் மறவர்களையும் கொண்டதாய், விளங்குவதே அரண். 746

சூழ்ந்து முற்றியும், திடீரெனத் தாக்கியும், வஞ்சனைகளாலே உள்ளிருப்போரை வசப்படுத்தியும், பகைவரால் கைப்பற்றுவதற்கு இயலாத அருமையுடையதே அரண்! 747

வந்து சூழ்ந்துள்ள பகைவரது பெரும்படையையும், உள்ளிருப்போர் இடம்விட்டுப் பெயராமல் நிலைத்துநின்ற படியே வெல்லும் அமைப்பை உடையதே, அரண். 748

முற்றுகையிட்ட பகைவர்கள் போர்முனையின் முகப்பிலேயே அழிந்துபோகுமாறு, போர்த்தொழிலில் வீறுபெற்றுச் சிறந்த காவல் மறவர்களையும் கொண்டதே அரண்! 749

எத்தகைய பாதுகாவலை உடையதாய் இருந்தாலும், அரண்காக்கும் மறவர்கள் போர்வினைச் சிறப்பு இல்லாதவரானால், அந்த அரணும் பயனற்று அழிந்துபோகும். 750

ஆற்று பவர்க்கும் அரண்பொருள் அஞ்சித்தற்
போற்று பவர்க்கும் பொருள். 741

மணிநீரும் மண்ணும் மலையும் அணிநிழற்
காடும் உடையது அரண். 742

உயர்வகலம் திண்மை அருமைஇந் நான்கின்
அமைவரண் என்றுரைக்கும் நூல். 743

சிறுகாப்பிற் பேரிடத்த தாகி உறுபகை
ஊக்கம் அழிப்பது அரண். 744

கொளற்கரிதாய்க் கொண்டகூழ்த் தாகி அகத்தார்
நிலைக்கெளிதாம் நீரது அரண். 745

எல்லாப் பொருளும் உடைத்தாய் இடத்துதவும்
நல்லாள் உடையது அரண். 746

முற்றியும் முற்றா தெறிந்தும் அறைப்படுத்தும்
பற்றற் கரியது அரண். 747

முற்றாற்றி முற்றி யவரையும் பற்றாற்றிப்
பற்றியார் வெல்வது அரண். 748

முனைமுகத்து மாற்றலர் சாய வினைமுகத்து
வீறெய்தி மாண்டது அரண். 749

எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி
இல்லார்கண் இல்லது அரண். 750

ஒரு பொருளாக மதிப்பதற்குத் தகுதியில்லாதவரையும், பிறர் மதிக்கும்படியாகச் செய்யக்கூடிய பொருளை அல்லாமல் உலகவாழ்வுக்குச் சிறந்த பொருளாவது யாதும் இல்லை. 751

பொருள் இல்லாத வறியவரை எல்லாருமே இகழ்ச்சியாகப் பேசுவார்கள்; செல்வம் உடையவரையோ எல்லாரும் சிறப்புச் செய்து போற்றுவார்கள். 752

'பொருள்' என்னும் நந்தாவிளக்கமானது, தன்னை உடையவர் எண்ணிய தேயங்களுக்கும் சென்று, அவர் பகையாகிய இருளைப் போக்கும் வல்லமை உடையதாகும். 753

தீய வழிகளால் அல்லாமல், பொருள் தேடும் திறனை அறிந்து தேடியதனால் வந்தடைந்த செல்வமானது, அறவாழ்க்கையையும், இன்பத்தையும் ஒருங்கே கொடுப்பது ஆகும். 754

'அருள்' என்னும் இயல்போடும், மக்களின் அன்போடும் பொருந்திவாராத பொருட் பெருக்கத்தைத் தீயவர் புரள்வதற்கு விலக்கி விட்டுவிட வேண்டும். 755

உடையவர் இல்லாததாலே வந்துசேர்ந்த செல்வமும், சுங்க வரியாக வந்த பொருளும், பகைவரை வென்று பெற்ற திறைப் பொருளும், வேந்தனின் உரிமைப் பொருளாகும். 756

'அன்பு' என்னும் தாய் பெற்றெடுத்த 'அருள்' என்னும் குழந்தையானது, 'பொருள்' என்கின்ற செல்வம் படைத்த செவிலித்தாயால் வளர்க்கப்பட வேண்டும். 757

தன் கைப்பொருளோடு ஒரு செயலைச் செய்யத் தொடங்குவதானது, குன்றின்மேல் ஏறிநின்று யானைப்போரைக் கண்டாற்போல், துன்பமின்றி இன்பம் தருவதாகும். 758

பகைவரின் மனச் செருக்கை அழித்து வெற்றிபெறும் ஆயுதம் பொருளைக் காட்டிலும் கூர்மையானது வேறில்லை ஆதலால்; பொருளை எப்போதும் தேடிக்கொள்ள வேண்டும். 759

சிறந்த வழியோடு வந்த பொருளை மிகுதியாகத் தேடிக் கொண்டவர்களுக்கு, எண்ணப்படும் மற்றையவாகிய அறமும் இன்பமும் ஒருங்கே வந்துவாய்க்கும் பொருள்களாகும். 760

பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்லது இல்லை பொருள். 751

இல்லாரை எல்லாரும் எள்ளுவர் செல்வரை
எல்லாரும் செய்வர் சிறப்பு. 752

பொருளென்னும் பொய்யா விளக்கம் இருளறுக்கும்
எண்ணிய தேயத்துச் சென்று. 753

அறனீனும் இன்பமும் ஈனும் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள். 754

அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புரள விடல். 755

உறுபொருளும் உல்கு பொருளும்தன் ஒன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள். 756

அருளென்னும் அன்பீன் குழவி பொருளென்னும்
செல்வச் செவிலியால் உண்டு. 757

குன்றேறி யானைப்போர் கண்டற்றால் தன்கைத்தொன்று
உண்டாகச் செய்வான் வினை. 758

செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்
எஃகதனிற் கூரியது இல். 759

ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு எண்பொருள்
ஏனை இரண்டும் ஒருங்கு. 760

நால்வகை உறுப்புக்களாலும் முறையாக அமைந்து, களத்திற்படும் துன்பங்கட்கு அஞ்சாமல் பகைவரை வெல்லும் படையே, செல்வங்களுள் சிறந்த செல்வம். 761

போரில் நேரிட்ட அழிவுக்கு அஞ்சாமல் பகைவர்மேற் செல்லும் ஆண்மை, வழிவழிப் புகழோடு விளங்கும் தொல்படைக்கே இயல்வதாகும். 762

பகைப்படைகள் எலிகளைப்போலக் கடலாகத் திரண்டு வந்து ஆரவாரித்தாலும், சிறிய தொல்படை நாகத்தைப் போல மூச்சுவிட்டதும், அது முற்றவும் அழிந்துபோம். 763

மனத்தின் உறுதியிலே அழிவற்றதாய், பகைவரது வஞ்சனைகளுக்கு உட்படாததாய், வழிவழித் தொடர்ந்துவந்த வன்கண்மை உடையதாய் விளங்குவதே, சிறந்த படை. 764

கூற்றம் சினங்கொண்டு தன்மேல் எதிர்த்து வந்தாலும், அதனோடும் சென்று பொருந்தி, எதிர்த்துப் போரிட்டு வெல்லும் ஆற்றல் உடையதே, சிறந்த படை ஆகும். 765

மறப்பண்பும், மானவுணர்வும், நன்னெறியே பற்றிச் செல்லுதலும், மன்னனால் தெளியப்பட்ட சிறப்பும் என்னும் நான்கும், படைக்குச் சிறந்த பாதுகாப்பு ஆகும். 766

மேல்வந்த போரைத் தாங்கிநின்று, பகைவரை மேற்சென்று வெல்லும் வகைகளை ஆராய்ந்து, அவர்களின் தூசிப்படையைத் தாக்கி அழித்து மேற்செல்வதே, படை ஆகும். 767

போரிடுகின்ற தறுகண்மையும், அதற்கு வேண்டிய ஆற்றலும் இல்லாதிருந்தாலும், ஒருபடை தனது அணிவகுப்பினாலேயே பகைவரை வெற்றி அடைந்துவிடும். 768

தேய்ந்து சிறுகுதலும், மனம்நீங்காத வெறுப்பும், பொருளில்லாத வறுமையும் இல்லாமலிருந்தால், அந்தப் படை தவறாமல் எந்தப் பகையையும் வெற்றி கொள்ளும்! 769

நிலையான மறவர்களை மிகுதியாக உடையதானாலும், ஒரு படையானது, தன் தலைவர்கள் திறமையில்லாதவர்களாக இருந்தால், பயனற்று அழிந்துவிடும். 770

உறுப்பமைந்து ஊறஞ்சா வெல்படை வேந்தன்
வெறுக்கையுள் எல்லாம் தலை. 761

உலைவிடத்து ஊறஞ்சா வன்கண் தொலைவிடத்துத்
தொல்படைக்கு அல்லால் அரிது. 762

ஒலித்தக்கால் என்னாம் உவரி எலிப்பகை
நாகம் உயிர்ப்பக் கெடும். 763

அழிவின்று அறைபோகா தாகி வழிவந்த
வன்க ணதுவே படை. 764

கூற்றுடன்று மேல்வரினும் கூடி எதிர்நிற்கும்
ஆற்ற லதுவே படை. 765

மறமானம் மாண்ட வழிச்செலவு தேற்றம்
எனநான்கே ஏமம் படைக்கு. 766

தார்தாங்கிச் செல்வது தானை தலைவந்த
போர்தாங்கும் தன்மை யறிந்து. 767

அடற்றகையும் ஆற்றலும் இல்லெனினும் தானை
படைத்தகையால் பாடு பெறும். 768

சிறுமையுஞ் செல்லாத் துனியும் வறுமையும்
இல்லாயின் வெல்லும் படை. 769

நிலைமக்கள் சால உடைத்தெனினும் தானை
தலைமக்கள் இல்வழி இல். 770

*பகைவரே! என் தலைவனின் முன்னே எதிர்த்துவந்து நில்லாதீர்; அவன் முன்னர் எதிர்த்து வந்துநின்று, களத்தில் வீழ்ந்துபட்டு, நடுகற்களாக நிற்பவர் மிகப் பலர். 771*

*காட்டு முயலைக் குறிதவறாமல் எய்து வீழ்த்திக் கொன்ற அம்பினைக் காட்டிலும், யானைமேல் எறிந்து குறிதவறிய வேலினைத் தாங்குதலே படைமறவருக்கு இனிதாகும். 772*

*'பேராண்மை' என்பது பகைவர்க்கு அஞ்சாமல் எதிர்நின்று போரிடும் ஆண்மையே; அவருக்கு ஒருகேடு வந்தவிடத்து உதவிநிற்கும் ஆண்மையோ, அதனிலும் சிறந்ததாகும். 773*

*தன் கைவேலினைக் களிற்றின்மீது எறிந்துவிட்டுப் படைக் கலமின்றி வருபவன், தன்னுடம்பில் தைத்திருந்த பகைவரின் வேலைப் பறித்து மகிழ்ச்சி அடைவான்! 774*

*பகைவர்மீது சினந்து பார்த்த கண்கள், அவர் தம் கைவேலை எறிந்த காலத்தினும், வெகுட்சியை மாற்றி இமைக்குமானால் மறவருக்கு இழிவுதரும் அல்லவோ! 775*

*கழிந்துபோன தன் வாழ்நாட்களைக் கணக்கிட்டுப் பார்த்து, விழுப்புண் படாத நாட்களை எல்லாம், தான் தவறவிட்ட நாட்களுள் சேர்ப்பவனே படை மறவனாவான். 776*

*உலகைச் சூழ்ந்து பரவும் புகழையே விரும்பி, உயிரை வெறுத்துப் போரிடும் ஆண்மையுள்ள மறவரின் காலிலே, விளங்கும் கழல்களே அழகு உடையவாகும். 777*

*போர்க்களத்திலே தம் உயிருக்கும் அஞ்சாமல் போரிடும் படை மறவர்கள், தம் அரசனே தடுத்தாலும், தம் மனவூக்கத்தில் சிறிதும் குறையமாட்டார்கள். 778*

*தாம் உரைத்த சூளுரையிலிருந்து தப்பாமல் போரினைச் செய்து, அதனிடத்தில் சாகிறவரை, எவர்தாம் சூளுரை பிழைத்ததற்காகத் தண்டிப்பவர்கள்! 779*

*தம்மைப் பேணியவரின் கண்கள் நீர் சிந்தும்படியாகக் களத்தில் சாவைத் தழுவினால், அத்தகைய சாவு ஒருவன் இரந்தும் கொள்ளத்தகுந்த சிறப்பினை உடையதாகும். 780*

என்னைமுன் நில்லன்மின் தெவ்விர் பலர்என்னை
முன்நின்று கல்நின் றவர். 771

கான முயலெய்த அம்பினில் யானை
பிழைத்தவேல் ஏந்தல் இனிது. 772

பேராண்மை என்ப தறுகண்ஒன் றுற்றக்கால்
ஊராண்மை மற்றதன் எஃகு. 773

கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும். 774

விழித்தகண் வேல்கொண்டு எறிய அழித்திமைப்பின்
ஓட்டன்றோ வன்க ணவர்க்கு. 775

விழுப்புண் படாத நாளெல்லாம் வழுக்கினுள்
வைக்குந்தன் நாளை எடுத்து. 776

சுழலும் இசைவேண்டி வேண்டா உயிரார்
கழல்யாப்புக் காரிகை நீர்த்து. 777

உறினுயிர் அஞ்சா மறவர் இறைவன்
செறினுஞ்சீர் குன்றல் இலர். 778

இழைத்தது இகவாமைச் சாவாரை யாரே
பிழைத்தது ஒறுக்கிற் பவர். 779

புரந்தார்கண் நீர்மல்கச் சாகிற்பின் சாக்காடு
இரந்துகோள் தக்கது உடைத்து. 780

நட்பைப்போல் ஒருவன் செய்துகொள்வதற்கு அருமையான செயல் எதுவுமே இல்லை; நட்பைப்போலச் செயல்களுக்கு அருமையான பாதுகாப்பும் எதுவுமில்லை. 781

நல்ல தன்மையுள்ளவரோடு கொண்ட நட்பானது, வளர் பிறைபோல நாளுக்குநாள் வளரும்; பேதைகளின் நட்பு, தேய்பிறைபோல நாளுக்குநாள் தேய்ந்து போகும். 782

நல்ல பண்பு உடையவர்களின் தொடர்பானது, படிக்கப் படிக்க நூலின் நயம் மேன்மேலும் இனிமை தருவதுபோல், பழகப்பழக மேன்மேலும் இன்பம் தருவதாகும். 783

நட்புச் செய்துகொள்வது நண்பரோடு சிரித்து மகிழ்வதற்காக மட்டும் அன்று; அவர் மிகுதியாகத் தவறுசெய்யும்போது, அவரைக் கடிந்து திருத்துவதற்கே ஆகும். 784

நட்புச் செய்வதற்கு ஒருவரோடு ஒருவர் கலந்துபேசிப் பழகுதல் வேண்டியதில்லை; இருவரிடமும் உள்ள ஒத்த உணர்ச்சிகளே, நட்பு என்னும் உரிமையைத் தந்துவிடும். 785

உள்ளம் கலக்காமல், முகத்தோற்றத்தில் மகிழ்ச்சி காட்டி நட்புச்செய்வது நல்ல நட்பு ஆகாது; நெஞ்சத்தின் உள்ளேயும் மகிழ்ச்சியோடு நட்புச்செய்வதுதான் நல்ல நட்பு. 786

நண்பனுக்கு அழிவு வரும்போது அதை விலக்கி, அவனை நிலைபெறச் செய்து, தன்னையும் மீறிய அழிவின்போது தானும் அவனோடு துயரப்படுவதே நல்ல நட்பாகும். 787

ஆற்றுவெள்ளத்தில் உடையை இழந்தவனது மானத்தை மறைக்க, அவன் கை உடனே உதவுவதுபோல, நண்பன் துன்பத்தை விரைந்து நீக்குவதுதான் நல்ல நட்பு. 788

'நட்பு என்பது நிலையாகத் தங்கியிருக்கும் இடம் யாது?' என்றால், மனமாறுபாடு இல்லாமல், முடிந்த இடமெல்லாம், இணைந்துநின்று காத்து பேணும் நிலையாகும். 789

'இவர் எமக்கு இப்படிப்பட்டவர்', 'யாம் இவருக்கு இத்தன்மைவர்' என்று, நட்பின் அளவைச் சொன்னாலும், அந்த நட்பு தன் சிறப்பை இழந்து போகும். 790

செயற்கரிய யாவுள நட்பின் அதுபோல்
வினைக்கரிய யாவுள காப்பு. 781

நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்நீர பேதையார் நட்பு. 782

நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு. 783

நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்
மேற்சென்று இடித்தற் பொருட்டு. 784

புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
நட்பாம் கிழமை தரும். 785

முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்து
அகநக நட்பது நட்பு. 786

அழிவி னவைநீக்கி ஆறுய்த்து அழிவின்கண்
அல்லல் உழப்பதாம் நட்பு. 787

உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு. 788

நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனில் கொட்பின்றி
ஒல்லும்வாய் ஊன்றும் நிலை. 789

இனையர் இவரெமக்கு இன்னம்யாம் என்று
புனையினும் புல்லென்னும் நட்பு. 790

நன்றாக ஆராயாமல் நட்புச் செய்வதைவிடக் கெடுதி எதுவும் இல்லை; அப்படி நட்புச் செய்தபின் கைவிடுதல், நட்பை விரும்புவோரால் முடிவதும் இல்லை. 791

பலப்பல வகையாலும் ஒருவனைப்பற்றி ஆராய்ந்து தெளிந்தபின் கொள்ளாத நட்பானது, தானே முடிவில் சாக வேண்டிய அளவுக்குப் பெரும் துயரத்தைத் தந்துவிடும். 792

ஒருவன் குணத்தையும், அவன் பிறந்த குடியின் சிறப்பையும், அவன் குற்றங்குறைகளையும், நிலையாக அவனோடு இருக்கும் தோழர்களையும் அறிந்தே, நட்புச் செய்ய வேண்டும். 793

உயர்ந்த குடியிலே பிறந்தவனும், பழிச்சொற்களுக்கு வெட்கப்படுகிறவனும் ஆகிய ஒருவனை, எந்தப் பொருளைக் கொடுத்தானாலும் நட்பாக்கிக் கொள்ளவேண்டும். 794

நாம் தவறு செய்யும்பொழுது கடுமையாகப் பேசியும், மேலும் செய்யாதபடி தடுத்தும், உலக நடையை அறிவதற்கு வல்லவரின் நட்பினையே கொள்ளவேண்டும். 795

ஒருவனுக்கு கெடுதல் உண்டாவதாலும் ஒருவகை நன்மை உண்டு; அது, நண்பரின் உறவை அளந்து அறியும் அளவுகோலாக அது விளங்குவதுதான். 796

ஒருவனுக்கு ஊதியமாவது யாதென்றால், அறிவற்றவர்களோடு அறியாமல் கொண்ட நட்பினை, அவரைப்பற்றித் தெரிந்த அப்பொழுதிலேயே விட்டுவிடுதல் ஆகும். 797

உள்ளம் சிறுமை கொள்ளும்படி எதனையுமே நண்பனைக் குறித்து எண்ணக்கூடாது; அல்லல் காலத்திலே கைவிட்டுப் போனவர் நட்பையும் விட்டுவிட வேண்டும். 798

நாம் கெட்டுப்போன காலத்திலே, நம்மைக் கைவிட்டு விலகிப் போனவரின் நட்பைப்பற்றிச் சாகிற காலத்திலே நினைத்தாலும், நம் உள்ளம் வேதனையால் எரியும். 799

குற்றம் இல்லாத நல்லோர்களின் நட்பையே கொள்ளவேண்டும்; தகுதியில்லாத கீழோரின் நட்பினை, ஒன்றைக் கொடுத்தாவது விட்டுவிடுதல் வேண்டும். 800

நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின்
வீடில்லை நட்பாள் பவர்க்கு. 791

ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாம் துயரம் தரும். 792

குணனும் குடிமையும் குற்றமும் குன்றா
இனனும் அறிந்தியாக்க நட்பு. 793

குடிப்பிறந்து தன்கட் பழிநாணு வானைக்
கொடுத்தும் கொளல்வேண்டும் நட்பு. 794

அழச்சொல்லி அல்லது இடித்து வழக்கறிய
வல்லார்நட்பு ஆய்ந்து கொளல். 795

கேட்டினும் உண்டோர் உறுதி கிளைஞரை
நீட்டி அளப்பதோர் கோல். 796

ஊதியம் என்பது ஒருவற்குப் பேதையார்
கேண்மை ஒரீஇ விடல். 797

உள்ளற்க உள்ளஞ் சிறுகுவ கொள்ளற்க
அல்லற்கண் ஆற்றறுப்பார் நட்பு. 798

கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை அடுங்காலை
உள்ளினும் உள்ளம் சுடும். 799

மருவுக மாசற்றார் கேண்மை ஒன்றீத்தும்
ஒருவுக ஒப்பிலார் நட்பு. 800

'பழமை என்னும் தொடர்பின் தன்மை யாது?' என்றால், அது, உண்டாகிய உரிமைத் தொடர்பை எதுவும் சிதைத்து விடாமல் காத்துவரும் நல்ல நட்பு ஆகும். 801

நட்புக்கு உறுப்பாவது நெருக்கமாகப் பொருந்தும் உரிமைத் தன்மை ஆகும்; அப்படிப்பட்ட உரிமைத் தன்மைக்கு இலக்கணமாக நடத்தல் சான்றோரது கடமை. 802

தாம் கொண்ட நெருக்கமான உறவுத் தன்மையானது, தம் நண்பரிடத்திலும் அமைந்திராவிட்டால், அவரோடு நெடுங்காலம் பழகிய நட்பும் என்ன பயனைச் செய்யும்? 803

தம்மோடு கொண்ட நெருக்கமான நட்புரிமை காரணமாக, ஒரு செயலைச் செய்துவிட்டாலும், அதனைத் தாமும் விரும்பினவரைப் போல் இருப்பவரே, நல்ல நண்பர்கள். 804

நட்பாகக் கொண்டவர் நாம் மனம் விரும்பாத ஒரு செயலைச் செய்தாரென்றால், அதனை அறியாமை என்று நினைக்கக் கூடாது; நட்புரிமை என்றே நினைக்க வேண்டும். 805

அறிவுடையவர், தமது தொல்லைகளின்போது உதவியாக நின்றவரின் தொடர்பை, அவர் தொலைவான இடங்களுக்குப் போனாலும்கூடக் கைவிட மாட்டார்கள். 806

அன்பாலே பொருந்திய நட்பை உடையவர்கள், அழிவு வரக்கூடிய ஒரு செயலைச் செய்தாலும், அவர்மீது நாம் கொண்டிருந்த அன்பு அறுந்து போகாது. 807

நண்பரின் குற்றங்குறைகளைப் பிறர் சொன்னாலும் கேளாத நட்புரிமை வல்லவர்களுக்கு, நண்பர் குற்றம் செய்தால், அது அந்நாளின் குறையாகவே தோன்றும். 808

கெடுதல் இல்லாத வழியோடு தொடர்ந்து பழகிவந்த நட்பினை எதனாலும் கைவிடாத பண்பினரை, உலகத்தார் எல்லாருமே நண்பராகக் கொள்ள விரும்புவார்கள். 809

பழைமையான நண்பர்களிடத்திலும், சற்றும் விலகாமல் நடந்துகொள்ளும் பண்பினர், தம் பகைவராலும் விரும்பி நட்பாக்கிக் கொள்ளப் படுவார்கள். 810

பழைமை எனப்படுவது யாதெனில் யாதும்
கிழமையைக் கீழ்ந்திடா நட்பு. 801

நட்பிற்கு உறுப்புக் கெழுதகைமை மற்றதற்கு
உப்பாதல் சான்றோர் கடன். 802

பழகிய நட்புஎவன் செய்யும் கெழுதகைமை
செய்தாங்கு அமையாக் கடை. 803

விழைதகையான் வேண்டி யிருப்பர் கெழுதகையாற்
கேளாது நட்டார் செயின். 804

பேதைமை ஒன்றோ பெருங்கிழமை என்றுணர்க
நோதக்க நட்டார் செயின். 805

எல்லைக்கண் நின்றார் துறவார் தொலைவிடத்தும்
தொல்லைக்கண் நின்றார் தொடர்பு. 806

அழிவந்த செய்யினும் அன்பறார் அன்பின்
வழிவந்த கேண்மை யவர். 807

கேளிழுக்கங் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு
நாளிழுக்கம் நட்டார் செயின். 808

கெடாஅ வழிவந்த கேண்மையார் கேண்மை
விடாஅர் விழையும் உலகு. 809

விழையார் விழையப் படுப பழையார்கண்
பண்பின் தலைப்பிரியா தார். 810

நம்மை அள்ளிப் பருகுவர்போல அன்பு காட்டினாலும், நல்ல பண்பில்லாத தீயோரது நட்பானது, நாளுக்குநாள் பெருகுவதைவிடக் குறைந்துபோவதே இனியது. 811

செல்வம் உண்டானால் நட்புச் செய்தும், அது போனால் விலகியும் போகின்ற, ஒத்த தன்மையில்லாத தீயோரின் நட்பினைப் பெற்றாலும், இழந்தாலும் ஒன்றுதான். 812

தாம் அடைவதையே சீர்தூக்கிப் பார்த்திருக்கும் நட்பும், தாம் பெறுவதைக் கொள்ளும் விலைமகளிரும், நம் பொருளைக் களவாடும் கள்வரும், ஒரே தன்மையினரே! 813

போர்க்களத்தின் இடையில் நண்பரை விட்டுவிட்டுத் தாம் ஓடிப்போய்விடும், கல்லாத விலங்கு போன்றவரின் நட்பைவிடத் தனிமையே மிகவும் சிறந்தது. 814

நமக்குத் துன்பம் வந்தபோது உதவிசெய்து காப்பாற்றுவதற்கு வராத சிறுமையாளரது புன்மையான நட்பை அடைதலைவிட, அடையாததே நன்மையாகும். 815

பேதையாளனது மிகவும் செறிவான நட்பைக் காட்டிலும் அறிவுடையவர்களின் தொடர்பு இல்லாமல் இருப்பது, ஒருவனுக்கு கோடி நன்மை தருவதாக விளங்கும். 816

வெற்றுரை பேசிச் சிரித்து மகிழ்வதற்கு மட்டுமே பயன்படும் தீயோரின் நட்பைக் காட்டிலும், பகைவராலே, பத்துக் கோடிக்கும் மேலான நன்மை நமக்குக் கிடைக்கும். 817

நம்மாலே செய்து முடிக்கக்கூடிய செயலையும் செய்யவிடாமல், வீண்பொழுது போக்குபவரது நட்பு உறவை, அவரோடு பேசுவதைக் கைவிட்டு, நீக்கிவிட வேண்டும். 818

தம் செயல்கள் வேறாகவும், தம் பேச்சுக்கள் வேறாகவும் நடப்பவரின் தொடர்பானது, நனவில்மட்டுமே அல்லாமல், கனவிலும்கூடத் துன்பமானதாகும். 819

வீட்டிலுள்ளபோது நட்புரிமை பேசிவிட்டு, பொதுமன்றிலே பழித்துப் பேசுபவரின் தொடர்பு, எந்தச் சிறிய அளவுக்கேனும், நம்மை அடையாதபடி காத்தல் வேண்டும். 820

பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை
பெருகலிற் குன்றல் இனிது. 811

உறின்நட்டு அறின்ஒரூஉம் ஒப்பிலார் கேண்மை
பெறினும் இழப்பினும் என். 812

உறுவது சீர்தூக்கும் நட்பும் பெறுவது
கொள்வாரும் கள்வரும் நேர். 813

அமரகத்து ஆற்றறுக்கும் கல்லாமா அன்னார்
தமரின் தனிமை தலை. 814

செய்தேமஞ் சாராச் சிறியவர் புன்கேண்மை
எய்தலின் எய்தாமை நன்று. 815

பேதை பெருங்கெழீஇ நட்பின் அறிவுடையார்
ஏதின்மை கோடி யுறும். 816

நகைவகையர் ஆகிய நட்பின் பகைவரால்
பத்தடுத்த கோடி யுறும். 817

ஒல்லும் கருமம் உடற்று பவர்கேண்மை
சொல்லாடார் சோர விடல். 818

கனவினும் இன்னாது மன்னோ வினைவேறு
சொல்வேறு பட்டார் தொடர்பு. 819

எனைத்தும் குறுகுதல் ஓம்பல் மனைக்கெழீஇ
மன்றிற் பழிப்பார் தொடர்பு. 820

உள்ளத்தால் நெருக்கமில்லாமல் பழகுகிறவரது நட்பானது, நம்மை அழிப்பதற்கான இடம் கண்டால், எறிவதற்கு மறைந்துள்ள பட்டடை போன்றது ஆகும். 821

நம் இனத்தார் போலவே உறவுகாட்டி, உள்ளத்திலே நம் இனம் அல்லாத கீழோரின் நட்பானது, விலைமகளிர் மனம் போலப், பெறுகிற பயனுக்குத் தகுந்தபடி மாறிவிடும். 822

பலவான நல்ல அறநூல்களை எல்லாம் கற்றிருந்தாலும், தம் மனத்திலே நல்லபண்பினர் ஆகுதல் என்பது, பெருந்தன்மைப் பண்பு இல்லாதவருக்கு அரிய செயலாகும். 823

முகத்திலே இனிமை தோன்றச் சிரித்துப் பேசினபோதும் அகத்திலே துன்பத்தையே நினைக்கும் வஞ்சகரின் உறவினை, விளையும் தீமைக்கு அஞ்சி, விட்டுவிட வேண்டும். 824

மனத்தாலே நம்மோடு நெருக்கம் கொள்ளாதவரை, எந்த ஒருவகையாலும், அவர் சொல்லினால் மட்டுமே நல்ல நண்பராகத் தெளிந்துகொள்ளக் கூடாது. 825

நம்மிடம் பேசும்போது நமக்கு நண்பரைப் போலவே நல்ல பேச்சுகளைச் சொன்னாலும், நம்மோடு ஒட்டாதவரின் வஞ்சகத்தை விரைவிலேயே அறிந்துவிடலாம். 826

வில்லின் வளைவு தீமையைக் குறியாகக் கொண்டதே; இவ்வாறே பகைவரிடத்திலிருந்து வரும் வணக்கமான பேச்சையும் தீமைதரும் என்று தள்ளிவிட வேண்டும். 827

நம்மைத் தொழும்போதுகூடப் பகைவரது கையினுள் கொல்வதற்கான படை மறைக்கப்பட்டிருக்கும்; பகைவர் அழுதுவடிக்கும் கண்ணீரும் அந்தத் தன்மையதே! 828

வெளிப்பட மிகுதியாக நட்புச்செய்து, உள்ளத்திலே நம்மை இகழுகிறவர்களை, நாமும் மகிழ்ச்சியடையச் செய்து, நம் உள்ளத்தில் அந்த நட்பை அழித்துவிடல் வேண்டும். 829

பகைவரும் நட்பாகப் பழகுவதற்கு ஏற்றகாலம் வருங்காலத்திலே, அவருடன் முகத்தளவால் நட்புச்செய்து, உள்ளத்தில் போற்றாது நீக்கிவிடுதல் வேண்டும். 830

சீரிடங் காணின் எறிதற்குப் பட்டடை
நேரா நிரந்தவர் நட்பு. 821

இனம் போன்று இனமல்லார் கேண்மை மகளிர்
மனம்போல வேறு படும். 822

பலநல்ல கற்றக் கடைத்தும் மனநல்லர்
ஆகுதல் மாணார்க் கரிது. 823

முகத்தின் இனிய நகாஅ அகத்தின்னா
வஞ்சரை அஞ்சப் படும். 824

மனத்தின் அமையா தவரை எனைத்தொன்றும்
சொல்லினால் தேறற்பாற் றன்று. 825

நட்டார்போல் நல்லவை சொல்லினும் ஒட்டார்சொல்
ஒல்லை உணரப் படும். 826

சொல்வணக்கம் ஒன்னார்கண் கொள்ளற்க வில்வணக்கம்
தீங்கு குறித்தமை யான். 827

தொழுதகை யுள்ளும் படையொடுங்கும் ஒன்னார்
அழுதகண் ணீரும் அனைத்து. 828

மிகச்செய்து தம்மெள்ளு வாரை நகச்செய்து
நட்பினுள் சாப்புல்லற் பாற்று. 829

பகைநட்பாம் காலம் வருங்கால் முகநட்டு
அகநட்பு ஒரீஇ விடல். 830

'பேதைமை' என்பதன் தன்மை யாது?, என்றால், ஒன்றைச் செய்யும்போது வரும் துன்பத்தை ஏற்றுக்கொண்டு, அதனால் வரும் ஊதியத்தை விட்டுவிடுதல் ஆகும். 831

பேதைமை என்பவற்றுள் எல்லாம் பெரிய பேதைமையாவது, விரும்பத்தகாத ஒரு செயலைச் செய்யத் தொடங்கி, அதையும் பொருத்தமற்ற வகையில் செய்தல் ஆகும். 832

பழிக்கு வெட்கப்படாமையும், நன்மைகளை விரும்பாதிருத்தலும், அன்பரிடம் அன்புகொள்ளாமையும், எதனையும் பேணிக் காவாமையும், பேதையரது தொழிலாகும். 833

நூல்களை முறையாக ஓதி உணர்ந்தும், பிறருக்குச் சொல்லி வந்தும், தான் அடக்கத்தைக் கொள்ளாத பேதையிலும், பெரிய பேதையர் உலகில் எவரும் இலர். 834

இந்தப் பிறப்பில் பேதைமைச் செயல்களையே செய்துவரும் பேதை, தொடர்ந்துவரும் ஏழு பிறப்பினையும், தான் புகுந்து அழுந்தும் நரகங்களாகவே காண்பான். 835

ஒன்றின் செய்வகை அறியாத பேதை அதனைச் செய்வதற்கு முற்படுவதால், அது பொய்யாகிப் போவதுடன், அவனும் தளைபூண்கின்ற துயரத்தை அடைவான். 836

பேதை, தன் முன்வினைப்பயனால் பெருஞ்செல்வத்தை அடைந்த காலத்தில், தொடர்பில்லாத பலரும் நன்றாக அனுபவிக்க, அவன் சுற்றத்தார் பசியால் வாடுவர். 837

பேதை ஒரு பொருளைத் தனது உடைமையாகப் பெற்றால், மயங்கிய ஒருவன் மேன்மேலும் கள்ளைப் பருகியதுபோல நிலைமாறி வழிதவறி நடப்பான். 838

ஒருவகையில், பேதையோடு கொள்ளும் தொடர்பும் இனிமை தருவதே யாகும்; அதுதான், அவனைப் பிரிந்த விடத்துத் துன்பம் தரும் தன்மை இல்லாததால். 839

சான்றோர்களின் கூட்டத்தில் ஒரு பேதை புகுதலானது, மாசுபடிந்த காலைக் கழுவாமல், தொழுகைக்குரிய பள்ளியினுள்ளே எடுத்துவைப்பது போன்றதாகும். 840

பேதைமை என்பதொன்று யாதெனின் ஏதங்கொண்டு
ஊதியம் போக விடல். 831

பேதைமையுள் எல்லாம் பேதைமை காதன்மை
கையல்ல தன்கண் செயல். 832

நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்
பேணாமை பேதை தொழில். 833

ஓதி உணர்ந்தும் பிறர்க்குரைத்தும் தான்அடங்காப்
பேதையிற் பேதையார் இல். 834

ஒருமைச் செயலாற்றும் பேதை எழுமையும்
தான்புக் கழுந்தும் அளறு. 835

பொய்படும் ஒன்றோ புனைபூணும் கையறியாப்
பேதை வினைமேற் கொளின். 836

ஏதிலார் ஆரத் தமர்பசிப்பர் பேதை
பெருஞ்செல்வம் உற்றக் கடை. 837

மையல் ஒருவன் களித்தற்றால் பேதைதன்
கையொன்று உடைமை பெறின். 838

பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கண்
பீழை தருவதொன்று இல். 839

கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றால் சான்றோர்
குழாஅத்துப் பேதை புகல். 840

அறிவில்லாத தன்மையே, வறுமையுள் கொடிய வறுமை; பிற, பொருள் இல்லாத வறுமையை உலகம் நிலையான வறுமையாக ஒருபோதும் கருதாது. 841

அறிவில்லாத ஒருவன், மனமகிழ்ச்சியோடு ஒரு பொருளை ஒருவனுக்குத் தருவதென்பது, பெறுவானது தவத்தின் பயனே அல்லாமல், வேறு எதனாலும் இல்லை. 842

அறிவில்லாதவர், தமக்குத்தாமே செய்துகொள்ளும் வருத்தம் தரக்கூடிய துன்பங்கள், அவரது பகைவராலும் அவருக்குச் செய்யமுடியாதவையாக இருக்கும். 843

'அறியாமை என்று சொல்லப்படுவது யாது?' என்றால், அஃது, அறிவில்லாதவனும், 'தான் அறிவுடையவன்' என்று நினைத்துச் செருக்கு அடைதலாகும்! 844

தான் கல்லாத ஒரு செயலையும், அறிவில்லாததால் துணிந்து செய்யத் தொடங்குதல், எதையும் குறையில்லாமல் செய்யவல்ல செயல்களிலும், ஐயத்தைத் தரும். 845

தம்மிடத்திலே உள்ள குற்றங்கள் மறையாதபோது, உடல் முழுவதும் ஆடைகளாலே மறைத்துக்கொண்டு, நல்லவர் போலத் திரிதல், அறிவற்ற தன்மை ஆகும். 846

அரியவான மறைகளைக் கற்றும், உண்மைப்பொருளை அறியாமல் சோர்வு அடைகின்ற அறிவில்லாதவன், தனக்குத்தானே பெரிய தீமைகளைச் செய்து கொள்வான். 847

அறிவுடையோர் 'இன்னின்னபடி செய்க' என்று ஏவிய போதும், அதன்படி செய்யமாட்டாதவன், தானும் தெளியாதவன், உயிர் போகுமளவும் துன்பம் அடைவான். 848

தன் அறியாமையால், தான் கண்டபடியே பிறருக்குக் காட்டுபவன், தானும் உண்மை காணாதவன், என்றுமே தான் கண்டபடி காண்பவனாகவே விளங்குவான். 849

உலகத்தார் 'உண்டு' என்னும் ஒரு பொருளை, தன்னுடைய அறியாமையாலே 'இல்லை' என்று சொல்லுபவன், உலகத்தாரால் பேயாகக் கருதி ஒதுக்கிவைக்கப் படுவான். 850

அறிவின்மை இன்மையுள் இன்மை பிறிதின்மை
இன்மையா வையாது உலகு. 841

அறிவிலான் நெஞ்சுவந்து ஈதல் பிறிதியாதும்
இல்லை பெறுவான் தவம். 842

அறிவிலார் தாம்தம்மைப் பீழிக்கும் பீழை
செறுவார்க்கும் செய்தல் அரிது. 843

வெண்மை எனப்படுவது யாதெனில் ஒண்மை
உடையம்யாம் என்னும் செருக்கு. 844

கல்லாத மேற்கொண்டு ஒழுகல் கசடற
வல்லதூஉம் ஐயம் தரும். 845

அற்றம் மறைத்தலோ புல்லறிவு தம்வயின்
குற்றம் மறையா வழி. 846

அருமறை சோரும் அறிவிலான் செய்யும்
பெருமிறை தானே தனக்கு. 847

ஏவவுஞ் செய்கலான் தான்தேறான் அவ்வுயிர்
போஒம் அளவுமோர் நோய். 848

காணாதாற் காட்டுவான் தான்காணான் காணாதான்
கண்டானாம் தான்கண்ட வாறு. 849

உலகத்தார் உண்டென்பது இல்லென்பான் வையத்து
அலகையா வைக்கப் படும். 850

எல்லா உயிர்களுக்கும், பிற உயிர்களோடு கூடாமை என்னும் தீய குணத்தை வளர்க்கும் குற்றம், "இகல்" என்று பெரியோர்கள் சொல்லியுள்ளார்கள். 851

தம்முடன் கூடாமையை நினைத்து, ஒருவன் வெறுக்கக்கூடியன செய்தானானாலும்; அவனோடு மாறுபடுதலைக் குறித்து, அவனுக்குத் துன்பம் செய்யாதிருப்பதே உயர்ந்தது! 852

'மாறுபாடு' என்னும் துன்பம் செய்யும் நோயை மனத்தில் இருந்தே நீக்கிவிட்டால், அவனுக்கு எந்தக் காலத்திலும் உள்ளவனாகின்ற நிலையான புகழை, அதுவே தரும். 853

'மாறுபாடு' என்னும் துன்பங்களுள் பெரிதான துன்பம் இல்லையானால், அவ்வின்மையே ஒருவனுக்கு இன்பங்களுள் எல்லாம் சிறந்த இன்பத்தைத் தரும். 854

தம் உள்ளத்திலே மாறுபாடு தோன்றியபொழுது, அதனை ஏற்றுக்கொள்ளாமல் சாய்ந்து ஒழுகவல்லவரை வெல்லக் கருதும் தன்மை உடையவர், எவருமே இலர். 855

'பிறரோடு அவரினும் மிகுதியாக மாறுபடுதல் எனக்கு இனிது' என்று, அதனைச் செய்பவனது உயிர்வாழ்க்கை, சிறுபொழுதிற்குள் பிழைத்தலும் கெடுதலும் ஆகிவிடும். 856

இகலோடு பொருந்தும் தீய அறிவினைக் கொண்டவர், வெற்றி பொருந்துதலை உடைய நீதிநூற்களின் பொருள்களை ஒருபோதுமே உணர்ந்து அறிய மாட்டார்கள். 857

தன் உள்ளத்திலே மாறுபாடு தோன்றியபோது, அதனை எழாமல் தடுத்துக் கொள்ளுதலே ஆக்கம் தருவதாகும்; அதனை மிகுத்துக் கொண்டால் அவனுக்குக் கேடுவரும். 858

தனக்கு நல்ல காலம் வரும்போது, காரணமிருந்தாலும் ஒருவன் இகலைப்பற்றி நினைக்கமாட்டான்; தனக்குக் கேடு காலம் வரும்போது பெரிதாக மாறுபடுதலை நினைப்பான். 859

'மாறுபாடு' என்னும் ஒன்றினால் ஒருவனுக்கு எல்லாத் துன்பங்களும் உண்டாகும்; நட்புச் செயலினாலோ, நல்ல நீதியாகிய பெருமிதநிலை உண்டாகும். 860

இகலென்ப எல்லா உயிர்க்கும் பகலென்னும்
பண்பின்மை பாரிக்கும் நோய். 851

பகல்கருதிப் பற்றா செயினும் இகல்கருதி
இன்னாசெய் யாமை தலை. 852

இகலென்னும் எவ்வநோய் நீக்கின் தவலில்லாத்
தாவில் விளக்கம் தரும். 853

இன்பத்துள் இன்பம் பயக்கும் இகலென்னும்
துன்பத்துள் துன்பம் கெடின். 854

இகலெதிர் சாய்ந்தொழுக வல்லாரை யாரே
மிகலூக்கும் தன்மை யவர். 855

இகலின் மிகலினிது என்பவன் வாழ்க்கை
தவலும் கெடலும் நணித்து. 856

மிகன்மேவல் மெய்ப்பொருள் காணார் இகன்மேவல்
இன்னா அறிவி னவர். 857

இகலிற்கு எதிர்சாய்தல் ஆக்கம் அதனை
மிகலூக்கின் ஊக்குமாங் கேடு. 858

இகல்காணான் ஆக்கம் வருங்கால் அதனை
மிகல்காணும் கேடு தரற்கு. 859

இகலானாம் இன்னாத எல்லாம் நகலானாம்
நன்னயம் என்னும் செருக்கு. 860

தம்மைவிட வலியவருக்குப் பகையாகி அவரை எதிர்த்தலைக் கைவிடல் வேண்டும்; தம்மினும் மெலியவருக்குப் பகையாவதை விடாமல் கொள்வதற்கு விரும்ப வேண்டும். 861

தன் சுற்றத்தாரிடம் அன்பில்லாதவன், வலிய துணையில்லாதவன், தானும் வலிமையற்றவன், பகைவரது வலிமையை எவ்வாறு, எதனால் போக்க முடியும்? 862

அஞ்சுபவன், அறியவேண்டுவதை அறியாதவன், பிறருடன் பொருந்தாதவன், எவருக்கும் கொடுத்து உதவாதவன், பகைவருக்கு அழிப்பதற்கு எளியவனாவான். 863

நீங்காத சினத்தை உடையவன், நிறைவான மனவலிமை இல்லாதவன் ஆகிய ஒருவன்மீது பகைத்து வெற்றியடைதல், எக்காலத்திலும் எவர்க்கும் எளிதாகும். 864

நீதிநூல்களைக் கல்லாதவன், அவை விதித்த செயல்களைச் செய்யாதவன், தனக்கு வரும் பழியைப் பாராதவன், பண்பற்றவன், ஆகியவனைப் பகைத்தலும் இனிதாகும். 865

தன்னையும் பிறரையும் அறியாமைக்கு காரணமான சினம் கொண்டவன், மேன்மேலும் பெருகும் காமத்தான் பகைமை, பிறரால் விரும்பி ஏற்றுக் கொள்ளப்படும். 866

தொடங்கும்போது உடனிருந்து, பின் கேடுகளைச் செய்பவன் பகைமையை, சில பொருள்களை அழியும்படி கொடுத்தாவது உறுதியாகப் பெற்றுக்கொள்ள வேண்டும். 867

நல்ல குணம் எதுவும் இல்லாதவனாய், குற்றங்களும் பலவாக உள்ளவன், எவ்வகைத் துணையுமே இல்லாதவன் ஆவான்; அப்படி இல்லாததே அவன் பகைவருக்குத் துணையாகும். 868

நீதியை அறிதல் இல்லாதவரும் அஞ்சுபவரும் ஆகியவரைப் பெற்றால், அவரைப் பகைத்தவர்க்கு, உயர்ந்த இன்பங்கள் எல்லாம் சென்று நீங்காமல் பொருந்தி யிருக்கும். 869

நீதிநூலைக் கல்லாதவனோடு பகைகொண்டு அழிப்பதனால் வரும் சிறுபொருளை, எப்போதும் தான் அடைவதற்கு நினையாதவனை, வெற்றிப் புகழும் சேர்ந்திருக்காது. 870

வலியார்க்கு மாறேற்றல் ஓம்புக ஓம்பா
மெலியார்மேல் மேக பகை . 861

அன்பிலன் ஆன்ற துணையிலன் தான்துவ்வான்
என்பரியும் ஏதிலான் துப்பு. 862

அஞ்சும் அறியான் அமைவிலன் ஈகலான்
தஞ்சம் எளியன் பகைக்கு. 863

நீங்கான் வெகுளி நிறையிலன் எஞ்ஞான்றும்
யாங்கணும் யார்க்கும் எளிது. 864

வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான்
பண்பிலன் பற்றார்க்கு இனிது. 865

காணாச் சினத்தான் கழிபெருங் காமத்தான்
பேணாமை பேணப் படும். 866

கொடுத்தும் கொளல்வேண்டும் மன்ற அடுத்திருந்து
மாணாத செய்வான் பகை. 867

குணனிலனாய்க் குற்றம் பலவாயின் மாற்றார்க்கு
இனனிலனாம் ஏமாப்பு உடைத்து. 868

செறுவார்க்குச் சேணிகவா இன்பம் அறிவிலா
அஞ்சும் பகைவர்ப் பெறின். 869

கல்லான் வெகுளுஞ் சிறுபொருள் எஞ்ஞான்றும்
ஒல்லானை ஒல்லாது ஒளி. 870

'பகை' என்று கூறப்படும் தீமை தருவதனை, ஒருவன், விளையாட்டிடத்தில் என்றாலும் விரும்புதல் நன்மையாகாது; இதுவே நீதிநூல்களின் முடிந்த முடிபாகும். 871

வில்லை ஏராகவுடைய உழவரான மறவரோடு பகை கொண்டாலும், சொல்லை ஏராகவுடைய உழவரான நுண்ணறிவை உடையவரோடு பகைகொள்ளக் கூடாது. 872

தான் துணைவலிமை இல்லாமல் தனியனாய் இருப்பதறிந்தும், பலருடன் பகைகொண்டு வாழும் அறிவற்றவன், பித்துற்ற மக்களிலும் அறிவிழந்தவன் ஆவான். 873

தான் வேண்டும்போது, தன் பகைவருள் சிலரைப் பிரித்து நண்பராக்கிக் கொள்ளும் சூழ்ச்சித்திறனுடைய அரசனது பெருமையினுள்ளே, இவ்வுலகமே அடங்கிவிடும். 874

'தனக்கு ஒரு துணை இல்லை; பகையோ எனில் இரண்டு' என்னும்போது, அதனுள் ஒன்றை அப்போதைக்குத் தனக்கு இனிய துணையாகுமாறு செய்துகொள்ளல் வேண்டும். 875

பகைவனை முன்பே தெளிந்தாலும் தெளியாவிட்டாலும், தனக்கு மற்றொரு செயலினாலே தாழ்வு வந்தவிடத்து, அவரைக் கூடாதும் நீக்காதும், விட்டுவைக்க வேண்டும். 876

தான் நொந்ததைத் தாமாகவே அறியாத நண்பருக்குச் சொல்லவேண்டாம்; வலியிழந்த நேரத்தை எதிர்பார்க்கும் பகைவரிடம் தன் மெலிவையும் புலப்படுத்த வேண்டாம். 877

தான் செய்யும் செயலின் வகையை அறிந்து, அது முடிவதற்கு ஏற்றபடி தன்னைப் பெருக்கிச் சோம்பல் புகாமல் காக்கவே, பகைவரிடம் உள்ள செருக்குத் தானே தேய்ந்துவிடும். 878

களைய வேண்டிய முள்மரத்தை அது இளைதான பொழுதே களைந்துவிடுக; முதிர்ந்தபின் அதைக் களைதலைச் செய்தால், அது களைபவர் கையினைத் தான் களைந்துவிடும் 879

பகைவரின் செருக்கைக் கெடுக்கும் வாய்ப்பு வந்தபோதும், அவர் மீதுள்ள இகழ்ச்சியால் அதனைச் செய்யாத அரசர், பின்னர், உயிரோடு இருப்பதற்கும் உரியவர் ஆகார். 880

பகையெனும் பண்பி லதனை ஒருவன்
நகையேயும் வேண்டற்பாற் றன்று. 871

வில்லேர் உழவர் பகைகொளினும் கொள்ளற்க
சொல்லேர் உழவர் பகை. 872

ஏமுற் றவரினும் ஏழை தமியனாய்ப்
பல்லார் பகைகொள் பவன். 873

பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை யாளன்
தகைமைக்கண் தங்கிற்று உலகு. 874

தன்துணை யின்றால் பகையிரண்டால் தான்ஒருவன்
இன்துணையாக் கொள்கவற்றி னொன்று. 875

தேறினும் தேறா விடினும் அழிவின்கண்
தேறான் பகாஅன் விடல். 876

நோவற்க நொந்தது அறியார்க்கு மேவற்க
மென்மை பகைவ ரகத்து. 877

வகையறிந்து தற்செய்து தற்காப்ப மாயும்
பகைவர்கண் பட்ட செருக்கு. 878

இளைதாக முள்மரங் கொல்க களையுநர்
கைகொல்லுங் காழ்த்த விடத்து. 879

உயிர்ப்ப உளரல்லர் மன்ற செயிர்ப்பவர்
செம்மல் சிதைக்கலா தார். 880

நிழலும் நீரும் நுகரும் காலத்தில் இன்பமானாலும், பின்னர் நோய் செய்யும்; தழுவவேண்டும் சுற்றத்தாரின் இயல்புகளும் முதலில் இனியவாயினும், பின்னர் இன்னாதனவாகும். 881

வாளைப்போல வெளிப்பட்டு நிற்கும் பகைவர்க்கு அஞ்சவேண்டாம்; சுற்றத்தார்போல அன்புகாட்டி உள்ளத்தில் பகைமறைத்து நிற்பவருக்கே, அஞ்ச வேண்டும். 882

உட்பகையாக விளங்குபவருக்கு அஞ்சித் தன்னைக் காத்துக் கொள்ள வேண்டும்; அங்ஙனம் காவாதிருப்பின், தனக்குத் தளர்ச்சி வந்தபோது, அவர்கள் கெடுதல் செய்வார்கள். 883

உள்ளத்தில் திருந்தாத உட்பகை தோன்றினால், அரசன் அதனை அப்போதே ஒழிக்க வேண்டும்; இல்லையானால், அஃது சுற்றம் வசமாகாதபடி குற்றங்களைத் தந்து விடும். 884

புறத்தே உறவுமுறைத் தன்மையோடு பழகுவாரிடம் உட்பகை தோன்றினால், அஃது, அவனுக்கு இறத்தல் முறைமையோடு கூடிய பல குற்றங்களையும் தரும். 885

தனக்கு உட்பட்டவர் இடத்திலேயே பகைமை தோன்றினால், தனக்குச் சாவாதிருப்பது கைகூடுவது என்பதும் எக்காலத்திலும் அரியதாகும். 886

செப்பின் புணர்ச்சிபோல வெளிப்பார்வைக்குப் பொருந்தினவர் ஆயினும், உட்பகை உண்டாகிய குடியிலுள்ளவர்கள் தம் உள்ளத்தினாலே ஒன்றுகூட மாட்டார்கள். 887

முன் உயர்ந்து வளர்ந்ததே என்றாலும், உட்பகையுள்ள குடியானது, அரத்தினால் அராவப்பட்ட இரும்பைப்போல் நாளுக்குநாள் தேய்ந்து அழிந்து போகும். 888

ஒருவனது உட்பகை, அவன் பெருமையை நோக்க, எள்ளின் பிளவுபோன்று சிறிதானது என்றாலும், அதனாலும், அவன் பெருமை எல்லாம் பின்காலத்தில் கெட்டுவிடும். 889

மனம் பொருந்தாதவரோடு கூடியிருந்து வாழும் வாழ்க்கை ஒரு குடிசையுள்ளே பாம்போடுகூடத் தங்கியிருந்து வருந்துவதைப் போன்றதாகும். 890

நிழல்நீரும் இன்னாத இன்னா தமர்நீரும
இன்னாவாம் இன்னா செயின். 881

வாள்போல் பகைவரை அஞ்சற்க அஞ்சுக
கேள்போல் பகைவர் தொடர்பு. 882

உட்பகை அஞ்சித்தற் காக்க உலைவிடத்து
மட்பகையின் மாணத் தெறும். 883

மனமாணா உட்பகை தோன்றின் இனமாணா
ஏதம் பலவும் தரும். 884

உறல்முறையான் உட்பகை தோன்றின் இறல்முறையான்
ஏதம் பலவும் தரும். 885

ஒன்றாமை ஒன்றியார் கட்படின் எஞ்ஞான்றும்
பொன்றாமை ஒன்றல் அரிது. 886

செப்பின் புணர்ச்சிபோல் கூடினும் கூடாதே
உட்பகை உற்ற குடி. 887

அரம்பொருத பொன்போலத் தேயும் உரம்பொருது
உட்பகை யுற்ற குடி. 888

எட்பக வன்ன சிறுமைத்தே ஆயினும்
உட்பகை உள்ளதாம் கேடு. 889

உடம்பாடு இலாதவர் வாழ்க்கை குடங்கருள்
பாம்போடு உடனுறைந் தற்று. 890

மேற்கொண்ட செயல்களை முடிக்கவல்லவரின் ஆற்றல்களை ஒதுக்கக் கூடாது; அதுவே தீங்கு வராமல் காப்பவரின் காவல்களுள் எல்லாம், மிகச் சிறந்தது ஆகும். 891

பெரியோர்களை நன்கு மதிக்காமல் நடந்தால், அப் பெரியோரால் அவருக்கு எவ்விடத்தும் நீங்காத துன்பங்களை அது கொடுத்து விடும். 892

தான் விரும்பிய பொழுதிலேயே பகையரசரைக் கொல்லவல்ல வேந்தரிடத்தே, தான் கெடுதலை வேண்டுபவன், நீதிநூலைக் கடந்து பிழைகளைச் செய்வானாக! 893

மூவகை ஆற்றலும் உள்ளவருக்கு, அவை இல்லாதவர் துன்பத்தைச் செய்தல், தானே வரக்கூடிய கூற்றுவனை முற்பட வருமாறு கைகாட்டி அழைப்பதைப் போலாகும். 894

பகைவருக்கு வெய்யதான வலிமிகுந்த, வேந்தனால் தாக்கப்பட்ட அரசர், தப்பிப் பிழைத்து எவ்விடத்துச் சென்றாலும், எங்கும் உயிர்பிழைத்திருக்கவே மாட்டார்கள். 895

காட்டினுள் சென்றவன், காட்டுத்தீயால் சுடப்பட்டாலும், ஒருவழியாக உயிர்பிழைத்து விடுவான்; பெரியாரைப் பிழைத்து நடந்தவனுக்கு உய்வே கிடையாது. 896

சாபமிடுதலும் அருள்செய்தலும் ஆகிய தகுதிகளால் சிறந்த தவத்தோர் சினங்கொண்டால், பலவகையாலும் சிறந்த வாழ்க்கையும், பெரும்பொருளும் அழிந்து விடும். 897

குன்றுபோலத் தவநெறியால் உயர்ந்தவர்கள் கெடவேண்டும் என்று நினைப்பார்களானால், தம் குடியோடு நிலைபெற்றார் போன்ற பெருஞ்செல்வரும், மாய்வார்கள். 898

உயர்ந்த விரதவாழ்வைக் கொண்டவர்கள் சீற்றம் அடைந்தால், இந்திரன் போன்ற வாழ்க்கையுடையவனும், அப்போதே அழிந்து போய்விடுவான். 899

மிகவும் பெரிய தவத்தை உடையவர் சினங்கொண்டாரானால், மிகப்பெரிய சார்பு உடையவரானாலும் உய்யமாட்டார்கள்; அப்போதே அழிவார்கள். 900

ஆற்றுவார் ஆற்றல் இகழாமை போற்றுவார்
போற்றலுள் எல்லாம் தலை. 891

பெரியாரைப் பேணாது ஒழுகிற் பெரியாராற்
பேரா இடும்பை தரும். 892

கெடல்வேண்டின் கேளாது செய்க அடல்வேண்டின்
ஆற்று பவர்கண் இழுக்கு. 893

கூற்றத்தைக் கையால் விளித்தற்றால் ஆற்றுவார்க்கு
ஆற்றாதார் இன்னா செயல். 894

யாண்டுச்சென்று யாண்டும் உளராகார் வெந்துப்பின்
வேந்து செறப்பட் டவர். 895

எரியாற் சுடப்பனும் உய்வுண்டாம் உய்யார்
பெரியார்ப் பிழைத்தொழுகு வார். 896

வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளும் என்னாம்
தகைமாண்ட தக்கார் செறின். 897

குன்றன்னார் குன்ற மதிப்பிற் குடியொடு
நின்றன்னார் மாய்வர் செறின். 898

ஏந்திய கொள்கையார் சீறின் இடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும். 899

இறந்தமைந்த சார்புடைய ராயினும் உய்யார்
சிறந்தமைந்த சீரார் செறின். 900

தம் மனையாள் விரும்புகிறபடியே வாழ்கின்றவர், சிறந்த அறப்பயன்களையும் அடையார்; பொருள் செய்தலுக்கு முற்படுகின்றவர் இகழ்ந்து ஒதுக்கும் பொருளும் அதுவே. 901

தன் ஆண்மையைப் பேணாது, மனையாளது பெண்மையையே விரும்புகிறவன் செல்வம், இவ்வுலகத்து ஆண்பாலர்க்குப் பெரியதோர் நாணமாக வெட்கம் தரும். 902

தன் இல்லாளிடத்தே தாழ்ந்துபோவதற்கு ஏதுவான ஒருவனது அச்சம், அஃது இல்லாத நல்லோர்களிடையே செல்லும் காலத்தில், எப்போதும் நாணத்தையே தரும். 903

தன் மனையாளுக்கு அஞ்சி வாழும் மறுமைப்பயனை இல்லாத ஒருவனுக்கு, செயலைச் செய்யும் செயலாண்மை இருந்த போதிலும், அது நல்லோரால் மதிக்கப் படாது. 904

தன் மனையாளுக்கு எப்போதும் அஞ்சுகின்றவன், தான் தேடிய பொருளேயானாலும், அதனால் நல்லவர்களுக்கு நல்லசெயல் செய்வதற்கும் அச்சங் கொள்வான். 905

தம் இல்லாளின் மூங்கில் போன்ற தோளைக் கண்டதும் அஞ்சுகிறவர்கள், வீரத்தால் சுவர்க்கம்பெற்ற அமரரைப் போல வாழ்ந்தாரானாலும், ஆண்மையற்றவரே. 906

தன் இல்லாள் ஏவியபடியே செய்து திரிகின்ற ஒருவனது ஆண்தன்மையைக் காட்டிலும், நாணத்தையுடைய அவளது பெண்தன்மையே மேலானதாகும். 907

தம் மனையாள் விரும்பியபடியே நடப்பவர்கள், தம்முடைய நண்பர்களின் குறைகளைத் தீர்க்கமாட்டார்கள்; மறுமைக்கு உதவும் எந்த அறத்தையுமே செய்ய மாட்டார்கள். 908

அறச்செயலும், அது முடிப்பதற்கு ஏதுவான பொருளைச் செய்தலும், பிறவான இன்பச் செயல்களும், தம் மனையாள் ஏவலைச் செய்வாரிடத்தில் உள்ளனவாகா. 909

கருமச் சூழ்ச்சிக்கண் சென்ற நெஞ்சமும், அதனால் ஆகிய செல்வமும் உடைய வேந்தர்க்கு, மனையாளைச் சேர்ந்து நடப்பதனால் உண்டாகும் பேதைமை உண்டாகாது. 910

*மனைவிழைவார் மாண்பயன் எய்தார் வினைவிழைவார்*
*வேண்டாப் பொருளும் அது. 901*

*பேணாது பெண்விழைவான் ஆக்கம் பெரியதோர்*
*நாணாக நாணுத் தரும். 902*

*இல்லாள்கண் தாழ்ந்த இயல்பின்மை எஞ்ஞான்றும்*
*நல்லாருள் நாணுத் தரும். 903*

*மனையாளை அஞ்சும் மறுமையி லாளன்*
*வினையாண்மை வீறெய்தல் இன்று. 904*

*இல்லாளை அஞ்சுவான் அஞ்சும்மற்று எஞ்ஞான்றும்*
*நல்லார்க்கு நல்ல செயல். 905*

*இமையாரின் வாழினும் பாடிலரே இல்லாள்*
*அமையார்தோள் அஞ்சு பவர். 906*

*பெண்ணேவல் செய்தொழுகும் ஆண்மையின் நாணுடைப்*
*பெண்ணே பெருமை உடைத்து. 907*

*நட்டார் குறைமுடியார் நன்றாற்றார் நன்னுதலாள்*
*பெட்டாங்கு ஒழுகு பவர். 908*

*அறவினையும் ஆன்ற பொருளும் பிறவினையும்*
*பெண்ணேவல் செய்வார்கண் இல். 909*

*எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க் கெஞ்ஞான்றும்*
*பெண்சேர்ந்தாம் பேதைமை இல். 910*

அன்பால் விரும்பாமல், அவன்தரும் பொருளையே விரும்பும் மகளிரது, அவனையே அன்பால் விரும்பியதுபோலப் பேசும் பேச்சும், அவனுக்குப் பின்னர்த் துன்பம் தரும். 911

ஒருவனிடமுள்ள பொருளின் அளவை அறிந்து, அதனை அடையும்வரை பண்பைப்பற்றிப் பேசும் பண்பில்லாத மகளிரது நடத்தையை, ஆராய்ந்து விட்டுவிடுக. 912

கொடுக்கும் பொருளையே விரும்பும் பொதுமகளிரது பொய்யான முயக்கமானது, பிணம் எடுப்பவர் இருட்டறையில் முன் அறியாத பிணத்தைத் தழுவியது போலாகும். 913

இன்பமாகிய பொருளை இகழ்ந்து, பொருளையே விரும்பும் பொதுமகளிரது இழிந்த இன்பத்தை, அருளோடுகூடிய பொருளை ஆராய்ந்து செய்யும் அறிவாளர் விரும்பார். 914

இயற்கையான மதிநலத்தால் மாட்சிமைப்பட்ட அறிவினை உடையவர்கள், பொருள் தருவார்க்கெல்லாம் பொதுவான ஆசைகாட்டும் மகளிரது இழிவான நலத்தைத் தீண்டார். 915

தம் அழகால் செருக்கடைந்து, தம் புன்மையான நலத்தை, விலை தருவாரிடம் எல்லாம் பரப்பும் பொதுமகளிர் தோளினை, தம் புகழை நினைக்கும் உயர்ந்தோர் தீண்டமாட்டார். 916

நெஞ்சிலே பொருள்மேல் ஆசைகொண்டு, அதைப் பெறக் கருதிப் பொருள் தருபவரோடு உடலால் கூடியிருக்கும் மகளிரது தோள்களை, நெஞ்சமில்லாதவர்களே சேர்வர். 917

வஞ்சித்தலில் வல்ல மகளிரது முயக்கத்தை, அவ் வஞ்சனையை ஆராய்ந்து அறியும் அறிவுடையவர் அல்லாத பிறருக்கு, 'அணங்குத் தாக்கு' என்று சொல்வார்கள். 918

உயர்ந்தோர் இழிந்தோர் என்னும் எவரையும், விலை தந்தால் தழுவுகிற மகளிரது மெல்லிய தோள்கள், அறிவில்லாத கீழ்மக்கள் புகுந்து அழுந்தும் நரகம் ஆகும். 919

எப்போதும் கவர்த்த மனத்தையுடைய மகளிரும், கள்ளும், சூதும், என்னும் மூன்று தொடர்புகளும், திருமகளால் கைவிடப்பட்டவருக்கு நெருங்கிய நட்பு ஆகும். 920

அன்பின் விழையார் பொருள்விழையும் ஆய்தொடியார்
இன்சொல் இழுக்குத் தரும். 911

பயன்தூக்கிப் பண்புரைக்கும் பண்பின் மகளிர்
நயன்தூக்கி நள்ளா விடல். 912

பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டறையில்
ஏதில் பிணந்தழீஇ யற்று. 913

பொருட்பொருளார் புன்னலம் தோயார் அருட்பொருள்
ஆயும் அறிவி னவர். 914

பொதுநலத்தார் புன்னலம் தோயார் மதிநலத்தின்
மாண்ட அறிவி னவர். 915

தந்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப்
புன்னலம் பாரிப்பார் தோள். 916

நிறைநெஞ்சம் இல்லவர் தோய்வர் பிறநெஞ்சிற்
பேணிப் புணர்பவர் தோள். 917

ஆயும் அறிவினர் அல்லார்க்கு அணங்கென்ப
மாய மகளிர் முயக்கு. 918

வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையிலாப்
பூரியர்கள் ஆழும் அளறு. 919

இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்
திருநீக்கப் பட்டார் தொடர்பு. 920

*கள்ளின்மேல் ஆசைகொண்ட அரசர்கள், எக்காலத்திலும் பகைவரால் அஞ்சப்படார்; தம் முன்னோரால் அடைந்திருந்த புகழ் என்னும் ஒளியையும் இழந்து விடுவார்கள். 921*

*அறிவை மயக்கும் கள்ளை அறிவுடையோர் உண்ணாது விடுவாராக; நல்லவரால் எண்ணப்படுதலை வேண்டாதவர் மட்டுமே விரும்பினால் கள்ளை உண்பாராக! 922*

*எது செய்தாலும் உவப்படையும் தாயின் முன்பும் கள்ளுண்டு களித்தல் இன்னாததாகும்; அவ்வாறானால், குற்றம் எதனையுமே பொறாத சான்றோர்களின்முன் என்னவாகும். 923*

*'கள்' என்னும் யாவரும் இகழும் பெருங்குற்றத்தை உடையவரை, 'நாண்' என்று சொல்லப்படுகின்ற உயர்ந்தவள், பார்ப்பதற்கும் அஞ்சி முகத்தைத் திருப்பிக்கொள்வாள். 924*

*தன் கைப்பொருளைக் கொடுத்துத் தன்னுடலை மறக்கும் அறியாமையைக் கொள்ளுதல், அவன் பழவினைப் பயனையே தனக்குக் காரணமாக உடையதாகும். 925*

*உறங்கினவர், அறிவிழந்திருப்பதால் செத்தாரினும் வேறானவர் அல்லர்; அவ்வாறே கள்ளுண்பவரும் எப்போதும் நஞ்சு உண்டவரின் வேறானவர் அல்லர். 926*

*கள்ளை மறைவாக உண்டு, அதன் களிப்பினாலே தம் அறிவை இழந்தவர்கள், உள்ளூரில் வாழ்பவரால், அவர் மறைவை அறிந்து எள்ளி நகையாடப் படுவர். 927*

*கள்ளை உண்டபொழுதே, முன் ஒளித்த குற்றம் மிகுதியாக வெளிப்படுமாதலால், மறைவாகக் கள்ளை உண்டு, 'யான் உண்டு அறியேன்' என்று பொய் கூறுவதைக் கைவிடுக. 928*

*கள்ளுண்டு களித்தவனைக் காட்டி 'இஃது நினக்கும் ஆகாது' என்று கூறித் தெளிவித்தல், நீரினுள் மூழ்கினான் ஒருவனை விளக்கினால் தேடுவதைப்போல் முடியாத செயலாகும். 929*

*கள்ளுண்பவன், தானுண்ணாதபோது, உண்டு களித்த பிறனைக் காண்பான் அல்லவோ! அப்படிக் காணும்போது, தன் நிலையும் இப்படித்தான் என்று நினைக்க மாட்டானோ? 930*

*உட்கப் படாஅர் ஒளியிழப்பர் எஞ்ஞான்றும்
கட்காதல் கொண்டொழுகு வார்.* 921

*உண்ணற்க கள்ளை உணிலுண்க சான்றோரான்
எண்ணப் படவேண்டா தார்.* 922

*ஈன்றாள் முகத்தேயும் இன்னாதால் என்மற்றுச்
சான்றோர் முகத்துக் களி.* 923

*நாணென்னும் நல்லாள் புறங்கொடுக்கும் கள்ளென்னும்
பேணாப் பெருங்குற்றத் தார்க்கு.* 924

*கையறி யாமை உடைத்தே பொருள்கொடுத்து
மெய்யறி யாமை கொளல்.* 925

*துஞ்சினார் செத்தாரின் வேறல்லர் எஞ்ஞான்றும்
நஞ்சுண்பார் கள்ளுண் பவர்.* 926

*உள்ளொற்றி உள்ளூர் நகப்படுவர் எஞ்ஞான்றும்
கள்ளொற்றிக் கண்சாய் பவர்.* 927

*களித்தறியேன் என்பது கைவிடுக நெஞ்சத்து
ஒளித்ததூஉம் ஆங்கே மிகும்.* 928

*களித்தானைக் காரணங் காட்டுதல் கீழ்நீர்க்
குளித்தானைத் தீத்துரீஇ யற்று.* 929

*கள்ளுண்ணாப் போழ்திற் களித்தானைக் காணுங்கால்
உள்ளான்கொல் உண்டதன் சோர்வு.* 930

தான் வெல்பவன் ஆனாலும் சூதாடலை விரும்ப வேண்டாம். அவ் வெற்றியால் வரும் பொருளும், தூண்டில் இரும்பினை இரையென்று நினைத்து மீன் விழுங்கினாற் போன்றதே. 931

பெறுவோம் என்னும் ஆசையால் நூற்றுக்கணக்காக இழந்து வறியவராகும் சூதருக்கும், பொருளால் நன்மைகளை அடைந்து வாழ்கின்ற நெறியும் ஒன்று உளதாகுமோ? 932

உருளும் கவற்றின்மீது கட்டப்படும் பந்தயப் பொருளை இடைவிடாது சொல்லிச் சூதாடுமாயின், ஈட்டிய பொருளும், வருவாயும் எல்லாம் எதிரிகளிடம்போய்ச் சேர்ந்துவிடும். 933

தன்னை விரும்பியவருக்குப் பலவகைத்துன்பங்களையும் செய்து அவரிடமுள்ள புகழையும் கெடுக்கும் சூதைப்போல், வறுமையைத் தரக்கூடியது வேறு எதுவும் இல்லை. 934

முன்காலத்திலே செல்வம் உடை யவராயிருந்தும், தற்போது இல்லாதவரானவர்கள், கவற்றினையும், அஃதாடும் களத் தினையும், கைத்திறனையும், மேற்கொண்டு விடாதவரே. 935

சூதென்னும் முகடியினாலே விழுங்கப்பட்டவர்கள், இம்மையிலே வயிறார உணவைப் பெறுவதுடன், மறுமையில் நரகத் துன்பத்திலும் சிக்கி வருந்துவார்கள். 936

நல்லது செய்வதற்கு என்னும் காலமானது சூதாடு களத்தில் கழியுமானால், அது, தொன்று தொட்டு வந்த அவன் செல்வத்தையும் நல்ல பண்புகளையும் கெடுத்துவிடும். 937

பொருளையும் கெடுத்து, பொய்யை மேற்கொள்ளச் செய்து, அருளையும் கெடுத்து, சூதானது, ஒருவனை இருமையும் துன்பத்திலே ஆழ்த்தி விடும். 938

சூதாடலை வேடிக்கை என்று கருதிச் செய்வானானாலும், ஒளியும் கல்வியும் செல்வமும் ஊணும் உடையும் என்னும் இவை ஐந்துமே, அவனை அடையாமற் போய்விடும். 939

இழக்கும் போதெல்லாம், மேன்மேலும் விருப்பங்கொள்ளுகின்ற சூதனைப்போல், உடம்பும் துன்பத்தால் வருந்தவருந்த மேன்மேலும் அதனை விரும்பும். 940

*வேண்டற்க வென்றிடினும் சூதினை வென்றதூஉந்*
*தூண்டிற்பொன் மீன் விழுங்கி யற்று.* 931

*ஒன்றெய்தி நூறிழக்கும் சூதர்க்கும் உண்டாங்கொல்*
*நன்றெய்தி வாழ்வதோர் ஆறு.* 932

*உருளாயம் ஓவாது கூறிற் பொருளாயம்*
*போஒய்ப் புறமே படும்.* 933

*சிறுமை பலசெய்து சீரழிக்கும் சூதின்*
*வறுமை தருவதொன்று இல்.* 934

*கவறும் கழகமும் கையும் தருக்கி*
*இவறியார் இல்லாகி யார்.* 935

*அகடாரார் அல்லல் உழப்பர் சூதென்னும்*
*முகடியான் மூடப்பட் டார்.* 936

*பழகிய செல்வமும் பண்பும் கெடுக்கும்*
*கழகத்துக் காலை புகின்.* 937

*பொருள்கெடுத்துப் பொய்மேற் கொளீஇ அருள்*
*அல்லல் உழப்பிக்கும் சூது.* [கெடுத்து 938

*உடைசெல்வம் ஊண்ஒளி கல்வியென்று ஐந்தும்*
*அடையாவாம் ஆயங் கொளின்.* 939

*இழத்தொறூஉம் காதலிக்கும் சூதேபோல் துன்பம்*
*உழத்தொறூஉம் காதற்று உயிர்.* 940

ஒருவனுடைய உணவும் செயல்களும் அளவுக்குமேல் கூடினாலும், குறைந்தாலும், மருத்துவ நூலோர் வாதம் முதலாக எண்ணி வகுத்த மூன்றும் நோயைச் செய்யும். 941

முன் உண்டது செரித்ததைத் தெளிவாக அறிந்து, அதன் பின்னரே உண்பானானால், அவனுடைய உடலுக்கு 'மருந்து' என்னும் எதுவுமே வேண்டாம். 942

முன்னுண்டது அற்றபின், உண்பதனையும் அளவாக உண்ண வேண்டும்; அதுவே பெறுவதற்கரியதான இந்த மானிட யாக்கையை நெருங்காலத்திற்குக் காப்பாற்றும் வழி. 943

முன்னுண்டது அற்றதை அறிந்து, மிகவும் பசித்து, உடலிலே மாறுபாட்டைச் செய்யாத உணவுகளைத் தெரிந்தெடுத்து, உண்டு வருதல் வேண்டும். 944

உடலுக்கு மாறுபாட்டைச் செய்யாத உணவையும், தன் மனம் விரும்பியபடி அல்லாமல் நோய் வராத அளவினாலே உண்பானானால், அவனுக்குப் பிணிகளால் துன்பமில்லை. 945

அளவுக்குச் சிறிது குறைவாகவே உண்பவனிடம் இன்பம் நீங்காமல் நிற்பதுபோல, அளவுக்கு மிகுதியாக உண்பவனிடம் நோயும் நிலைத்து நிற்கும். 946

பசித் தீயின் அளவாலே அல்லாமல், காலமும் அளவும் அறியாதபடி பெருமளவு உண்டானானால், அவனிடத்திலே எல்லையில்லாமல் நோய்களும் வளரும். 947

குணங்குறிகளால் நோயைத் துணிந்து, அதன் காரணத்தையும் தெளிந்து, தீர்க்கும் வழியையும் அறிந்து, செய்வகை பிழையாமல் மருத்துவம் செய்யவேண்டும். 948

மருத்துவத்தைக் கற்றறிந்தவன், நோயாளியின் சக்தியையும், நோயின் தன்மையையும், காலத்தின் இயல்பையும், நன்கு கருதிப்பார்த்தே சிகிச்சை செய்ய வேண்டும். 949

பிணிக்கு மருந்தாவது, பிணியுற்றவன், அதனைத் தீர்க்கும் மருத்துவன், அவனுக்கு உதவும் மருந்துகள், அதனை இயற்றுபவன் என்னும் நான்கு பாகுபாடு உடையதாம். 950

*மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்*
*வளிமுதலா எண்ணிய மூன்று.* *941*

*மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது*
*அற்றது போற்றி உணின்.* *942*

*அற்றால் அளவறிந்து உண்க அஃதுடம்பு*
*பெற்றான் நெடிதுய்க்கு மாறு.* *943*

*அற்றது அறிந்து கடைப்பிடித்து மாறல்ல*
*துய்க்க துவரப் பசித்து.* *944*

*மாறுபாடு இல்லாத உண்டி மறுத்துண்ணின்*
*ஊறுபாடு இல்லை உயிர்க்கு.* *945*

*இழிவறிந்து உண்பான்கண் இன்பம்போல் நிற்கும்*
*கழிபே ரிரையான்கண் நோய்.* *946*

*தீயள வன்றித் தெரியான் பெரிதுண்ணின்*
*நோயள வின்றிப் படும்.* *947*

*நோய்நாடி நோய்முதல்நாடி அதுதணிக்கும்*
*வாய்நாடி வாய்ப்பச் செயல்.* *948*

*உற்றான் அளவும் பிணியளவும் காலமும்*
*கற்றான் கருதிச் செயல்.* *949*

*உற்றவன் தீர்ப்பான் மருந்துழைச் செல்வானென்று*
*அப்பால்நாற் கூற்றே மருந்து.* *950*

செம்மையும் நாணமும் ஒன்றுசேர்ந்து பொருந்தி விளங்குதல் என்பது, நல்லகுடியிற் பிறந்தவரிடம் இல்லாமல் பிறரிடத்தில் அவரது இயற்கையாக அமைந்திருப்பதில்லை. 951

நல்ல குடியிலே பிறந்தவர்கள், தம் குடிக்கு உரிய நல்ல ஒழுக்கங்கள், வாய்மை காத்தல், பழிக்கு அஞ்சி நாணுதல் என்னும் மூன்றிலும், ஒருபோதுமே தவறமாட்டார்கள். 952

எக்காலமும் திரிபில்லாத குடியில் பிறந்தவர்களுக்கு வறியவரிடம் முகமலர்ச்சியும், உவப்போடு தருதலும், இன்சொல் உரைத்தலும், இகழாமையும் உரியவாம். 953

பலவாக அடுக்கிய கோடி அளவுக்குப் பொருள் பெற்றாலும், நல்ல குடியிலே பிறந்தவர்கள், தம் குடிப்பெருமைக்குக் குறைவான எதனையும் செய்ய மாட்டார்கள். 954

தொன்றுதொட்டே வருகின்ற பழங்குடியிலே பிறந்தவர்கள், தாம் கொடுத்து உதவும் பொருள் சுருங்கியபோதும், தம் பண்பிலே குறைய மாட்டார்கள். 955

'வசையில்லாமல் வருகின்ற நம் குடி மரபினோடு ஒத்து வாழக் கடவோம்' என்று கருதி வாழ்பவர்கள், வறுமையிலும் தகுதி குறைந்ததைச் செய்ய மாட்டார்கள். 956

உயர் குடியிலே பிறந்தவர்களிடம் தோன்றும் குற்றம், அளவால் சிறிதானாலும், விசும்பிடத்து மதியிலே தோன்றும் மறுவைப்போல உலகத்தாரால் அறியப்படும். 957

குடிச்சிறப்போடு வருகின்றவனிடத்தே அருளில்லாத தன்மை தோன்றிற்றானால், அவனை அக் குடிப்பிறப்பு உடையவன்தானோ என்று கருதி உலகம் ஐயப்படும். 958

நிலத்தின் இயல்பினை அதனிடம் முளைத்த முளை காட்டும்; அவ்வாறே, நல்ல குலத்தில் பிறந்தவர்களது இயல்பினை அவர் வாய்ச்சொற்கள் எடுத்துக் காட்டும். 959

ஒருவன், தனக்கு நன்மைகளை விரும்பினால் பழிக்கு நாணம் உடையவனாதலை விரும்ப வேண்டும்; குலனுடைமையை விரும்பினால், பணிவோடு நடத்தல் வேண்டும். 960

இற்பிறந்தார் கண்ணல்லது இல்லை இயல்பாகச்
செப்பமும் நாணும் ஒருங்கு. 951

ஒழுக்கமும் வாய்மையும் நாணும்இம் மூன்றும்
இழுக்கார் குடிப்பிறந் தார். 952

நகைஈகை இன்சொல் இகழாமை நான்கும்
வகையென்ப வாய்மைக் குடிக்கு. 953

அடுக்கிய கோடி பெறினும் குடிப்பிறந்தார்
குன்றுவ செய்தல் இலர். 954

வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
பண்பில் தலைப்பிரிதல் இன்று. 955

சலம்பற்றிச் சால்பில செய்யார் மாசற்ற
குலம்பற்றி வாழ்துமென் பார். 956

குடிப்பிறந்தார் கண்விளங்கும் குற்றம் விசும்பின்
மதிக்கண் மறுப்போல் உயர்ந்து. 957

நலத்தின்கண் நாரின்மை தோன்றின் அவனைக்
குலத்தின்கண் ஐயப் படும். 958

நிலத்திற் கிடந்தமை கால்காட்டும் காட்டும்
குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல். 959

நலம்வேண்டின் நாணுடைமை வேண்டும்
வேண்டுக யார்க்கும் பணிவு. [குலம்வேண்டின் 960

மிகவும் இன்றியமையாத சிறப்புக்களை உடையவாயினும், உயர்குடியில் பிறந்தவர், தாழ்ச்சி வரும்படியான செயல்களைச் செய்யாமல் விட வேண்டும். 961

தமக்குச் சிறப்பையே தருமானாலும், தம் குடியின் சிறப்புக்குப் பொருந்தாத செயல்களை, புகழும் மானமும் நிலைப்பதை விரும்புகிறவர்கள் செய்யமாட்டார்கள். 962

உயர் குடியிலே பிறந்தவர்களுக்கு, நிறைந்த செல்வம் உண்டானபோது, பணிவுடைமை வேண்டும்; செல்வம் சுருங்கி வறுமை உண்டாகும்போது உயர்வு வேண்டும். 963

நல்ல குடியிலே பிறந்தவர்கள், தம் உயர்வான நிலையை விட்டுத் தாழ்ந்தவிடத்து, தலையைவிட்டு அகன்று விழுந்த மயிரைப்போல இழிவு அடைவார்கள். 964

குடிப்பிறப்பாலே குன்றுபோல உயர்ந்த பெருமையை அடைந்தவர்களும், குன்றியளவு தகுதியற்ற செயல்களைச் செய்தாரானால் தாழ்ச்சி அடைவார்கள். 965

தன்னை இகழ்பவர்களின் முன்பாக மானமிழந்து நிற்கும் நிலைமை புகழையும் தராது, மற்றும் புத்தேளிர் நாட்டிலும் கொண்டுபோய்ச் சேராது; அதனால் என்ன பயன்? 966

தன்னை இகழ்பவரின் பின்னே சென்று பொருள்பெற்று, அதனால் உயிர்வாழ்தலைவிட , இறந்தவன் என்று சொல்லப் படுதலே ஒருவனுக்கு நன்மை ஆகும். 967

தம் குடிக்குரிய பெருந்தன்மை அழியும் நிலையில், தான் இறந்து போகாமல், மானம்விட்டு உடம்பைக் காப்பது பிறவிப்பிணிக்கு ஏற்ற மருந்தாகுமோ? 968

தன் ஒரு மயிர் நீங்கினாலும் உயிர்வாழாத கவரிமானைப் போன்றவர்கள், மானம் இழந்து உயிரைக் காக்கும் நிலைமை வந்தால், அப்போதே உயிரை விட்டுவிடுவார்கள். 969

தமக்கு ஓர் இழிவு வந்தபோது உயிரை விட்டுவிட்ட மானமுள்ளவரது புகழ்வடிவினை, எக்காலத்திலும் உலகத்தார் கைதொழுது போற்றித் துதிப்பார்கள். 970

இன்றி யமையாச் சிறப்பின வாயினும்
குன்ற வருப விடல். 961

சீரினும் சீரல்ல செய்யாரே சீரொடு
பேராண்மை வேண்டு பவர். 962

பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருக்கத்து வேண்டும் உயர்வு 963

தலையின் இழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையின் இழிந்தக் கடை. 964

குன்றின் அனையாரும் குன்றுவர் குன்றுவ
குன்றி யனைய செயின் 965

புகழின்றால் புத்தேணாட்டு உய்யாதால் என்மற்று
இகழ்வார்பின் சென்று நிலை. 966

ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலின் அந்நிலையே
கெட்டான் எனப்படுதல் நன்று 967

மருந்தோமற்று ஊனோம்பும் வாழ்க்கை பெருந்தகைமை
பீடழிய வந்த விடத்து. 968

மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின். 969

இளிவரின் வாழாத மானம் உடையார்
ஒளிதொழுது ஏத்தும் உலகு 970

ஒருவனுக்குப் பெருமை, 'பிறரால் செய்வதற்கரியதைச் செய்வேன்' என்னும் மனவூக்கமே; இழிவாவது, 'அதனைச் செய்யாமலே உயிர் வாழ்வேன்' என்று நினைப்பதாகும். 971

எல்லா மக்களுயிர்க்கும் பிறப்பியல்பு சமமானதே; தொழில் வேறுபாட்டால் பெருமை சிறுமை என்னும் சிறப்பியல்புகள் தாம் ஒருபோதும் ஒத்திருப்பதில்லை. 972

செயற்கரிய செய்யாத சிறியவர் உயர்ந்த ஆசனங்களிலே வீற்றிருந்தாலும் பெரியவர் ஆகார்; அச்செயல்களைச் செய்த பெருமையினர் தரையில் நின்றாலும் சிறியவராகார் 973

கவராத மனத்தையுடைய மகளிர், நிறையிலே வழுவாமல் தம்மைத்தாமே காத்து ஒழுகுதலைப்போல, பெருமையும், தன்னைத்தான் காப்பவனிடமே உளதாகும். 974

பெருமை உடையவர்கள், தாம் வறுமையானபோதும், பிறரால் செய்வதற்கு அருமையான தம் செயல்களை விடாமல் செய்துமுடிக்கும் வலிமை கொண்டவராவர். 975

'இத்தகையவரான பெரியோரை வழிபட்டு அவரியல்பை நாமும் அடைவோம்' என்னும் நல்ல நோக்கம், மற்றைச் சிறியார் மனத்தில் ஒருபோதும் உண்டாகாது. 976

தகுதியான பெரியாரிடம் அமைந்திருக்கும் சிறப்பு, பொருந்தாத சிறியவர்களிடத்தேயும் சேருமானால், தகுதியைவிட்டுத் தருக்கினிடத்தே அவரைச் செல்லச் செய்யும் 977

பெருமை உடையவர் தருக்கியிராமல் பணிவாகவே நடந்து வருவார்கள்; மற்றைச் சிறுமை உடையவரோ எப்போதும் தம்மை வியந்து புனைந்து பேசி வருவார்கள் 978

பெருமை குணம் ஆவது, காரணம் உள்ளபோதும் தருக்கின்றி அமைந்திருத்தல்; சிறுமைக்குணமாவது பெருமை அற்றபோதும் தருக்கி, முடிவில் நின்றுவிடலாகும் 979

பெருமை உடையவர் பிறரது மானத்தைப்பேசி, அவமானத்தை மறைப்பார்கள்; சிறுமை உடையவரோ, பிறரது குணத்தை மறைத்து, குற்றத்தையே கூறுவார்கள். 980

ஒளியொருவற்கு உள்ள வெறுக்கை இளியொருவற்கு
அஃதிறந்து வாழ்தும் எனல். 971

பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான். 972

மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர் கீழிருந்தும்
கீழல்லார் கீழல் லவர். 973

ஒருமை மகளிரே போலப் பெருமையும்
தன்னைத்தான் கொண்டொழுகின் உண்டு 974

பெருமை உடையவர் ஆற்றுவார் ஆற்றின்
அருமை உடைய செயல். 975

சிறியார் உணர்ச்சியுள் இல்லை பெரியாரைப்
பேணிக்கொள் வேம்என்னும் நோக்கு. 976

இறப்பே புரிந்த தொழிற்றாம் சிறப்புந்தான்
சீரல் லவர்கட் படின். 977

பணியுமாம் என்றும் பெருமை சிறுமை
அணியுமாம் தன்னை வியந்து. 978

பெருமை பெருமிதம் இன்மை சிறுமை
பெருமிதம் ஊர்ந்து விடல். 979

அற்றம் மறைக்கும் பெருமை சிறுமைதான்
குற்றமே கூறி விடும். 980

'நமக்கு இது தகுவது' என்று அறிந்து, சான்றாண்மை மேற்கொண்டு ஒழுகுபவர்க்கு, நல்ல குணங்கள் எல்லாம் அவருடைய இயல்பாகவேயிருக்கும் என்பார்கள். 981

சான்றோர்களின் சிறப்பாவது, அவர் குணநலங்களால் வந்த சிறப்பே; அஃது ஒழிந்த பிற நலன்கள் எல்லாம் எந்நலத்திலும் சேர்வதான ஒரு நலனே ஆகாது. 982

அன்பும், நாணமும், யாவரிடத்தும் ஒப்புரவு செய்தலும், கண்ணோட்டமும், வாய்மையும், சால்பென்னும் பாரத்தைத் தாங்கும் ஐந்து தூண்கள் ஆகும். 983

'தவம்' ஓர் உயிரையும் கொல்லாத அறத்தினிடத்தது; சால்பு, பிறரது குற்றத்தை அறிந்தாலும், வெளியே சொல்லித் திரியாத நல்ல குணத்தினிடத்தது. 984

ஒரு செயலை முடிப்பவரது ஆற்றலாவது, துணையாகுபவரைப் பணிமொழியால் தாழ்ந்தும் கூட்டிக்கொள்ளுதல்; சால்புடையார் தம் பகைவரை ஒழிக்கும் படையும் அதுவே. 985

சால்பாகிய பொன்னின் தரத்தை அறிவதற்கான உரைகல், தம்மினும் உயர்ந்தாரிடம் ஏற்கும் தோல்வியை, இழிந்தவரிடமும் ஏற்றுக் கொள்ளுதல் ஆகும். 986

தமக்குத் தீமை செய்தவர்களுக்கும் இனிய செயல்களைச் செய்யாதவரானால், 'சால்பு' என்று சிறப்பாகக் கொள்ளப் படுவதுதான், என்ன பயனை உடையதாகுமோ? 987

'சால்பு உடைமை' என்னும் பண்பு ஒருவனிடம் உறுதி பெற்றிருந்தால், அவனுக்கு வரும் வறுமைத் துன்பங்களும், அவனுக்கு இழிவான நிலைமையைத் தந்துவிடாது. 988

சால்புடைமை என்னும் கடலுக்குக் கரை என்று சொல்லப்படும் பெரியோர்கள், ஏனைய கடல்களும் கரையுள் நில்லாமல் காலம் திரிந்தபோதும், தாம் நிலைதிரிய மாட்டார்கள். 989

பல குணங்களாலும் நிறைந்தவரும் தம் தன்மைகளில் குன்றுவார்களானால், இந்தப் பெரிய பூமி தானும் தன் பாரத்தைத் தாங்காததாய் அழிந்து போகும் 990

கடனென்ப நல்லவை யெல்லாம் கடனறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு. 981

குணநலம் சான்றோர் நலனே பிறநலம்
எந்நலத் துள்ளதூஉம் அன்று. 982

அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையோடு
ஐந்துசால் பூன்றிய தூண். 983

கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு. 984

ஆற்றுவார் ஆற்றல் பணிதல் அதுசான்றோர்
மாற்றாரை மாற்றும் படை. 985

சால்பிற்குக் கட்டளை யாதெனில் தோல்வி
துலையல்லார் கண்ணும் கொளல். 986

இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு. 987

இன்மை ஒருவற்கு இளிவன்று சால்பென்னும்
திண்மையுண் டாகப் பெறின். 988

ஊழி பெயரினும் தாம்பெயரார் சான்றாண்மைக்கு
ஆழி யெனப்படு வார். 989

சான்றவர் சான்றாண்மை குன்றின் இருநிலந்தான்
தாங்காது மன்னோ பொறை. 990

எல்லாரிடத்தும் எளிய செவ்வியராதல் உடையவருக்கு, பண்புடைமை என்னும் நன்னெறியினை அடைந்து சிறப்படைதலும், எளிதென்று சொல்லுவார்கள் 991

பிறர்மேல் அன்புடைமையும், உலகத்தோடு அமைந்த குடியிலே பிறத்தலும், ஆகிய இவ்விரண்டும் ஒத்து வருதல் பண்புடைமையாகும் என்று உலகத்தார் சொல்லுவர். 992

உடம்பால் ஒருவரோடு ஒருவர் ஒத்திருத்தல், ஒருவனுக்கு நல்லவரோடு சமநிலையைத் தந்துவிடாது; செறியத்தகுந்த பண்பால் ஒத்திருத்தலே சமநிலை தரும். 993

நீதியையும் அறத்தையும் விரும்புதலால், பிறருக்கும் தமக்கும் பயன்படுதலை உடையவரது பண்பினை, உலகத்தார் அனைவரும் போற்றிக் கொண்டாடிப் புகழ்வார்கள். 994

தன்னை இகழ்தல் விளையாட்டின்போதும் துன்பமானது; ஆகவே, பாடு அறிவாரிடத்து, பகைமை உள்ளவிடத்திலும் இகழ்தல் இன்றி, இனிய பண்புகளே நிறைந்திடும். 995

பண்புடையாரிடத்தே படுதலால் உலகியல் எப்போதும் உளதானதாய் வந்து கொண்டிருக்கின்றது; அங்ஙனம் இல்லையானால், அது மண்ணினுட்புகுந்து மாய்ந்து விடும். 996

நன்மக்களுக்கு உரிய பண்பு இல்லாதவர்கள், அரத்தைப்போலக் கூர்மை உடையவர் என்றாலும், ஓரறிவேயுள்ள மரத்தைப் போன்றவர்கள் ஆவர். 997

தம்மோடும் நட்பினைச் செய்யாதவராகப் பகைமையையே செய்து நடப்பவரிடத்தும், தாம் பண்புடையவராக உதவி புரியாதிருத்தல், சான்றோருக்குக் குற்றமாகும். 998

பண்பில்லாமையாலே ஒருவரோடு கலந்துபேசி உள்ளம்மகிழ மாட்டாதவர்களுக்கு, மிகவும் பெரிய இந்த உலகமானது, பகற்பொழுதிலும் இருண்டு கிடப்பதாகும். 999

பண்பில்லாதவன் முன்னை நல்வினையாலே பெற்ற பெருஞ் செல்வமானது, நல்ல ஆவின்பால் கலத்தின் குற்றத்தால் திரிதல்போல, ஒருவருக்கும் பயன்படாமல் போகும். 1000

எண்பதத்தால் எய்தல் எளிதென்ப யார்மாட்டும்
பண்புடைமை என்னும் வழக்கு. 991

அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் இவ்விரண்டும்
பண்புடைமை என்னும் வழக்கு. 992

உறுப்பொத்தல் மக்களொப் பன்றால் வெறுத்தக்க
பண்பொத்தல் ஒப்பதாம் ஒப்பு. 993

நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்பு பாராட்டும் உலகு. 994

நகையுள்ளும் இன்னாது இகழ்ச்சி பகையுள்ளும்
பண்புள பாடறிவார் மாட்டு. 995

பண்புடையார்ப் பட்டுண் டுலகம் அதுவின்றேல்
மண்புக்கு மாய்வது மன். 996

அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கட்பண்பு இல்லா தவர். 997

நண்பாற்றா ராகி நயமில செய்வார்க்கும்
பண்பாற்றா ராதல் கடை. 998

நகல்வல்லர் அல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன்று இருள். 999

பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வம் நன்பால்
கலந்தீமை யால்திரிந் தற்று. 1000

வீடு நிறையப் பொருளைச் சேர்த்துவைத்தும், உலோபத்தால் தானேயும் உண்ணாதவன், அப்பொருளின் உரிமையால் ஏதும் செய்யாததனால், செத்தவனுக்கே சமமாவான். 1001

'பொருளினால் எல்லாமே உண்டாகும்' என்று அறிந்து, அதனை எவருக்கும் கொடாமல், அதன்மீது மயக்கத்தை உடையவனுக்குப் பேய்ப் பிறவிதான் ஏற்படும். 1002

மேன்மேலும் பொருளைத் தேடுவதையே விரும்பி, அதன் பயனாக வரும் புகழை விரும்பாத மக்கட் பிறவியானது, இப் பூமிக்கு ஒரு சுமையே அல்லாமல் வேறில்லை. 1003

ஒரு பொருளும் கொடுத்தறியாததால் எவராலும் விரும்பி வரப்படாதவன், தான் இறந்ததன் பின்னர், இவ்வுலகிலே எஞ்சி நிற்பதற்கென்று எதை நினைப்பானோ? 1004

இரப்போருக்குக் கொடுப்பதும், தாம் நுகர்வதுமாகிய செல்வத்தின் பயனை இழந்தவர்களுக்குக் கோடிகோடியான செல்வம் இருந்தாலும், அதனால் யாதும் பயன் இல்லை. 1005

தானும் நுகராமலும், தகுதியானவருக்கு எதையும் கொடுத்து உதவாமலும் இருப்பவன், தான் பெற்ற பெருஞ் செல்வத்துக்கே ஒரு நோய் போன்றவன் ஆவான். 1006

ஏதும் இல்லாதவருக்கு எதுவும் கொடுத்து உதவாதவனது செல்வம், மிகவும் அழகிய பெண் திருமணப் பயனில்லாமல், தனியாகவே கிழவியானதைப் போன்றதாம். 1007

வறியவராலே விரும்பி வரப்படாத உலோபியின் செல்வம், ஊரின் இடையே நிற்கின்ற ஓர் நச்சுமரமானது, நிறையப் பழம் பழுத்து விளங்குவதைப் போன்றதாகும். 1008

உறவினரிடம் அன்புசெய்தலைவிட்டு, நுகராமல் தன்னையும் வருத்திக்கொண்டு, அறத்தையும் பாராது, ஒருவன் தேடிய பெரும்பொருளைப் பிறர்தாம் கொண்டுபோவார்கள். 1009

புகழ்பெற்ற செல்வம் உடையவரது சிறிது காலத்திய வறுமை, மேகம் சிறிதுகாலம் வறுமைமிகுந்தாற் போன்ற இடைக்காலத் தன்மையை உடையதே. 1010

*வைத்தான்வாய் சான்ற பெரும்பொருள் அஃதுண்ணான்*
*செத்தான் செயக்கிடந்த தில்.* 1001

*பொருளானாம் எல்லாமென்று ஈயாது இவறும்*
*மருளானாம் மாணாப் பிறப்பு.* 1002

*ஈட்டம் இவறி இசைவேண்டா ஆடவர்*
*தோற்றம் நிலக்குப் பொறை.* 1003

*எச்சமென் றென்னெண்ணுங் கொல்லோ ஒருவரால்*
*நச்சப் படாஅ தவன்.* 1004

*கொடுப்பதூஉந் துய்ப்பதூஉம் இல்லார்க்கு அடுக்கிய*
*கோடியுண் டாயினும் இல்.* 1005

*ஏதம் பெருஞ்செல்வம் தான் துவ்வான் தக்கார்க்கொன்று*
*ஈதல் இயல்பிலா தான்.* 1006

*அற்றார்க்கொன்று ஆற்றாதான் செல்வம் மிகநலம்*
*பெற்றாள் தமியள்மூத் தற்று.* 1007

*நச்சப் படாதவன் செல்வம் நடுவூருள்*
*நச்சு மரம்பழுத் தற்று.* 1008

*அன்பொரீஇத் தற்செற்று அறநோக்காது ஈட்டிய*
*ஒண்பொருள் கொள்வார் பிறர்.* 1009

*சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி*
*வறங்கூர்ந் தனையது உடைத்து.* 1010

இழிந்த செயல் காரணமாக நாணுதலே நன்மக்களது நாணம்; பிற மன மொழி மெய் ஒடுக்கங்களால் வரும் நாணம், குலமகளிரது நாணம் ஆகும். 1011

ஊனும் உடையும் அவையொழிந்த பிறவும் உலகத்து மக்கள் உயிர்க்கு எல்லாம் பொதுவானவை, நன்மக்களுக்குச் சிறப்பாக அமைவது 'நாணம்' ஆகும். 1012

உயிர்கள் எல்லாம் தம் இருப்பிடமான உடம்பை ஒருபோதும் விடமாட்டா; அவ்வாறே 'நாணம்' என்னும் குணத்தையும் 'சால்பு' ஒருபோதும் விட்டுவிடாது. 1013

நாணம் உடைமை சான்றோர்களுக்கு ஓர் ஆபரணம் ஆகும்; அந்த நாணம் என்னும் ஆபரணம் இல்லையானால், அவரது பெருமித நடை கண்டவர்க்கு நோயாகிவிடும். 1014

பிறரது பழியையும் தம்முடைய பழியையும் சமமாக மதித்து நாணுபவரை, உலகத்தார், 'நாணத்திற்கே உறைவிடம் இவர்தாம்' என்று சிறப்பித்துச் சொல்வார்கள். 1015

உயர்ந்தோர், தமக்கு வேலியாக நாணத்தைக் கொள்வார்களே அல்லாமல், அகன்ற இவ்வுலகத்தைத் தமக்கு வேலியாகக் கொள்வதை விரும்ப மாட்டார்கள். 1016

நாணத்தையும் உயிரையும் ஒருங்கே காப்பாற்ற முடியாதபோது, சான்றோர்கள் உயிரை விட்டுவிடுவார்கள்; உயிரைக் காப்பதற்கு நாணத்தை விட மாட்டார்கள். 1017

கேட்டவரும் கண்டவரும் நாணமின்றிப் பழிக்கத் தான் நாணாதவன் ஆனால், அந் நாணானது, அவனைவிட்டு அறம் நீங்கிபோகத் தகுந்த குற்றத்தை உண்டாக்கிவிடும். 1018

ஒருவனது ஒழுக்கத் தவறினால், அவன் குடிப்பெருமை ஒன்றே கெட்டுவிடும்; ஒருவனிடம் நாணமில்லாத தன்மை நின்றபோது, அது அவன் நலத்தை எல்லாமே சுடும். 1019

தம் மனத்திலே நாணமில்லாத மக்களின் இயக்கம், மரப்பாவை யந்திரக் கயிற்றாலாகிய தன் இயக்கத்தால் உயிருள்ளதுபோல் மயக்குவது போன்றதாகும். 1020

கருமத்தால் நாணுதல் நாணுத் திருநுதல்
நல்லவர் நாணுப் பிற. 1011

ஊணுடை எச்சம் உயிர்க்கெல்லாம் வேறல்ல
நாணுடைமை மாந்தர் சிறப்பு. 1012

ஊனைக் குறித்த உயிரெல்லாம் நாணென்னும்
நன்மை குறித்தது சால்பு. 1013

அணியன்றோ நாணுடைமை சான்றோர்க்கு அஃதின்றேல்
பிணியன்றோ பீடு நடை. 1014

பிறர்பழியும் தம்பழியும் நாணுவார் நாணுக்கு
உறைபதி யென்னும் உலகு. 1015

நாண்வேலி கொள்ளாது மன்னோ வியன்ஞாலம்
பேணலர் மேலா யவர். 1016

நாணால் உயிரைத் துறப்பர் உயிர்ப்பொருட்டால்
நாண்துறவார் நாணாள் பவர். 1017

பிறர்நாணத் தக்கது தான்நாணான் ஆயின்
அறம்நாணத் தக்கது உடைத்து. 1018

குலஞ்சுடும் கொள்கை பிழைப்பின் நலஞ்சுடும்
நாணின்மை நின்றக் கடை. 1019

நாணகத்து இல்லார் இயக்கம் மரப்பாவை
நாணால் உயிர்மருட்டி யற்று. 1020

'என் குடியை உயரச் செய்வதற்கான செயல்களைச் செய்வதில் ஒருபோதும் கை ஓயமாட்டேன்' என்னும் பெருமையைப் போல, ஒருவனுக்கு சிறந்த பெருமை தருவது வேறில்லை. 1021

'முயற்சியும், நிறைந்த அறிவும்' என்று சொல்லப்பட்ட இரண்டினையும் உடைய, இடைவிடாத கருமச்செயலால், ஒருவனது குடிப்பெருமை தானே உயர்வு அடையும். 1022

'என் குடியைப் புகழால் உயரச் செய்வேன்' என்று அதற்கேற்ற செயல்களிலே ஈடுபடும் ஒருவனுக்கு, தெய்வமும் மடியை உதறிக்கொண்டு முன்வந்து உதவி நிற்கும். 1023

தம் குடியை உயர்த்துவதற்கு இடைவிடாமல் முயல்கிறவர்களுக்கு, அதன் வழிபற்றி அவர் ஆராயும் முன்பே, தெய்வ உதவியால், அது தானாகவே முடிந்துவிடும். 1024

குற்றமாகிய செயல்களைச் செய்யாமல், தன்குடியை உயரச் செய்து நடக்கிறவனின் சுற்றமாக விரும்பி உலகத்தார் எல்லாருமே சென்று அவனைச் சூழ்வார்கள். 1025

'ஒருவனுடைய நல்லாண்மை' என்பது, தான் பிறந்த குடியினை ஆளும் தன்மையை, அவன், தன்னிடம் உளதாக ஆக்கிக் கொள்ளுதலே ஆகும். 1026

அமரகத்தில் வன்கண்மை உடையவரே போரைத் தாங்குவார்; அதுபோலக் குடியிற் பிறந்தவர் பலரானாலும், வல்லமை உடையவரே அதனைத் தாங்கிக் காப்பவர். 1027

தம் குடியினை உயரச் செய்பவர் அதனையே கருதவேண்டும்; மற்றுக் காலத்தைப் பார்த்து, மானத்தையும் கருதினால், குடி கெடும்; ஆகவே அவருக்குக் காலநியதி இல்லை. 1028

தன் குடி குற்றம் அடையாமல் காக்க முயல்பவனின் உடம்பு, அம்முயற்சித் துன்பத்திற்கே ஓர் கொள்கலமோ? அஃது ஒழிந்து, அது இன்பத்திற்கும் கொள்கலம் ஆகாதோ? 1029

துன்பம் வரும்போது, அதனைத் தாங்கிக் காக்கவல்ல நல்ல ஆண்மகன் பிறவாத குடியானது, துன்பமாகிய நவியம்புகுந்ததனால் வீழ்கின்ற மரம்போலத் தானும் வீழ்ந்து படும். 1030

கருமம் செயவொருவன் கைதூவேன் என்னும்
பெருமையிற் பீடுடைய தில். 1021

ஆள்வினையும் ஆன்ற அறிவும் எனஇரண்டின்
நீள்வினையால் நீளும் குடி. 1022

குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும். 1023

சூழாமல் தானே முடிவெய்தும் தம்குடியைத்
தாழாது உஞற்று பவர்க்கு. 1024

குற்றம் இலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்றும் உலகு. 1025

நல்லாண்மை என்பது ஒருவற்குத் தான்பிறந்த
இல்லாண்மை ஆக்கிக் கொளல். 1026

அமரகத்து வன்கண்ணர் போலத் தமரகத்தும்
ஆற்றுவார் மேற்றே பொறை. 1027

குடிசெய்வார்க்கு இல்லை பருவம் மடிசெய்து
மானம் கருதக் கெடும். 1028

இடும்பைக்கே கொள்கலம் கொல்லோ குடும்பத்தைக்
குற்றம் மறைப்பான் உடம்பு. 1029

இடுக்கண்கால் கொன்றிட வீழும் அடுத்தூன்றும்
நல்லாள் இலாத குடி. 1030

உழவின் வருத்தத்தைக் கண்டு, பிற தொழில்களைச் செய்து திரிந்தாலும், முடிவில் ஏருடையவரையே உலகம் உணவுக்கு எதிர்பார்த்தலால், உழவே மிகவும் சிறந்தது. 1031

உழவைவிட்டுப் பிற தொழில்களைச் செய்வாருக்கும் உணவுப் பொருள்களைத் தந்து தாங்குவதனால், உழுதொழில் செய்வாரே உலகத்தாருக்கு அச்சாணி ஆவார். 1032

யாவரும் உண்ணுவதற்கு உணவைத் தந்து, தாமும் உண்டு வாழ்பவரே உரிமை வாழ்வினர்; மற்றையவர் பிறரைத் தொழுது உண்டு, அவர்பின் செல்கின்றவரே யாவர். 1033

உழுதலால் நெல்லுடையவரான கருணையாளர், பலவேந்தர் குடை நிழலது ஆகிய உலகம் முழுவதையும், தம் அரசனின் குடைக்கீழ் வந்துசேரக் காணும் சக்தியுடையவர் ஆவர். 1034

உழவான முயற்சியைச் செய்து உண்பதனையே இயல்பாக உடையவர், பிறரைத் தாம் இரவார்; தம்பால் வந்து இரப்பவர்க்கும் அவர் வேண்டியதைத் தருவார்கள். 1035

உழவர்களின் கை உழாது மடங்கிவிடுமானால், 'யாவரும் விரும்பும் உணவையும் கைவிட்டோம்' என்று துறந்தவர்க்கும், அவ்வறத்தில் நிலைத்து நிற்க முடியாது. 1036

ஒரு பலப் புழுதியானது காற்பலமாக ஆகும்படி உழுது காயவிடுவானானால், அதனிடம் செய்த பயிர், ஒரு பிடி எருவு இடுதலையும் வேண்டாமலே நன்றாக விளையும். 1037

பலகால் உழுதலினும், எருப்பெய்து வளப்படுத்துதல் சிறந்தது; இவ்விரண்டும் செய்து களையும் எடுத்தபின், பயிரைக் காத்தல், நீர் பாய்ச்சுவதிலும் நல்லதாகும். 1038

நிலத்துக்கு உரியவன் நாள்தோறும் சென்று பார்த்து, வேண்டியவை செய்யாது சோம்பினால், அந்த நிலமும், அவன் மனைவியைப் போல, அவனோடு பிணங்கி விடும். 1039

'யாம் வறியோம்' என்று சொல்லிச் சோம்பியிருப்பவரைக் கண்டால் நிலமகள் என்று உயர்த்திப் பேசப்படும் நல்லாள் தன்னுள்ளே சிரித்துக் கொள்வாள். 1040

சுழன்றும்ஏர்ப் பின்னது உலகம் அதனால்
உழந்தும் உழவே தலை. 1031

உழுவார் உலகத்தார்க்கு ஆணி அஃதாற்றாது
எழுவாரை எல்லாம் பொறுத்து. 1032

உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம்
தொழுதுண்டு பின்செல் பவர். 1033

பலகுடை நீழலும் தங்குடைக்கீழ்க் காண்பர்
அலகுடை நீழ லவர். 1034

இரவார் இரப்பார்க்கொன் றீவர் கரவாது
கைசெய்தூண் மாலை யவர். 1035

உழவினார் கைம்மடங்கின் இல்லை விழைவதூஉம்
விட்டேமென் பார்க்கும் நிலை. 1036

தொடிப்புழுதி கஃசா உணக்கின் பிடித்தெருவும்
வேண்டாது சாலப் படும். 1037

ஏரினும் நன்றால் எருவிடுதல் கட்டபின்
நீரினும் நன்றதன் காப்பு. 1038

செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலந்து
இல்லாளின் ஊடி விடும். 1039

இலமென் றசைஇ இருப்பாரைக் காணின்
நிலமென்னும் நல்லாள் நகும். 1040

ஒருவனுக்கு வறுமையைப் போலத் துன்பம் தருவது யாதென்றால், அந்த வறுமையைப்போலத் துன்பந்தருவது, அந்த வறுமையேயன்றி, யாதுமில்லை. 1041

வறுமை என்னும் ஒரு பாவி ஒருவனிடம் வந்துவிட்டால், அவனுக்கு இம்மையிலுள்ள உலகவின்பமும், மறுமையின் சுவர்க்க இன்பமும் இல்லாமல் போய்விடும். 1042

வறுமை எனப்படும் கேடானது, ஒருவனுடைய பழைமையான குடும்பச் செல்வத்தையும், அதன்மேல் அக்குடும்பத்திற்கு உண்டான பெரும்புகழையும் கெடுத்துவிடும். 1043

இழிவான சொல் பிறவாத குடும்பத்தாரிடமும், அது பிறப்பதற்கு ஏதுவான சோர்வு என்னும் நிலைமையானது வறுமையை உண்டாக்கிவிடும். 1044

வறுமை எனப்படும் துன்பம் ஒன்றின் உள்ளாகவே உலகத்தாரால் சொல்லப்படும் பலவகைப்பட்ட துன்பங்கள் எல்லாம் சென்று அடங்கிவிடும். 1045

நல்லவான பொருள்களைத் தெளிவாக அறிந்து சொன்னார் ஆனாலும், வறுமைப்பட்டவர் சொல்லும் சொற்கள், பொருள் பயவாதவாய்ச் சோர்வுபட்டுவிடும். 1046

அறத்தோடு பொருந்தாத வறுமையை உடையவன் தன்னைப் பெற்ற தாயாராலுங்கூட, ஓர் அயலானைப்போலக் கருதிப் பார்க்கப் படுவான். 1047

நேற்றுக் கொன்றதுபோலத் துன்பஞ்செய்த வறுமையானது, இன்றும் என்னிடத்தே வந்துவிடுமோ? வந்தால், இனி யான் யாது செய்வேனோ? 1048

மந்திரமும் மருந்தும் முதலியவற்றின் உதவியாலே நெருப்பிற் கிடந்தும் உறங்கலாம்; ஆனால் வறுமை வந்தபோது, எதன் உதவியாலும் உறக்கம் வருவதில்லை. 1049

பொருளில்லாத வறுமையாளர் செய்யக்கூடியது முற்றத் துறத்தலே; அதனைச் செய்யாதிருப்பது, பிறர்வீட்டு உப்புக்கும் காடிக்கும் தாம் எமனாவதே யாகும். 1050

இன்மையின் இன்னாதது யாதெனின் இன்மையின்
இன்மையே இன்னா தது. 1041

இன்மை எனஒரு பாவி மறுமையும்
இம்மையும் இன்றி வரும். 1042

தொல்வரவும் தோலும் கெடுக்கும் தொகையாக
நல்குரவு என்னும் நசை. 1043

இற்பிறந்தார் கண்ணேயும் இன்மை இளிவந்த
சொற்பிறக்கும் சோர்வு தரும். 1044

நல்குரவு என்னும் இடும்பையுள் பல்குரைத்
துன்பங்கள் சென்று படும். 1045

நற்பொருள் நன்குணர்ந்து சொல்லினும் நன்கூர்ந்தார்
சொற்பொருள் சோர்வு படும். 1046

அறஞ்சாரா நல்குரவு ஈன்றதா யானும்
பிறன்போல நோக்கப் படும். 1047

இன்றும் வருவது கொல்லோ நெருநலும்
கொன்றது போலும் நிரப்பு. 1048

நெருப்பினுள் துஞ்சலும் ஆகும் நிரப்பினுள்
யாதொன்றும் கண்பாடு அரிது. 1049

துப்புரவு இல்லார் துவரத் துறவாமை
உப்பிற்கும் காடிக்கும் கூற்று. 1050

தகுதியுள்ளவரைக் கண்டால், அவர்பால் இரந்து கேட்கலாம்; அவர் தம்மிடம் ஏதும் இல்லையென்று ஒளிப்பாரானால், அவருக்குப் பழியேயன்றிக் கேட்பவருக்குப் பழியில்லை. 1051

ஈவாரது நல்லுணர்வால் இரந்த பொருள்கள் துன்பமின்றி வருமானால், அவ்வாறு இரந்து நின்றதும், ஒருவனுக்கு உலகில் இன்பம் தருவதாகும். 1052

ஒளிப்பதறியாத நெஞ்சமுடைய மானம் அறிபவரின் முன்னேபோய் நின்று, அவரிடம் ஒருபொருளை இரந்தாலும், அப்படி இரப்பதும் வறியவர்க்கு ஓர் அழகு ஆகும். 1053

தமக்கு உள்ளதைக் கனவிலும் ஒளிப்பதற்கு அறியாதவரிடம் சென்று, ஒரு பொருளை வறியவர் இரந்து கேட்பதும், ஈதலைப் போலவே சிறந்ததாகும். 1054

முன்னால் நின்றபோதே அருளோடு அவருக்கு உதவுகிறவரும் இருப்பதனாலேதான், உயிரைக் காக்கும் பொருட்டாக இரக்கும் சிலரும் உலகில் உள்ளனர். 1055

உள்ளதை ஒளிக்கும் மனநோய் இல்லாதவரைக் கண்டால், மானம் விடாமல் இரப்பவருக்கு, அவர் வறுமைத் துன்பங்கள் எல்லாம் ஒருங்கே அவரைவிட்டுப் போய்விடும். 1056

தம்மை அவமதித்து இழிவாய்ப் பேசாமல் பொருள் தருவாரைக் கண்டால், இரப்பவரது நெஞ்சமும் மகிழ்ந்து. உள்ளுக்கு உள்ளாகவே உவப்பது உண்டு. 1057

வறுமையால் இரப்பவர் இல்லையானால், குளிர்ந்த இடத்தையுடைய பெரிய உலகினரின் போக்கும்வரவும், மரப்பாவை இயந்திரக் கயிற்றால் சென்றுவந்தாற் போன்றதாகும். 1058

தம்மிடம் வந்து ஒரு பொருளை இரந்து கொள்பவர் எவரும் இல்லாதபோது, கொடுப்பதற்கு விரும்புகிறவர்களுக்கும், இவ்வுலகத்திலே என்ன புகழ்தான் உண்டாகும்! 1059

இரப்பவன் ஒருபோதும் தனக்குத் தராதவனை வெகுளாமல் இருக்கவேண்டும்; பொருள் வேண்டிய பொழுது வந்து உதவாது என்பதற்கு அவன் வறுமையே சான்றாகும். 1060

இரக்க இரத்தக்கார்க் காணின் கரப்பின்
அவர்பழி தம்பழி யன்று. 1051

இன்பம் ஒருவற்கு இரத்தல் இரந்தவை
துன்பம் உறாஅ வரின். 1052

கரப்பிலா நெஞ்சின் கடனறிவார் முன்நின்று
இரப்புமோ ரேஎர் உடைத்து. 1053

இரத்தலும் ஈதலே போலும் கரத்தல்
கனவிலும் தேற்றாதார் மாட்டு. 1054

கரப்பிலார் வையகத்து உண்மையாற் கண்ணின்று
இரப்பவர் மேற்கொள் வது. 1055

கரப்பிடும்பை இல்லாரைக் காணின் நிரப்பிடும்பை
எல்லாம் ஒருங்கு கெடும். 1056

இகழ்ந்தெள்ளாது ஈவாரைக் காணின் மகிழ்ந்துள்ளம்
உள்ளுள் உவப்பது உடைத்து. 1057

இரப்பாரை இல்லாயின் ஈர்ங்கண்மா ஞாலம்
மரப்பாவை சென்றுவந் தற்று. 1058

ஈவார்கண் என்னுண்டாம் தோற்றம் இரந்துகோள்
மேவார் இலாஅக் கடை. 1059

இரப்பான் வெகுளாமை வேண்டும் நிரப்பிடும்பை
தானேயும் சாலும் கரி. 1060

தம்மிடம் உள்ள பொருளை ஒளிக்காமல் உவப்போடு கொடுத்துதவும் கண்போன்றவரிடமும் சென்று இரந்துநிற்காமல், வறுமையைத் தாங்குதல் கோடி நன்மை தருவதாகும். 1061

முயற்சிசெய்து உயிர்வாழ்தல் என்றில்லாமல், இரந்தும் ஒருவன் உயிர்வாழ்தலை, இவ்வுலகைப் படைத்தவன் விதித்திருப்பானானால், அவனும் எங்கும் அலைந்து கெடுவானாக! 1062

வறுமைத் துன்பத்தை முயற்சிகளால் நீக்கக்கடவோம் என்று நினையாமல், இரந்து நீக்க நினைக்கும் வன்மையைப்போல, வன்மையுள்ளது பிறிது யாதும் இல்லை. 1063

நுகர்பொருள் இல்லாமல் வறுமைப்பட்ட போதும், பிறர்பால் சென்று இரத்தலுக்கு உடன்படாத மனவமைதி, உலகமெல்லாம் சேர்ந்தாலும் ஈடாகாத பெருமையது. 1064

நெறியோடுகூடிய முயற்சியாலே கொண்டுவந்தது, தெளிந்த நீரைப்போலத் தோன்றும் புல்லரிசிக் கஞ்சியே யானாலும், அதனை உண்பதைவிட இனியது வேறு யாதும் இல்லை. 1065

வேட்கை மிகுதியாலே சாகும் பசுவுக்கு இரக்கங்கொண்டு 'நீர் தருவீராக' என்று இரந்தாலும், அதனைப்போல நாவிற்கு இழிவான ஒரு செயல் யாதும் இல்லை. 1066

'உமக்கு இரக்க வேண்டுமானால், உள்ளதை ஒளிக்காமல் மறைப்பவரிடம் சென்று இரக்காதீர்கள்' என்று இரப்பவரை எல்லாம் யான் இரந்து வேண்டுகின்றேன். 1067

வறுமைக் கடலைக் கடப்பதற்குக் கொண்ட இரத்தல் என்னும் தோணியானது செல்லும்போது, இடையிலே கரத்தல் என்னும் பார் தாக்கினால் உடைந்து போய்விடும். 1068

இரந்து நிற்பதன் கொடுமையை நினைத்தால், எம் உள்ளம் கரைந்து உருகும்; அவர்க்கு இல்லை என்றவர் தன்மையை நினைத்தால், அந்த உருக்கமும் காய்ந்துபோகும். 1069

ஒளிப்பவர் 'இல்லை' என்று சொன்னதுமே, இரப்பவர் உயிர் போய்விடுகின்றது; ஒளிப்பவர் உயிர் பின்னும் நிற்றலால் அது எங்கே புகுந்து ஒளிந்திருக்குமோ! 1070

கரவாது உவந்தீயுங் கண்ணன்னார் கண்ணும்
இரவாமை கோடி யுறும். 1061

இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக உலகியற்றி யான். 1062

இன்மை இடும்பை இரந்துதீர் வாமென்னும்
வன்மையின் வன்பாட் டில். 1063

இடமெல்லாம் கொள்ளாத் தகைத்தே இடமில்லாக்
காலும் இரவொல்லாச் சால்பு. 1064

தெண்ணீர் அடுபுற்கை யாயினுந் தாள்தந்தது
உண்ணலின் ஊங்கினிய தில். 1065

ஆவிற்கு நீரென் றிரப்பினும் நாவிற்கு
இரவின் இளிவந்த தில். 1066

இரப்பான் இரப்பாரை எல்லாம் இரப்பின்
கரப்பார் இரவன்மின் என்று. 1067

இரவென்னும் ஏமாப்பில் தோணி கரவென்னும்
பார்தாக்கப் பக்கு விடும். 1068

இரவுள்ள உள்ளம் உருகும் கரவுள்ள
உள்ளதூஉம் இன்றிக் கெடும். 1069

கரப்பவர்க்கு யாங்கொளிக்குங் கொல்லோ இரப்பவர்
சொல்லாடப் போஒம் உயிர். 1070

வடிவமைப்பால் கீழ்மக்களும் மக்களைப்போன்றிருப்பார்கள்; அவரைப்போல ஒப்புமையான ஒன்றை வேறிரண்டு சாதிக் கண் யாம் எங்கும் கண்டதில்லை. 1071

தமக்கு உறுதியானவை இவை என்று அறிவாரைவிட, அவை அறியாத கீழ்மக்கள் நன்மையுடையவர்; அவர்போல இவர் தம் நெஞ்சத்தில் கவலையில்லாதவர் ஆதலால். 1072

தேவரைப்போலவே, தம்மை நியமிப்பவர் இல்லாமல், தாம் விரும்புவனசெய்து ஒழுகுதலால், கயவரும் தேவரும் ஒரே தன்மையுடையவர் ஆவர். 1073

கீழ்மக்கள் தம்மிலும் கீழாகநடப்பவரைக் கண்டால், அந்தக் கீழ்மையில் தாம் அவருக்கு மேம்பட்டிருப்பதைக் காட்டித் தமக்குள் இறுமாப்பு அடைவர். 1074

'அரசால் துன்பம் வரும்' என்னும் அச்சமும் கீழ்மக்களது ஆசாரத்துக்குக் காரணம்; அஃது ஒழிந்தால், விரும்பப்படும் பொருள் வரும்போது, சிறிது உண்டாகும். 1075

கேட்ட மறைவான செய்திகளைப் பிறரிடம் தாங்கிக்கொண்டு போய்ச் சொல்வதனால், கீழ்மக்கள் செய்தியறிவிக்க அறையப்படும் பறை போன்றவர்கள் ஆவர். 1076

தம் கன்னத்தை நெரிப்பதாக வளைந்த கையினர் அல்லாதவருக்கு, கீழ்மக்கள், தாமுண்டு கழுவிய ஈரக்கையைக் கூட உதறமாட்டார்கள். 1077

குறையைச் சொன்னதும் இரக்கங்கொண்டு உதவுவதற்கு மேலோர் பயன்படுவார்கள்: கரும்பைப்போல் வலியவர் நெருக்கிப் பிழிந்தால் கயவர் அவருக்குப் பயன்படுவர். 1078

பிறர் நன்றாக உடுப்பதையும் சுவையோடு உண்பதையும் கீழ்மகன் கண்டால், அவற்றைப் பொறாமல், அவர்மேல் வடு உண்டாக்கவும் முயல்வான். 1079

ஒரு துன்பம் வந்துவிட்டால், அதுவே காரணமாகத் தம்மை விரைவில் பிறருக்கு விற்பதற்குக் கயவர் உரியவராவர்; அதுவன்றி வேறு எத்தொழிலுக்கும் உரியராகார். 1080

மக்களே போல்வர் கயவர் அவரன்ன
ஒப்பாரி யாங்கண்ட தில். 1071

நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவலம் இலர். 1072

தேவர் அனையர் கயவர் அவருந்தாம்
மேவன செய்தொழுக லான் 1073

அகப்பட்டி ஆவாரைக் காணின் அவரின்
மிகப்பட்டுச் செம்மாக்குங் கீழ். 1074

அச்சமே கீழ்களது ஆசாரம் எச்சம்
அவாவுண்டேல் உண்டாம் சிறிது. 1075

அறைபறை அன்னர் கயவர்தாம் கேட்ட
மறைபிறர்க்கு உய்த்துரைக்க லான். 1076

ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்குங்
கூன்கையர் அல்லா தவர்க்கு. 1077

சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோற்
கொல்லப் பயன்படும் கீழ். 1078

உடுப்பதூஉம் உண்பதூஉம் காணின் பிறர்மேல்
வடுக்காண வற்றாகும் கீழ். 1079

எற்றிற் குரியர் கயவரொன்று உற்றக்கால்
விற்றற்கு உரியர் விரைந்து. 1080

# காமத்துப்பால்

*1081 முதல் 1150:* களவியல்

*1151 முதல் 1330:* கற்பியல்

இவ் வடிவம் தேவமகளோ? சிறந்த அழகு மயிலோ? அல்லது, கனவிய குழையையுடைய ஒரு மானுடப் பெண்தானோ! புரியாமல் என் நெஞ்சம் மயங்குகின்றதே! 1081

என்னை அவள் நோக்கினாள். என் பார்வைக்கு எதிராகவும் பார்த்தாள்! அந்தப் பார்வை, தானே தாக்கி வருத்தும் அணங்கு, தானையையும் கொண்டதுபோல் உள்ளதே. 1082

'கூற்று' என்பதனை இதன்முன்னர் அறியேன்; இப்போது அறிந்துவிட்டேன்; அது, அழகிய பெண்ணின் வடிவோடு பெரியவாய் அமர்த்த கண்களையும் உடையது. 1083

தன்னைக் கண்டவரின் உயிரை உண்ணுகின்ற தோற்றத்தோடு, பெண்களில் சிறந்தவளான இந்தப் பேதைக்குக் கண்களும் அமர்த்தனவாக அமைந்து உள்ளனவே! 1084

இளமைப் பருவத்தவளான இவளது பார்வை, வருத்தும் கூற்றமோ! பிறழும் கண்ணோ! மருளும் பிணையோ! இம்மூன்று தன்மையையும் தன்பால் கொண்டிருக்கிறதே! 1085

விளைவான இவள் புருவங்கள் செம்மையாயிருந்து விலக்கினவானால், அவற்றைக் கடந்து, இவள் கண்களும் நாம் நடுங்கும் துயரைச் செய்ய மாட்டாவே! 1086

இந்த மாதின், சாயாத முலைகளின் மேலாக இடப்பட்டுள்ள துகில், அவையும் என்னைக் கொல்லாதபடி காத்தலால், மதகளிற்றின் முகபடாத்தைப் போன்றதாகும். 1087

போர்க்களத்துக்கு வராதவரும், பிறருக்கு நேர்ந்ததைக் கேட்டு அஞ்சுவதற்கு ஏதுவான என் வலிமையெல்லாம், இவளின் ஒளிவீசும் நெற்றிக்கே உடைந்துபோயிற்றே! 1088

மானின் பிணைபோன்ற மடநோக்கினையும், உள்ளத்தே நாணத்தையும் உடையவளான இவளுக்கு, இவையே சிறந்த அழகாக, வேறும் அணிபூட்டி அழகுபடுத்தல் ஏனோ? 1089

தன்னை உண்டவருக்கு மகிழ்ச்சியைச் செய்வதல்லாமல், அடப்பட்ட நறவானது, காமத்தைப்போலக் கண்டவருக்கு மகிழ்வைச் செய்யும் ஆற்றலுடையது இல்லையே! 1090

அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொல் மாலுமென் நெஞ்சு. 1081

நோக்கினாள் நோக்கெதிர் நோக்குதல் தாக்கணங்கு
தானைக்கொண் டன்னது உடைத்து. 1082

பண்டறியேன் கூற்றென் பதனை இனிஅறிந்தேன்
பெண்டகையால் பேரமர்க் கட்டு. 1083

கண்டார் உயிருண்ணும் தோற்றத்தால் பெண்டகைப்
பேதைக்கு அமர்த்தன கண். 1084

கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல்
நோக்கம்இம் மூன்றும் உடைத்து. 1085

கொடும்புருவம் கோடா மறைப்பின் நடுங்கஞர்
செய்யல மன்இவள் கண். 1086

கடாஅக் களிற்றின்மேல் கட்படாம் மாதர்
படாஅ முலைமேல் துகில். 1087

ஒண்ணுதற் கோஒ உடைந்ததே ஞாட்பினுள்
நண்ணாரும் உட்குமென் பீடு. 1088

பிணையேர் மடநோக்கும் நாணும் உடையாட்கு
அணியெவனோ ஏதில தந்து. 1089

உண்டார்கண் அல்லது அடுநறாக் காமம்போல்
கண்டார் மகிழ்செய்தல் இன்று. 1090

*இவள் மையுண்ணும் கண்களில் இருவகைப் பார்வைகள் உள்ளன; ஒன்று என்னிடத்து நோய்செய்யும் பார்வை; மற்றொன்று அந் நோய்க்கு மருந்தாகும் பார்வை.* 1091

*என்னை அறியாமல் என்மேல் நோக்குகின்ற இவள் அருகிய நோக்கமானது, காம உறவிலே சரிபாகம் ஆவதன்று; அதனிலும் மிகுதியானது ஆகும்.* 1092

*அன்போடு என்னை நோக்கினாள்; பின் எதனையோ நினைத்தாள்போல நாணித் தலைகவிழ்ந்தாள்; அக்குறிப்பு, எங்களின் அன்புப்பயிருக்கு வார்த்த நீராயிற்று.* 1093

*யான் தன்னைப் பாராதபோது என்னை நோக்கி அவள் மெல்ல நகுவாள்; யான் பார்க்கும்பொழுதோ எனக்கு எதிராகப் பாராள்; தலைகவிழ்ந்து நிலத்தையே பார்ப்பாள்!* 1094

*என்னையே குறிப்பாக கொண்டு பார்த்தல் அல்லாமலும், தான் ஒரு கண்ணை, ஒரு பக்கமாகச் சாய்த்தாள் போலவும் நோக்கி, தன்னுள்ளாகவே அவள் நகுவாள்!* 1095

*புறத்தே நம்மை விரும்பாதவரைப்போலச் சொன்னாரானாலும், தம் உள்ளத்தில் நம்மைச் சினவாதவரின் சொற்கள் பயனாகுதல், விரைவில் உணரப்படும்.* 1096

*நம்மை உள்ளத்திலே சினவாதவரின் சொல்லும், சினந்தார் போலப் பார்க்கும் பார்வையும், அயலார்போல் உள்ளத்திலுள்ள ஒரு குறிப்பாலே வருவன.* 1097

*அவளை இரப்பதுபோல யான் பார்த்தபோது, அதனால் நெகிழ்ந்தவளாய் மெல்ல நகைத்தாள்; அதனால் அசையும் இயல்பு உடையவளுக்கு நன்மைக் குறிப்பும் உண்டு.* 1098

*முன் அறியாதவரைப் போலத் தம்முள் பொதுநோக்காகவே ஒருவரையொருவர் பார்த்தலும், தம் உள்ளத்திலே காதல் உடையவரிடம் காணப்படும் தன்மை ஆகும்.* 1099

*காமத்திற்கு உரிய இருவருள் ஒருவர் கண்ணோடு மற்றவர் கண்ணும் தம் நோக்கத்தால் ஒத்ததானால், அவர் வாய்ச் சொற்களால் எந்தப் பயனுமில்லை.* 1100

இருநோக்கு இவளுண்கண் உள்ளது ஒருநோக்கு
நோய்நோக்குஒன்று அந்நோய் மருந்து. 1091

கண்களவு கொள்ளும் சிறுநோக்கம் காமத்தில்
செம்பாகம் அன்று பெரிது. 1092

நோக்கினாள் நோக்கி இறைஞ்சினாள் அஃதவள்
யாப்பினுள் அட்டிய நீர். 1093

யான்நோக்கும் காலை நிலன்நோக்கும் நோக்காக்கால்
தான்நோக்கி மெல்ல நகும். 1094

குறிக்கொண்டு நோக்காமை அல்லால் ஒருகண்
சிறக்கணித்தாள் போல நகும் 1095

உறாஅ தவர்போல் சொலினும் செறாஅர்சொல்
ஒல்லை உணரப் படும். 1096

செறாஅச் சிறுசொல்லும் செற்றார்போல் நோக்கும்
உறாஅர்போன்று உற்றார் குறிப்பு. 1097

அசையியற்கு உண்டாண்டோர் ஏர்யான் நோக்கப்
பசையினள் பைய நகும். 1098

ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்
காதலார் கண்ணே உள. 1099

கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்
என்ன பயனும் இல. [சொற்கள் 1100

கண்டும் கேட்டும் உண்டும் மோந்தும் தீண்டியும் அறிகின்ற ஐம்புல இன்பங்களும், ஒளிவீசும் வளையல் அணிந்த இவள் ஒருத்தியிடத்திலேயே அமைந்துள்ளனவே! 1101

நோய்க்கு மருந்தாக அமைவன வேறான பொருள்கள்; அவ்வாறு இல்லாமல், அணிபுனைந்த இவளால் நமக்கு வந்த நோய்க்கு, இவள், தானே மருந்தும் ஆயினளே! 1102

தாம் விரும்பும் மகளிரின் மென்மையான தோள்மேல் துயிலும் இன்பத்தைப் போலத் தாமரைக் கண்ணனின் போகஉலகத்து இன்பமும் இனிதாக இருக்குமோ? 1103

தன்னைவிட்டு விலகிச் சென்றால் சுடுதலும், அருகில் நெருங்கினால் குளிர்தலுமாகிய நெருப்பை, இவள்தான், எவ்விடத்திலிருந்து பெற்றுள்ளாளோ? 1104

விரும்பியபொழுது அவையவை தரும் இன்பத்தைப்போல் இன்பம் தருவன, மலரணிந்த கூந்தலை உடையவளான இவள் தோள்கள் தருகின்ற இன்பம்! 1105

அணைக்கும் போதெல்லாம், வாடிய என்னுயிர் தளிர்க்குமாறு தீண்டுதலால், இப் பேதையின் தோள்கள் அமிழ்தத்தால் அமைந்தவை போலும்! 1106

தம் வீட்டிலிருந்து, தமக்குள்ள பகுதியை உண்ணும் இனிமை போன்றது, அழகிய மாமை நிறம் உடையவளான இவளைத் தழுவிப் பெறுகின்ற இன்பம்! 1107

காற்றும் இடையிலே புகுந்து பிளந்துவிடாத இறுக்கமான தழுவுதல், விரும்பிக் கூடும் இருவருக்கும் இனிமைதரும் நல்ல இன்ப உறவாகும்! 1108

ஊடலும், அதனை அளவோடு அறிந்து தெளிவித்தலும் பின்னர்க் கூடுதலும், என்னும் இவை எல்லாம், காமப் பொருந்தியவர் தமக்குள் பெற்ற பயன்களாகும். 1109

ஒன்றை அறியும்போது, முன்னிருந்த அறியாமையைக் கண்டாற்போல, செறிவான சிவந்த அணிகளை உடையவளைச் சேருந்தோறும், காமஇன்பமும் உண்டாகின்றது! 1110

கண்டுகேட்டு உண்டுஉயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே யுள 1101

பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை
தன்நோய்க்குத் தானே மருந்து. 1102

தாம்வீழ்வார் மென்றோள் துயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு. 1103

நீங்கின் தெறூஉங் குறுகுங்கால் தண்ணென்னும்
தீயாண்டுப் பெற்றாள் இவள். 1104

வேட்ட பொழுதின் அவையவை போலுமே
தோட்டார் கதுப்பினாள் தோள். 1105

உறுதோறு உயிர்தளிர்ப்பத் தீண்டலால் பேதைக்கு
அமிழ்தின் இயன்றன தோள். 1106

தம்மில் இருந்து தமதுபாத்து உண்டற்றால்
அம்மா அரிவை முயக்கு. 1107

வீழும் இருவர்க்கு இனிதே வளியிடை
போழப் படாஅ முயக்கு. 1108

ஊடல் உணர்தல் புணர்தல் இவைகாமம்
கூடியார் பெற்ற பயன். 1109

அறிதோறு அறியாமை கண்டற்றால் காமம்
செறிதோறும் சேயிழை மாட்டு. 1110

அனிச்ச மலரே! நீதான் நல்ல சிறப்பை உடையாய்! நீ வாழ்க. எம்மால் விரும்பப்படுகின்றவளோ நின்னைக் காட்டிலும் மிகவும் மென்மையான தன்மையினள்! 1111

'இவள் கண்களும் பலராலும் காணப்படும் இக்குவளைப் பூவைப் போன்றதாகுமோ' என்று, இக் குவளை மலரைக் கண்டால், நெஞ்சே, நீயும் மயங்குகின்றாயே! 1112

அவளுக்கு, மேனியோ தளிர் வண்ணம்; பல்லோ முத்து; இயல்பான மணமோ நறுமணம்; மையுண்ட கண்கள் வேல் போன்றவை; தோள்களோ மூங்கில் போன்றவை! 1113

குவளை மலர்கள், இவளைக் கண்டால், 'இம் மாணிழை கண்களுக்கு யாம் ஒப்பாக மாட்டோம்' என்று தலையைக் கவிழ்ந்து நிலத்தை நோக்குமே! 1114

தன் இடையின் நுண்மையை நினையாதவளாய், அனிச்ச மலரைக் காம்பு களையாமல் கூந்தலிலே சூடியுள்ளாளே! இவள் இடைக்கு இனி நல்ல பறைகள் ஒலிக்கமாட்டா! 1115

மதிதான் யாதென்றும், இம் மடந்தையது முகந்தான் யாதென்றும் வேறுபாடு அறியாமையால், வானத்து மீன்கள் தம் நிலையில் நில்லாது கலங்கிப் போயினவே! 1116

அவை கலங்குவதுதாம் ஏனோ? தேய்ந்து, பின்னர் வளர்ந்து நிறைவாகும் ஒளியுள்ள மதிக்கு உள்ளதுபோல, இவள் முகத்திலும் களங்கம் யாதும் உண்டோ? 1117

மதியமே! இப் பெண்ணின் நல்லொளின் முகத்தைப்போல நீயும் ஒளிவிடுவதற்கு வல்லமை உடையையானால், நீயும் என்னால் காதலிக்கப்படுவாய்! நீதான் வாழ்க! 1118

மதியமே! மலர்போன்ற கண்களையுடைய இவளின் முகத்திற்கு நீயும் ஒத்திருப்பாய் ஆயின், பலரும் காணுமாறு இனி வானத்தில் தோன்றாதிருப்பாயாக! 1119

மிகமிக மென்மையான அனிச்ச மலர்களும், அன்னப் பறவைகளின் மெல்லிய இறகுகளும், இம் மாதின் அடிக்கு நெருஞ்சிப் பழம்போலத் துன்பத்தைச் செய்யுமே! 1120

நன்னீரை வாழி அனிச்சமே நின்னினும்
மென்னீரள் யாம்வீழ் பவள். 1111

மலர்காணின் மையாத்தி நெஞ்சே இவள்கண்
பலர்காணும் பூவொக்கும் என்று. 1112

முறிமேனி முத்தம் முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண் வேய்த்தோள் அவட்கு. 1113

காணிற் குவளை கவிழ்ந்து நிலன்நோக்கும்
மாணிழை கண்ணொவ்வேம் என்று. 1114

அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாள் நுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை. 1115

மதியும் மடந்தை முகனும் அறியா
பதியிற் கலங்கிய மீன். 1116

அறுவாய் நிறைந்த அவிர்மதிக்குப் போல
மறுவுண்டோ மாதர் முகத்து. 1117

மாதர் முகம்போல் ஒளிவிட வல்லையேல்
காதலை வாழி மதி. 1118

மலரன்ன கண்ணாள் முகமொத்தி யாயின்
பலர்காணத் தோன்றல் மதி. 1119

அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம். 1120

பணிவோடு பேசுகின்ற இவளது, வெண்மையான பற்களிடையே ஊறிவந்த நீரானது, பாலோடு தேனும் கலந்தாற்போல மிகுந்த சுவையினை உடையதாகும்! 1121

இம் மட ந்தைக்கும் எமக்கும் இடை.யிலுள்ள நட்பினது நெருக்கம், உட.ம்போடு உயிருக்கும் இடையேயுள்ள நட்பினது நெருக்கம் போன்றது ஆகும். 1122

கண்ணின் கருமணியில் உள்ள பாவையே! நீயும் போய் விடுவாயாக! யாம் விரும்புகின்ற அழகிய நுதலை உடையாளுக்கு இருப்பதற்கான இடம் வேறு இல்லை. 1123

இந்த ஆயிழையாள் என்னுடன் இருக்கும்போது, என் உயிருக்கு வாழ்வைத் தருகின்றாள்; நீங்கும் போதோ அவ்வுயிருக்குச் சாதலையே தருகின்றாள்! 1124

ஒள்ளியவாய் அமர்த்த கண்களை உடை யவளின் குணங்களை மறப்பதற்கே அறியேன்; அதனால், யான் அதை எப்போதாயினும் நினைப்பதும் செய்வேனோ! 1125

எம் காதலுக்கு உரியவர் எம் கண்களிலிருந்து ஒருபோதுமே நீங்கார்; எம் கண்களை இமைத்தாலும் வருந்தார்; அவ்வளவு நுண்ணியவர் அவர். 1126

காதலுக்கு உரியவரான அவர் என் கண்ணிலேயே உள்ளனர்; ஆதலினாலே, அவர் மறைவாரோ என்று நினைத்து, என் கண்களுக்கு நான் மையும் எழுத மாட்டேன். 1127

காதலர் என் நெஞ்சத்தில் நிறைந்திருக்கின்றார்; அதனால், அவருக்குச் சூடு உண்ட ாவதை நினைத்து, யாம் சூடாக எதனையும் உண்பதற்கும் அஞ்சுவோம்! 1128

'இமைப்பின் அவர் மறைவார்' என்று, கண்களை மூடாமலே துயிலொழித்துக் கிடப்போம்; அவ்வளவிற்கே, இவ்வூர் அவரை அன்பற்றவர் என்கின்றதே! 1129

எம் உள்ளத்துள்ளே அவர் உவப்போடு உள்ளார்; இருந்தும், 'பிரிந்து போய்விட் ட ார்; அதனால் அன்பில்லாதவர்' என்று இவ்வூர் அவர்மேல் பழி கூறுகின்றதே! 1130

பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர். 1121

உட ம்போடு உயிரிடை என்னமற் றன்ன
மடந்தையொடு எம்மிடை நட்பு. 1122

கருமணியிற் பாவாய்நீ போதாயாம் வீழும்
திருநுதற்கு இல்லை இடம். 1123

வாழ்தல் உயிர்க்கன்னள் ஆயிழை சாதல்
அதற்கன்னள் நீங்கும் இடத்து. 1124

உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியேன்
ஒள்ளமர்க் கண்ணாள் குணம். 1125

கண்ணுள்ளிற் போகார் இமைப்பிற் பருவரார்
நுண்ணியர்எங் காத லவர். 1126

கண்ணுள்ளார் காத லவராகக் கண்ணும்
எழுதேம் கரப்பாக் கறிந்து. 1127

நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்டல்
அஞ்சுதும் வேபாக் கறிந்து. 1128

இமைப்பிற் கரப்பாக்கு அறிவல் அனைத்திற்கே
ஏதிலர் என்னுமிவ் வூர். 1129

உவந்துறைவர் உள்ளத்துள் என்றும் இகந்துறைவர்
ஏதிலர் என்னுமிவ் வூர். 1130

காம நோயால் துன்புற்று, தம் காதலியின் அன்பைப் பெறாமல் வருந்தியவருக்கு வலிமையான பாதுகாப்பு, 'மடலேறுதல்' அல்லாமல், வேறு யாதும் இல்லை. 1131

காதலியின் அன்பைப் பெறாத துயரத்தைத் தாங்கமுடியாத என் உடம்பும் உயிரும், நாணத்தை என்னிடமிருந்து நீக்கி நிறுத்திவிட்டு, மடலூரத் துணிந்துவிட்டன. 1132

நாணத்தையும் நல்ல ஆண்மையையும் முன்னர்ப் பெற்றிருந்தேன்; இப்பொழுதோ பிரிவுத் துயரால் காமநோய் மிகுந்தவர் ஏறும் மடலையே பெற்றுள்ளேன். 1133

நாணத்தோடு நல்லாண்மையும் ஆகிய தோணிகளைக் காமநோய் என்கின்ற கடுமையான வெள்ளம் அடித்துக் கொண்டு போகின்றதே! என்ன செய்வேன்! 1134

தொடர்பான குறுவளையல்களை அணிந்த இவள்தான், மாலைப்பொழுதிலே வருந்தும் துயரத்தையும், மடலேறும் நிலைமையையும் எனக்கு தந்துவிட்டாளே! 1135

அப் பேதையின் பொருட்டாக என் கண்கள் ஒருபோதும் மூடுதலைச் செய்யமாட்டா; அதனால், இரவின் நடுச்சாம வேளையிலும் மடலேறுதலையே நான் நினைத்திருப்பேன்! 1136

கடலைப் போன்ற காம நோயால் வருத்தமடைந்த போதும், மடலேறாமல், தன் துயரத்தைப் பொறுத்திருக்கும் பெண்ணைப்போன்ற பெருந்தகுதி ஆணுக்கு இல்லை. 1137

'நிறை இல்லாதவர் இவர்' என்றும், 'இரங்கத்தவர் இவர்' என்றும் பாராது, காமநோயானது, மறைப்பைக் கடந்து, மன்றத்தில் தானாக வெளிப்படுகின்றதே! 1138

பொறுத்திருந்ததனாலே எல்லாரும் அறிந்தாரில்லை என்று நினைத்தே, என் காமநோயானது, இவ்வாறு தெருவிலே பலரும் அறியுமாறு மயங்கித் திரிகின்றது போலும்! 1139

யாம் பட்ட இந்தப் பிரிவுத் துன்பத்தை அவர்களும் அடையாததாலேதான், அறிவில்லாதவர், யாம் கண்ணாற் காணும்படியாக எம் எதிரே நின்று சிரிக்கின்றனர். 1140

காமம் உழந்து வருந்தினார்க்கு ஏமம்
மடலல்லது இல்லை வலி. 1131

நோனா உடம்பும் உயிரும் மடலேறும்
நாணினை நீக்கி நிறுத்து. 1132

நாணொடு நல்லாண்மை பண்டுடையேன் இன்றுடையேன்
காமுற்றார் ஏறும் மடல். 1133

காமக் கடும்புனல் உய்க்குமே நாணொடு
நல்லாண்மை என்னும் புணை. 1134

தொடலைக் குறுந்தொடி தந்தாள் மடலொடு
மாலை உழக்கும் துயர். 1135

மடலூர்தல் யாமத்தும் உள்ளுவேன் மன்ற
படலொல்லா பேதைக்கென் கண். 1136

கடலன்ன காமம் உழந்தும் மடலேறாப்
பெண்ணின் பெருந்தக்கது இல். 1137

நிறையரியர் மன் அளியர் என்னாது காமம்
மறையிறந்து மன்று படும். 1138

அறிகிலார் எல்லாரும் என்றே என்காமம்
மறுகின் மறுகும் மருண்டு. 1139

யாங்கண்ணிற் காண நகுப அறிவில்லார்
யாம்பட்ட தாம்படா வாறு. 1140

ஊரிலே பழிச்சொல் எழுந்தும் என் உயிர் இன்னும் போகாது நிற்கின்றது; அஃது என் நல்வினையின் பயனால்தான் என்பதைப் பலரும் அறிய மாட்டார்கள். 1141

குவளை மலரைப்போன்ற கண்களை உடையவளான இவளின் அருமையைப் பற்றி அறியாமல், இவளை எளியவளாகக் கருதி, இவ்வூரவர் அலரினைத் தந்தார்களே! 1142

ஊர் அனைத்தும் அறிந்த இப் பழிச்சொற்கள் அவனையும் சென்று சேராதோ! சேருமாதலால், அதனைப் பெறாதைப் பெற்றாற் போன்றதாகவே யானும் கொள்வேன். 1143

ஊரார் உரைக்கும் பழிச்சொற்களாலே காமநோயும் நன்றாக மலர்கின்றது! அதுவும் இல்லையானால், என் ஆசையும் தன் மலர்ச்சியில்லாமல் சுருங்கிப் போய்விடுமே! 1144

களிக்குந்தோறும் களிக்குந்தோறும் மேன்மேலும் கள்ளுண்டலை விரும்பினாற்போல, காமமும், அலரால் வெளிப்பட வெளிப்பட, மேலும் இனிமையாகின்றது. 1145

அவரைக் கண்டது எல்லாம் ஒரே ஒரு நாள்தான்; திங்களைப் பாம்பு கொண்டது எங்கும் பரவினாற்போல, ஊரலரும் அதற்குள் எங்கும் வெளிப்பட்டுப் பரவிவிட்டதே. 1146

இக் காமநோயானது, ஊரவர் சொல்லும் பழிச்சொற்களை எருவாகவும், அதுகேட்டு அன்னை சொல்லும் கடுஞ்சொல்லை நீராகவும் கொண்டு வளர்கின்றது. 1147

'பழிச்சொல்லால் காமத்தைத் தணித்துவிடுவோம்' என்று முயலுதல், 'நெய்யால் நெருப்பை அவிப்போம்' என்பது போன்ற அறியாமைச் செயலாகும். 1148

'அஞ்சாதே! பிரியேன்' என்று என்னைத் தெளிவித்துக் கூடியவர், இந்நாள் பலரும் நாண நம்மைக் கைவிட்டுப் போனபோது, அலருக்கு நாணவும் நம்மால் இயலுமோ! 1149

யாம் விரும்புகின்ற அலரினை இவ்வூரவரும் எடுத்துக் கூறுகின்றனர்; அதனால், எம் காதலரும் தாம் எம் உறவை விரும்பி வந்து எமக்கு அருளினைச் செய்வார். 1150

அலரெழ ஆருயிர் நிற்கும் அதனைப்
பலரறியார் பாக்கியத் தால். 1141

மலரன்ன கண்ணாள் அருமை அறியாது
அலரெமக்கு ஈந்ததிவ் வூர். 1142

உறாஅதோ ஊரறிந்த கௌவை அதனைப்
பெறாஅது பெற்றன்ன நீர்த்து. 1143

கவ்வையாற் கவ்விது காமம் அதுவின்றேல்
தவ்வென்னும் தன்மை இழந்து. 1144

களித்தோறும் கள்ளுண்டல் வேட்ட ற்றால் காமம்
வெளிப்படும் தோறும் இனிது. 1145

கண்டது மன்னும் ஒருநாள் அலர்மன்னும்
திங்களைப் பாம்புகொண் டற்று. 1146

ஊரவர் கௌவை எருவாக அன்னைசொல்
நீராக நீளுமிந் நோய். 1147

நெய்யால் எரிநுதுப்பேம் என்றற்றால் கௌவையால்
காமம் நுதுப்பேம் எனல். 1148

அலர்நாண ஒல்வதோ அஞ்சலோம்பு என்றார்
பலர்நாண நீத்தக் கடை. 1149

தாம்வேண்டின் நல்குவர் காதலர் யாம்வேண்டும்
கௌவை யெடுக்கும் இவ்வூர். 1150

பிரிந்து செல்லாமை உண்டானால் எனக்குச் சொல்வாயாக; பிரிந்துபோய் விரைந்து திரும்பி வருவது பற்றியானால், அது வரையிலும் வாழ்ந்திருப்பவருக்குச் சொல்வாயாக. 1151

அவர் அன்பான பார்வையும் முன்னர் இனிதாய் இருந்தது; இப்பொழுதோ, பிரிவை நினைத்து அஞ்சுகின்ற துன்பத்தால், அவர் கூடுதலும் துன்பமாகத் தோன்றுகின்றது. 1152

அறிவு உடையவரிடமும், தாம் காதலித்தவரைப் பிரிவது ஒரு சமயத்தில் உள்ளதனால், அவர், 'பிரியேன்' என்று சொன்ன சொல்லையும் என்னால் நம்ப முடியவில்லை! 1153

அருள் செய்த காலத்தில், 'அஞ்சாதே' என்றுகூறி, என் அச்சத்தைப் போக்கியவரே, இப்போது விட்டுப்பிரிவாரானால், அவரை நம்பிய நமக்கும் குற்றம் ஆகுமோ? 1154

என்னைக் காப்பதானால், காதலர் பிரியாதபடி தடுத்துக் காப்பாயாக; அவர் பிரிந்து போய்விட்டார் என்றால், மீண்டும் அவரைக் கூடுதல் என்பது நமக்கு அரிதாகும். 1155

'பிரிவைப் பற்றிச் சொல்லும் கொடியவர் அவரானால்', அவர் மீண்டும் திரும்பிவந்து நமக்கு இன்பம் தருவார் என்னும் நம் ஆசையும், பயன் இல்லாததே! 1156

நம்மைத் தலைவன் பிரிந்து போயினான் என்பதை, மெலிந்த நம் முன்கையிலிருந்து கழலும் வளைகள், ஊரறிய எடுத்துக் காட்டித் தூற்ற மாட்டாவோ? 1157

தோழியர் எவருமே இல்லாத ஊரில் குடியிருப்பது மிகத் துன்பமானது; இனிய காதலரைப் பிரிந்து தனித்திருப்பது, அதைவிட மிகவும் துன்பமானது. 1158

தன்னைத் தொட்டால் சுடுவதல்லாமல், காமநோயைப் போலத் தன்னை அகன்று தொலைவில் விலகினால் சுடுவதற்குத் தீயும் ஆற்றல் உடையது ஆகுமோ! 1159

காதலர் பிரிவைப் பொறுத்து, அதனால் வரும் நலிவையும் விலக்கி, பிரிவுத் துயரையும் தாங்கி, அதன் பின்னரும் உயிரோடு இருக்கும் மகளிர் உலகத்தில் பலர்! 1160

செல்லாமை உண்டேல் எனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை. 1151

இன்கண் உடைத்தவர் பார்வல் பிரிவஞ்சும்
புன்கண் உடைத்தாற் புணர்வு. 1152

அரிதரோ தேற்றம் அறிவுடையார் கண்ணும்
பிரிவோ ரிடத்துண்மை யான். 1153

அளித்தஞ்சல் என்றவர் நீப்பின் தெளித்தசொல்
தேறியார்க்கு உண்டோ தவறு. 1154

ஓம்பின் அமைந்தார் பிரிவோம்பல் மற்றவர்
நீங்கின் அரிதால் புணர்வு. 1155

பிரிவுரைக்கும் வன்கண்ணர் ஆயின் அரிதவர்
நல்குவர் என்னும் நசை. 1156

துறைவன் துறந்தமை தூற்றாகொல் முன்கை
இறையிறவா நின்ற வளை. 1157

இன்னா தினனில்லூர் வாழ்தல் அதனினும்
இன்னா தினியார்ப் பிரிவு. 1158

தொடிற்சுடின் அல்லது காமநோய் போல
விடிற்சுடல் ஆற்றுமோ தீ. 1159

அரிதாற்றி அல்லல்நோய் நீக்கிப் பிரிவாற்றிப்
பின்இருந்து வாழ்வார் பலர். 1160

பிரிவுத்துன்பமான இந்த நோயை, பிறர் அறியாதபடி மறைப்பேன்; ஆனால், அஃது ஊற்று நீரைப்போல மேன்மேலும் சுரந்து சுரந்து பெருகுகின்றதே. 1161

காமநோயை முழுவதும் மூடி மறைக்கவும் முடியவில்லை; நோயைச் செய்த காதலருக்குத் தூது அனுப்புவதும் என் பெண்மைக்கு நாணம் தருகின்றதே! 1162

பிரிவுத் துயராலே நலியும் என் உயிரையே காவடித் தண்டாகக் கொண்டு, காமமும் நாணமும் இருபாலும் சம எடையாகத் தூங்குகின்றனவே! 1163

காமமாகிய நோயும் கடலைப் போலப் பெருகியுள்ளது; அதைக் கடக்கும் தோணியாகிய காதலர்தாம் இப்போது நம்மோடு உடனில்லாமற் போயினர்! 1164

இனிமையான நட்புடைய நம்மிடமே துன்பத்தைச் செய்யும் நம் காதலர், பகையை வெல்வதற்கான வலிமை வேண்டும்போது, என்னதான் செய்வாரோ? 1165

காம இன்பமானது அநுபவிக்கும்போது கடலளவு பெரிதாயுள்ளது; ஆனால், பிரிவுத் துன்பத்தால் வருத்தும்போது, அவ்வருத்தம் கடலைவிடப் பெரிதாக உள்ளதே! 1166

காமமாகிய கடும்புனலை நீந்திநீந்திக் கரை காணாமல் தவிக்கின்றேன்; இந்த நள்ளிரவிலும், யான் ஒருத்தியே தூங்காமல் வருந்தியபடி உள்ளேன்! 1167

இந்த இராக்காலமும், எல்லா உயிர்களையும் உறங்கச் செய்துவிட்டு, என்னையன்றி யாரையும் இந்நள்ளிரவில் தனக்குத் துணையில்லாமல் உள்ளதே! 1168

பிரிவுத் துயராலே வருந்தும்போது மிக நீண்டதுபோலக் கழிகின்ற இரவுப்பொழுதானது, நம்மைப் பிரிந்துபோன காதலரினும் மிகமிகக் கொடுமையானது. 1169

என் உள்ளத்தைப் போலவே, உடலும், அவர் இருக்கும் இடத்திற்கு இப்போதே செல்ல முடிந்ததானால், என் கண்கள் இப்படிக் கண்ணீர் வெள்ளத்தில் நீந்தாவே! 1170

மறைப்பேன்மன் யானிஃதோ நோயை இறைப்பவர்க்கு
ஊற்றுநீர் போல மிகும். 1161

கரத்தலும் ஆற்றேன்இந் நோயைநோய் செய்தார்க்கு
உரைத்தலும் நாணுத் தரும். 1162

காமமும் நாணும் உயிர்காவாத் தூங்கும்என்
நோனா உடம்பின் அகத்து. 1163

காமக் கடன்மன்னும் உண்டே அதுநீந்தும்
ஏமப் புணைமன்னும் இல். 1164

துப்பின் எவனாவர் மற்கொல் துயர்வரவு
நட்பினுள் ஆற்று பவர். 1165

இன்பம் கடன்மற்றுக் காமம் அஃதடுங்கால்
துன்பம் அதனிற் பெரிது. 1166

காமக் கடும்புனல் நீந்திக் கரைகாணேன்
யாமத்தும் யானே உளேன். 1167

மன்னுயிர் எல்லாம் துயிற்றி அளித்திரா
என்னல்லது இல்லை துணை. 1168

கொடியார் கொடுமையின் தாம்கொடிய இந்நாள்
நெடிய கழியும் இரா. 1169

உள்ளம்போன்று உள்வழிச் செல்கிற்பின் வெள்ளநீர்
நீந்தல மன்னோஎன் கண். 1170

இக்கண்கள் அவரைக் காட்டியதால் அல்லவோ நீங்காத இக் காமநோயை யாமும் பெற்றோம்; அவை, இன்று என்னிடம் காட்டச் சொல்லி அழுவது எதனாலோ? 1171

மேல்விளைவுபற்றி ஆராயாமல், அன்று அவரை நோக்கி மகிழ்ந்த கண்கள், இன்று, என் துயரைப் பகுத்து உணராமல், தாமும் துன்பப்படுவதுதான் எதனாலோ? 1172

அன்று, தாமே விரைந்து பார்த்தும், இன்று தாமே அழுகின்ற கண்கள், நம்மால் அதன் அறியாமை கருதிச் சிரிக்கத் தகுந்த இயல்பினையே உடையதாகும். 1173

அன்று, யான் உய்யாத அளவு தீராத காமநோயை என்னிடம் நிறுத்திய கண்கள், இன்று, தாமும், அழுவதற்கு மாட்டாதபடி நீர்வற்றி வறண்டுவிட்டனவே! 1174

கடலிலும் பெரிதான காமநோயை அன்று எனக்குச் செய்த இக் கண்கள், அத் தீவினையால், தாமும் உறங்காமல் இவ்விரவுப் பொழுதில் துன்பத்தை அடைகின்றன. 1175

எமக்கு இத்தகைய காமநோயைச் செய்த கண்கள், தாமும் துயில் பெறாமல் இப்படி அழுகையில் ஈடுபட்டது, காண்பதற்கு மிகவும் இனியதாகும். 1176

விரும்பி உள் நெகிழ்ந்துவிடாதே, அன்று அவரைக் கண்டு மகிழ்ந்த கண்கள், இன்று துயிலாது வருந்தி வருந்தித் தம்மிடமுள்ள நீரும் அற்றே போவதாக! 1177

உள்ளத்தில் விருப்பமில்லாமல், பேச்சால் அன்பு காட்டியவர் இவ்விடத்தே உள்ளனர்; அதனால் பயன் என்ன? அவரைக் காணாமல் என் கண்கள் அமைகின்றிலவே! 1178

காதலர் வராதபோது, அவர் வரவை எதிர்பார்த்துத் தூங்கா; வந்தபோது, பிரிவஞ்சித் துயிலா; இருவழியும் கண்கள் பொறுத்தற்கரிய துன்பத்தையே அடைந்தன! 1179

எம்மைப்போல் அறைபறையாகிய கண்களை உடையவரின், நெஞ்சில் அடக்கியுள்ள மறையை அறிதல், இவ்வூரிலே உள்ளவர்க்கு மிகவும் எளியதாகும். 1180

கண்டாங் கலுழ்வ தெவன்கொலோ தண்டாநோய்
தாங்காட்ட யான்கண் டது. 1171

தெரிந்துணரா நோக்கிய உண்கண் பரிந்துணராப்
பைதல் உழைப்பது எவன்? 1172

கதுமெனத் தாம்நோக்கித் தாமே கலுழும்
இதுநகத் தக்கது உடைத்து. 1173

பெயலாற்றா நீருலந்த உண்கண் உயலாற்றா
உய்வில்நோய் என்கண் நிறுத்து. 1174

படலாற்றா பைதல் உழக்கும் கடலாற்றாக்
காமநோய் செய்தஎன் கண். 1175

ஓஒ இனிதே எமக்கிந்நோய் செய்தகண்
தாஅம் இதற்பட் டது. 1176

உழந்துழந்து உண்ணீர் அறுக விழைந்திழைந்து
வேண்டி யவர்க்கண்ட கண். 1177

பேணாது பெட்டார் உளர்மன்னோ மற்றவர்க்
காணாது அமைவில கண். 1178

வாராக்கால் துஞ்சா வரின்துஞ்சா ஆயிடை
ஆரஞர் உற்றன கண். 1179

மறைபெறல் ஊரார்க்கு அரிதன்றால் எம்போல்
அறைபறை கண்ணா ரகத்து. 1180

என்னை விரும்பிய காதலரின் பிரிவுக்கு அந்நாளிலே உடன்பட்ட யான், இப்பொழுது பசந்த என் இயல்பை யாருக்குச் சென்று எடுத்துச் சொல்வேன்! 1181

'அவர் தந்தார்' என்னும் உரிமையினாலே, இப் பசப்புத் தானும், என் உடலின்மேல் உரிமையோடு பற்றிப் படர்ந்து மேனி எங்கும் நிறைகின்றதே! 1182

என் அழகையும் நாணத்தையும் அவர் தம்மோடு எடுத்துக் கொண்டார்; அதற்குக் கைம்மாறாகக் காமநோயையும் பசலையையும் எனக்குத் தந்துள்ளார்! 1183

அவரையே யான் நினைத்திருப்பேன்; அவர் திறங்களைப் பற்றியே பேசுவேன்; அவ்வாறாகவும், பசலையும் வந்து படர்ந்ததுதான் பெரிய வஞ்சனையாய் இருக்கின்றது! 1184

அதோ பார், என் காதலர் என்னைப் பிரிந்து போகின்றார்; இதோ பார், அதற்குள்ளேயே என் உடலில் பசலையானது வந்து பற்றிப் படருகின்றது! 1185

விளக்கின் முடிவை எதிர்பார்த்துத் தான்வரக் காத்திருக்கும் இருளைப்போல, என் தலைவனுடைய தழுவலின் முடிவைப் பசலையும் எதிர்பார்த்துக் காத்திருக்கின்றது. 1186

தலைவனைத் தழுவியபடியே கிடந்தேன்; பக்கத்தில் சிறிது புரண்டேன்; அந்தப் பிரிவுக்கே பசலையும் அள்ளிக்கொள்வது போல, என்மீது மிகுதியாகப் பரவி விட்டதே. 1187

'இவள் பசந்தாள்' என்று என்னைப் பழித்துப் பேசுவது அல்லாமல், இவளைக் காதலர் கைவிட்டுப் பிரிந்தார் என்று பேசுபவர் யாரும் இல்லையே! 1188

'பிரிவுக்கு உடன்படச் செய்த காதலர் நல்ல நிலையினர் ஆவார்' என்றால், என்னுடைய மேனியும் உள்ளபடியே பசலை நோயினை அடைவதாக! 1189

'பிரிவுக்கு உடன்படச் செய்து பிரிந்துபோனவர், நமக்கு அருள் செய்யாதது பற்றித் தூற்றார்' என்றால், யான் பசந்தேன் என்று பேர்பெறுவதும் நல்லதேயாகும்! 1190

நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் பசந்தவென்
பண்பியார்க்கு உரைக்கோ பிற. 1181

அவர்தந்தார் என்னும் தகையால் இவர்தந்தென்
மேனிமேல் ஊரும் பசப்பு. 1182

சாயலும் நாணும் அவர்கொண்டார் கைம்மாறா
நோயும் பசலையும் தந்து. 1183

உள்ளுவன் மன்யான் உரைப்பது அவர்திறமால்
கள்ளம் பிறவோ பசப்பு. 1184

உவக்காண்எம் காதலர் செல்வார் இவக்காண்என்
மேனி பசப்பூர் வது. 1185

விளக்கற்றம் பார்க்கும் இருளேபோல் கொண்கன்
முயக்கற்றம் பார்க்கும் பசப்பு. 1186

புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தேன் அவ்வளவில்
அள்ளிக்கொள் வற்றே பசப்பு. 1187

பசந்தாள் இவள்என்பது அல்லால் இவளைத்
துறந்தார் அவர்என்பார் இல். 1188

பசக்கமன் பட்டாங்கென் மேனி நயப்பித்தார்
நன்னிலையர் ஆவர் எனின். 1189

பசப்பெனப் பேர்பெறுதல் நன்றே நயப்பித்தார்
நல்காமை தூற்றார் எனின். 1190

தாம் விரும்பும் காதலர், தம்மையும் விரும்பும் பேறு பெற்றவர்கள், காதல் வாழ்வின் பயனாகிய விதையற்ற கனியை நுகரப் பெற்றவர்கள் ஆவர். 1191

தம்மை விரும்புபவருக்கு, அவரை விரும்புகிற காதலர் அளிக்கும் அன்பானது, உயிர்வாழ்பவருக்கு, வானம் மழைபெய்து உதவினாற் போன்றது ஆகும். 1192

காதலரால் விரும்பப்படுகிறவருக்கு, இடையில் பிரிவுத் துன்பம் வந்தாலும், 'மீண்டும் யாம் இன்பமாக வாழ்வோம்' என்னும் செருக்குப் பொருந்துவது ஆகும். 1193

தாம் காதலிக்கின்ற காதலரால் தாமும் விரும்பப்படும் தன்மையைப் பெறாதவர் என்றால், அம் மகளிர், முன்செய்த நல்வினைப் பயனை உடையவரே அல்லர். 1194

நாம் காதல் கொண்டவர், நம்மீது தாமும் காதல் கொள்ளாவிட்டால், நமக்கு என்ன நன்மையைத்தான் செய்யப் போகின்றார்! 1195

'காதல் ஒருதலையானது' என்றால் மிகவும் துன்பமானது; காவடித் தண்டின் பாரத்தைப்போல இரு பக்கமும் ஒத்தபடி இருந்ததானால், அதுவே மிகவும் இனிமையானது. 1196

இருவரிடத்திலும் ஒத்து நடக்காமல் ஒருவரிடம் மட்டுமே காமன் நின்று நடப்பதால், என் வருத்தத்தையும் துன்பத்தையும் அவன் காண மாட்டானோ? 1197

தாம் விரும்பிய காதலரின் இனிய சொல்லைப் பெறாமல், உலகத்தில் துன்புற்று வாழ்கின்ற பெண்களைவிட வன்கண்மை உடையவர்கள், யாரும் இல்லை. 1198

யான் விரும்பிய காதலர் மீண்டும் வந்து அன்பு செய்யார் என்றாலும், அவரைப்பற்றிய புகழைப் பிறர் சொல்லக் கேட்பதும், காதுகளுக்கு இனிமையாக இருக்கின்றது. 1199

நெஞ்சமே! நின்னிடம் அன்பற்றவருக்கு நின் நோயைச் சென்று சொல்லுகிறாயே; அதைவிட எளிதாகக் கடலைத் தூர்ப்பதற்கு நீயும் முயல்வாயாக. 1200

தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றாரே
காமத்துக் காழில் கனி. 1191

வாழ்வார்க்கு வானம் பயந்தற்றல் வீழ்வார்க்கு
வீழ்வார் அளிக்கும் அளி. 1192

வீழுநர் வீழப் படுவார்க்கு அமையுமே
வாழுநம் என்னுஞ் செருக்கு. 1193

வீழப் படுவார் கெழீஇயிலர் தாம்வீழ்வார்
வீழப் படாஅர் எனின். 1194

நாங்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ
தாங்காதல் கொள்ளாக் கடை. 1195

ஒருதலையான் இன்னாது காமம் காப்போல
இருதலை யானும் இனிது. 1196

பருவரலும் பைதலும் காணான்கொல் காமன்
ஒருவர்கண் நின்றொழுகு வான். 1197

வீழ்வாரின் இன்சொல் பெறாஅது உலகத்து
வாழ்வாரின் வன்கணார் இல். 1198

நசைஇயார் நல்கார் எனினும் அவர்மாட்டு
இசையும் இனிய செவிக்கு. 1199

உறாஅர்க்கு உறுநோய் உரைப்பாய் கடலைச்
செறாஅஅய் வாழிய நெஞ்சு. 1200

*நினைத்தாலும் தீராத பெருமகிழ்ச்சியை எமக்குச் செய்வதனால், உண்டால் மட்டுமே மகிழ்ச்சிதரும் கள்ளினும் காமமே உலகத்தில் இனிமை தருவதாகும். 1201*

*யாம் விரும்புகின்ற காதலரை நினைத்தாலும், பிரிவுத் துன்பம் இல்லாமல் போகின்றது; அதனால், காமமும் எவ்வளவானாலும் ஒருவகையில் இனிமையானதே! 1202*

*தும்மல் எழுவதுபோலத் தோன்றி எழாமல் அடங்குகின்றதே! அதனால், நம் காதலர் நினைப்பவர் போலிருந்தவர் நம்மை மறந்து நினையாமற் போயினாரோ! 1203*

*எம் நெஞ்சில் காதலராகிய அவர் எப்போதுமே உள்ளனர்; அதுபோலவே, அவருடைய நெஞ்சில், நாமும் நீங்காமல் எப்போதும் இருக்கின்றோமோ? 1204*

*தம்முடைய நெஞ்சில் எம்மை வரவிடாமல் காவல் செய்து கொண்ட நம் காதலர், நம் உள்ளத்தில் தாம் ஓயாமல் வருவதைப்பற்றி வெட்கப்பட மாட்டாரோ? 1205*

*காதலரோடு இன்பமாயிருந்த அந்த நாட்களின் நினைவால் தான் நான் உயிரோடிருக்கிறேன்; வேறு எதனால் நான் அவரைப் பிரிந்தும் உயிர் வாழ்கின்றேன்? 1206*

*அவரை மறந்தால் என்ன ஆவேனோ? அதனால், அவரை மறப்பதற்கும் அறியேன்; மறக்க நினைத்தால், அந்த நினைவும் என் உள்ளத்தைச் சுடுகின்றதே! 1207*

*காதலரை எவ்வளவு அதிகமாக நினைத்தாலும், அவர் என்மேல் சினந்து கொள்ளவே மாட்டார்; நம் காதலர் நமக்குச் செய்யும் சிறந்த உதவியே அதுதான்! 1208*

*'நாம் இருவரும் வேறானவர் அல்லேம்' என்று சொல்லும் அவர், இப்போது அன்பில்லாமல் இருப்பதை மிகவும் நினைந்து, என் இனிய உயிரும் அழிகின்றதே. 1209*

*மதியமே! என் உள்ளத்தில் பிரியாதிருந்து, என்னைப் பிரிந்து சென்ற காதலரை என் கண்ணால் தேடிக் காண்பதற்காக, நீயும் வானத்தில் மறையாமல் இருப்பாயாக! 1210*

*உள்ளினும் தீராப் பெருமகிழ் செய்தலால்*
*கள்ளினும் காமம் இனிது.* 1201

*எனைத்தொன்று இனிதேகாண் காமம்தாம் வீழ்வார்*
*நினைப்ப வருவதொன்று இல்.* 1202

*நினைப்பவர் போன்று நினையார்கொல் தும்மல்*
*சினைப்பது போன்று கெடும்.* 1203

*யாமும் உளேங்கொல் அவர்நெஞ்சத்து எந்நெஞ்சத்து*
*ஓஒ உளரே அவர்.* 1204

*தந்நெஞ்சத்து எம்மைக் கடிகொண்டார் நாணார்கொல்*
*எந்நெஞ்சத் தோவா வரல்.* 1205

*மற்றியான் என்னுளேன் மன்னோ அவரொடியான்*
*உற்றநாள் உள்ள உளேன்.* 1206

*மறப்பின் எவனாவன் மற்கொல் மறப்பறியேன்*
*உள்ளினும் உள்ளம் சுடும்.* 1207

*எனைத்து நினைப்பினும் காயார் அனைத்தன்றோ*
*காதலர் செய்யும் சிறப்பு.* 1208

*விளியுமென் இன்னுயிர் வேறல்லம் என்பார்*
*அளியின்மை ஆற்ற நினைந்து.* 1209

*விடாஅது சென்றாரைக் கண்ணினால் காணப்*
*படாஅதி வாழி மதி.* 1210

பிரிவால் வருந்திய நான் அயர்ந்து கண் உறங்கியபோது, காதலர் அனுப்பிய தூதோடும் வந்த கனவுக்கு, யான் விருந்தாக என்ன கைம்மாறு செய்யப் போகின்றேன்! 1211

யான் விரும்பும்போது என் கண்கள் தூங்குமானால், கனவில் வந்து தோன்றும் காதலருக்கு, யான் தப்பிப் பிழைத்திருக்கும் உண்மையைச் சொல்வேன்! 1212

நனவிலே வந்து நமக்கு அன்பு செய்யாதிருக்கின்ற காதலரை, கனவிலாவது கண்டு மகிழ்வதனால்தான், என் உயிரும் இன்னமும் போகாமல் இருக்கின்றது. 1213

நனவில் வந்து அன்புசெய்யாத காதலரைத் தேடிக்கொண்டு வருவதற்காகவே, அவரைப் பற்றிய காதல் நிகழ்ச்சிகள் கனவில் வந்து நமக்குத் தோன்றுகின்றன. 1214

முன்பு நனவில் கண்ட இன்பமும் அந்தப் பொழுதளவிலே இனிதாயிருந்தது; இப்பொழுது காணும் கனவும், காணும் அந்தப்பொழுதிலே நமக்கு இனிதாகவே யுள்ளது. 1215

நனவு என்று சொல்லப்படும் ஒன்று இல்லையானால், கனவில் வருகின்ற நம் காதலர் நம்மைவிட்டு எப்போதுமே பிரியாதிருப்பார் அல்லவோ! 1216

நனவில் வந்து நமக்கு அன்புசெய்வதற்கு நினையாத கொடுமையாளரான காதலர், கனவிலே வந்துமட்டும் நம்மை வருத்துவதுதான் எதனாலோ? 1217

தூங்கும்போது கனவிலே என் தோள்மேலராகக் காதலர் வந்திருப்பார்; விழித்து எழும்போதோ, விரைவாக என் நெஞ்சில் உள்ளவராக ஆகின்றார்! 1218

கனவிலே காதலரை வரக்காணாத மகளிரே, நனவில் வந்து அன்பு செய்யாத காதலரைக் குறித்து வருத்தப்பட்டு, மனம் நொந்து கொள்வார்கள். 1219

'நனவிலே நம்மைவிட்டுப் பிரிந்துபோனார்' என்று அவரைப் பற்றி இவ்வூரார் பழித்துப் பேசுகின்றார்களே! இவர்கள் எம்போல் கனவில் தம் காதலரைக் காண்பதில்லையோ? 1220

காதலர் தூதொடு வந்த கனவினுக்கு
யாதுசெய் வேன்கொல் விருந்து. 1211

கயலுண்கண் யானிரப்பத் துஞ்சிற் கலந்தார்க்கு
உயலுண்மை சாற்றுவேன் மன். 1212

நனவினால் நல்கா தவரைக் கனவினால்
காண்ட லின் உண்டென் உயிர். 1213

கனவினான் உண்டாகும் காமம் நனவினான்
நல்காரை நாடித் தரற்கு. 1214

நனவினால் கண்டதூஉம் ஆங்கே கனவுந்தான்
கண்ட பொழுதே இனிது. 1215

நனவென ஒன்றில்லை யாயின் கனவினால்
காதலர் நீங்கலர் மன். 1216

நனவினால் நல்காக் கொடியார் கனவினான்
என்னெம்மைப் பீழிப் பது. 1217

துஞ்சுங்கால் தோள்மேல ராகி விழிக்குங்கால்
நெஞ்சத்தர் ஆவர் விரைந்து. 1218

நனவினால் நல்காரை நோவர் கனவினாற்
காதலர்க் காணா தவர். 1219

நனவினால் நந்நீத்தார் என்பர் கனவினால்
காணார்கொல் இவ்வூ ரவர். 1220

பொழுதே! நீ மாலைக் காலமே அல்லை; காதலரோடு கூடியிருந்து, பிறகு பிரிவால் கலங்கியிருக்கும் மகளிரின் உயிரையுண்ணும் முடிவு காலமே ஆவாய்! 1221

மயங்கிய மாலைப்பொழுதே! எம்மைப்போலவே நீயும் துன்பமுற்றுத் தோன்றுகிறாயே! நின் துணையும் என் காதலரைப் போலவே இரக்கம் இல்லாததோ! 1222

பனி தோன்றிப் பசந்துவந்த மாலைக் காலமானது, எனக்கு வருத்தம் தோன்றி மென்மேலும் வளரும்படியாகவே இப்போது வருகின்றது போலும்! 1223

காதலர் அருகே இல்லாதபோது, கொலை செய்யும் இடத்திலே ஆறலைப்பார் வருவதைப்போல, இம் மாலையும் என் உயிரைக் கொல்வதற்காகவே வருகின்றதே! 1224

காலைப் பொழுதுக்கு யான் செய்த நன்மைதான் யாது? என்னை இப்படிப் பெரிதும் வருத்துகின்ற மாலைப் பொழுதுக்கு யான் செய்த தீமையும் யாதோ? 1225

மாலைப்பொழுது இவ்வாறு துன்பம் செய்யும் என்பதை, காதலர் என்னைவிட்டுப் பிரியாமல் கூடியிருந்த அந்தக் காலத்தில் யான் அறியவே இல்லையே! 1226

காலையிலே அரும்பாகித் தோன்றி, பகலெல்லாம் பேரரும்பாக வளர்ந்து, மாலைப்பொழுதிலே மலர்ந்து மலராக விரிகின்றது, இந்தக் காமமாகிய நோய். 1227

நெருப்பைப் போலச் சுடுகின்ற மாலைப் பொழுதுக்குத் தூதாகி, ஆயனுடைய புல்லாங்குழலின் இசையும், என்னைக் கொல்லும் படையாக வருகின்றதே! 1228

அறிவு மயங்கும்படியாக மாலைப்பொழுது வந்து படர்கின்ற இப்பொழுதிலே, இந்த ஊரும் மயங்கியதாய், என்னைப் போலத் துன்பத்தை அடையும். 1229

பொருள் காரணமாகப் பிரிந்துசென்ற காதலரை நினைத்து, பிரிவுத் துன்பத்தாலே போகாமல் நின்ற என் உயிரானது, இம் மாலைப்பொழுதில் நலிவுற்று மாய்கின்றதே! 1230

மாலையோ அல்லை மணந்தார் உயிருண்ணும்
வேலைநீ வாழி பொழுது. 1221

புன்கண்ணை வாழி மருள்மாலை எங்கேள்போல்
வன்கண்ண தோநின் துணை. 1222

பனியரும்பிப் பைதல்கொள் மாலை துனியரும்பித்
துன்பம் வளர வரும். 1223

காதலர் இல்வழி மாலை கொலைக்களத்து
ஏதிலர் போல வரும். 1224

காலைக்குச் செய்தநன் றென்கொல் எவன்கொல்யான்
மாலைக்குச் செய்த பகை. 1225

மாலைநோய் செய்தல் மணந்தார் அகலாத
காலை அறிந்தது இலேன். 1226

காலை அரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலருமிந் நோய். 1227

அழல்போலும் மாலைக்குத் தூதாகி ஆயன்
குழல்போலும் கொல்லும் படை. 1228

பதிமருண்டு பைதல் உழக்கும் மதிமருண்டு
மாலை படர்தரும் போழ்து. 1229

பொருள்மாலை யாளரை உள்ளி மருள்மாலை
மாயும்என் மாயா உயிர். 1230

இந்தத் துன்பத்தை நமக்கு விட்டுவிட்டுத் தொலைவாகச் சென்றுவிட்ட காதலரை நினைத்து அழுவதனாலே, என் கண்கள், தம் அழகிழந்து நறுமலர்களுக்கு நாணின. 1231

பசலை நிறத்தைப் பெற்று நீரைச் சொரியும் கண்கள், நம்மை முன்பு விரும்பிய நம் காதலர், இப்போது அன்பு செய்யாததைப் பிறருக்கும் சொல்வனபோல் உள்ளனவே! 1232

காதலரோடு கூடியிருந்த நாட்களிலே பூரித்திருந்த தோள்கள் மெலிவடைந்து, அவருடைய பிரிவைப் பிறருக்கு நன்றாகத் தெரிவிப்பவைபோல் உள்ளனவே! 1233

தமக்குத் துணையான காதலரைப் பிரிந்ததால், தம் பழைய அழகுகெட்டு வாடிய தோள்கள், தம் பசிய தொடிகளையும் கழலச் செய்கின்றனவே! 1234

தொடிகளும் கழன்றுவீழ, தம் பழைய அழகும் கெட்டுப்போன தோள்கள், நம் துன்பத்தை அறியாத கொடியவரின் கொடுமையை ஊரறியச் சொல்கின்றனவே! 1235

தொடிகள் கழன்று வீழ்ந்து, தோள்களும் மெலிந்ததனால், காண்பவர் மனம் நொந்தவராக, அவரைக் 'கொடியவர்' என்று கூறக்கேட்டு, யானும் வருந்துவேனே! 1236

நெஞ்சமே! கொடியவராகிவிட்ட காதலருக்கு என் வாடிய தோள்களின் ஆரவாரத்தை எடுத்துச்சொல்லி உதவியைச் செய்ததனால், நீயும் பெருமை அடையாயோ! 1237

தழுவியிருந்த கைகளைத் தளர்த்திய அப்பொழுதிலேயே, பசிய தொடியணிந்த இப் பேதைமை உடையவளின் நெற்றியும் பசலை நிறத்தை அடைந்துவிட்டதே! 1238

முயக்கத்திற்கு இடையே குளிர்ந்த காற்று நுழைய, காதலியின் பெரிதான மழைபோன்ற கண்களும் அழகிழந்து, பசலைநிறம் அடைந்து விட்டனவே! 1239

காதலியின் ஒளியுள்ள நெற்றி பசலைநிறம் அடைந்ததைக் கண்டு, அவளுடைய கண்களின் பசலைநிறமும் மேலும் பெருந்துன்பம் அடைந்துவிட்டது! 1240

சிறுமை நமக்கொழியச் சேட்சென்றார் உள்ளி
நறுமலர் நாணின கண். 1231

நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும்
பசந்து பனிவாரும் கண். 1232

தணந்தமை சால அறிவிப்ப போலும்
மணந்தநாள் வீங்கிய தோள். 1233

பணைநீங்கிப் பைந்தொடி சோரும் துணைநீங்கித்
தொல்கவின் வாடிய தோள். 1234

கொடியார் கொடுமை உரைக்கும் தொடியொடு
தொல்கவின் வாடிய தோள். 1235

தொடியோடு தோள்நெகிழ நோவல் அவரைக்
கொடியர் எனக்கூறல் நொந்து. 1236

பாடு பெறுதியோ நெஞ்சே கொடியார்க்கென்
வாடுதோள் பூசல் உரைத்து. 1237

முயங்கிய கைகளை ஊக்கப் பசந்தது
பைந்தொடிப் பேதை நுதல். 1238

முயக்கிடைத் தண்வளி போழப் பசப்புற்ற
பேதை பெருமழைக் கண். 1239

கண்ணின் பசப்போ பருவரல் எய்தின்றே
ஒண்ணுதல் செய்தது கண்டு. 1240

*நெஞ்சமே! இந்தத் துன்பம் தரும் நோயினைத் தீர்க்கும் மருந்து ஏதாயினும் ஒன்றை நினைத்துப் பார்த்து, எனக்கு நீயாயினும் சொல்ல மாட்டாயோ? 1241*

*நெஞ்சமே! அவர்தாம் நம்மிடம் காதல் இல்லாதவராக இருக்கவும், நீ மட்டும் அவரையே எப்போதும் நினைந்து நினைந்து வருந்துவது பேதைமை ஆகும். 1242*

*நெஞ்சமே! என்னுடன் இருந்தும் அவரையே நினைந்து வருந்துவது ஏன்? இத் துன்பநோயைச் செய்தவரிடம் நம்மேல் அன்புற்று நினைக்கும் தன்மை இல்லையே! 1243*

*நெஞ்சமே! நீ அவரிடம் போகும்போது, இக்கண்களையும் அழைத்துப் போவாயாக; அவரைக் காணவேண்டும் என்று இவை என்னைப் பிடுங்கித் தின்கின்றன. 1244*

*நெஞ்சமே! நாம் விரும்பி நாடினாலும், நம்மை நாடாத அவர், நம்மை வெறுத்து விட்டார் என்று நினைத்து, அவரைக் கைவிட நம்மால் முடியுமோ? 1245*

*என் நெஞ்சமே! ஊடியபோது ஊடலுணர்த்திக் கூடுகின்றவரான காதலரைக் கண்டால், நீ பிணங்கி உணரமாட்டாய்; பொய்யான சினம் கொண்டுதான் காய்கின்றாய்! 1246*

*நல்ல நெஞ்சமே! ஒன்று காமத்தை விட்டுவிடு; அல்லது நாணத்தை விட்டுவிடு; இந்த இரண்டையும் சேர்த்துப் பொறுத்துக் கொண்டிருக்க என்னால் முடியாது. 1247*

*என் நெஞ்சமே! நம் துன்பத்தை நினைந்து இரங்கிவந்து அவர் அன்பு செய்யவில்லை என்று ஏங்கிப் பிரிந்த காதலரின் பின்னாகச் செல்கின்றாயே, நீ பேதைமை உடையை! 1248*

*என் நெஞ்சமே! காதலர் நம் உள்ளத்துள்ளேயே இருப்பவராகவும், நீதான் அவரை நினைத்து யாரிடத்திலே போய்த் தேடிச் செல்கின்றாயோ? 1249*

*நம்மோடு சேர்ந்திருக்காமல் நம்மைப் பிரிந்து சென்றவரை நம் நெஞ்சிலேயே உடையவராய் நாம் இருக்கும்போது, இன்னும், நாம் அழகிழந்து வருகின்றோமே! 1250*

நினைத்தொன்று சொல்லாயோ நெஞ்சே எனைத்
எவ்வநோய் தீர்க்கும் மருந்து. [தொன்றும் 1241

காதல் அவரில ராகநீ நோவது
பேதைமை வாழிஎன் நெஞ்சு. 1242

இருந்துள்ளி என்பரிதல் நெஞ்சே பரிந்துள்ளல்
பைதல்நோய் செய்தார்கண் இல். 1243

கண்ணும் கொளச்சேறி நெஞ்சே இவையென்னைத்
தின்னும் அவர்க்காண லுற்று. 1244

செற்றா ரெனக்கை விட லுண்டோ நெஞ்சேயாம்
உற்றால் உறாஅ தவர். 1245

கலந்துணர்த்துங் காதலர்க் கண்டாற் புலந்துணராய்
பொய்க்காய்வு காய்தியென் நெஞ்சு. 1246

காமம் விடுவொன்றோ நாண்விடு நன்னெஞ்சே
யானோ பொறேனிவ் விரண்டு. 1247

பரிந்தவர் நல்காரென் றேங்கிப் பிரிந்தவர்
பின்செல்வாய் பேதையென் நெஞ்சு. 1248

உள்ளத்தார் காத லவராக உள்ளிநீ
யாருழைச் சேறியென் நெஞ்சு. 1249

துன்னாத் துறந்தாரை நெஞ்சத்து உடையேமா
இன்னும் இழத்தும் கவின். 1250

'நாணம்' என்னும் தாழ்பொருந்திய 'நிறை' என்னும் கதவினைக் காமம் ஆகிய கோடரியானது உடைத்துத் தகர்த்து விடுகின்றது. 1251

காமம் என்று சொல்லப்படும் ஒன்று கொஞ்சமேனும் கண்ணோட்டமே இல்லாதது; அஃது என் நெஞ்சத்தை இரவிலும் ஏவல் செய்து ஆள்கின்றது. 1252

யான் காமநோயை என்னுள்ளேயே மறைக்க முயல்வேன்; ஆனால் அதுவோ, என் குறிப்பின்படி மறையாமல், தும்மல் போலத் தானே புறத்து வெளிப்பட்டு விடும். 1253

இதுவரையில் நிறையோடு இருப்பதாகவே நினைத்திருந்தேன்; ஆனால், என் காமம், என்னுள் மறைந்திருந்த எல்லையைக் கடந்து மன்றத்தில் வெளிப்படுகின்றதே! 1254

தம்மை வெறுத்தவர் பின்னே அவர் அன்பை வேண்டிச் செல்லாத பெருந்தகைமை, காமநோய் உற்றவர் அறியும் ஒரு தன்மையே அன்று. 1255

வெறுத்துக் கைவிட்ட காதலரின்பின் செல்லுதலை விரும்பிய நிலையிலே இருப்பதனால், என்னை அடைந்த இக் காமநோயானது எத்தன்மை உடையதோ! 1256

நாம் விரும்பிய காதலரும், காமத்தால் நமக்கு வேண்டியவற்றைச் செய்தாரானால், நாமும் 'நாணம்' என்று குறிக்கப்படும் ஒன்றையும் அறியாதேயே இருப்போம். 1257

பல மாயங்களையும் அறிந்த கள்வனாகிய காதலனின் பணிவான சொற்கள் அல்லவோ, அன்று, தம் பெண்மை என்னும் அரணை உடைக்கும் படையாய் இருந்தன. 1258

ஊடுவேன் என்று நினைத்துச் சென்றேன்; ஆனால், என் நெஞ்சம் என்னை மறந்து அவரோடு சென்று கலந்துவிடுவதைக் கண்டு, அவரைத் தழுவினேன். 1259

தீயிலே கொழுப்பை இட்டாற்போல உருகும் நெஞ்சை உடையவரான மகளிருக்கு, 'இசைந்து ஊடி நிற்போம்' என்று, ஊடும் தன்மைதான் உண்டாகுமோ! 1260

காமக் கணிச்சி உடைக்கும் நிறையென்னும்
நாணுத்தாழ் வீழ்த்த கதவு. 1251

காமம் எனஒன்றோ கண்ணின்றென் நெஞ்சத்தை
யாமத்தும் ஆளும் தொழில். 1252

மறைப்பேன்மன் காமத்தை யானோ குறிப்பின்றித்
தும்மல்போல் தோன்றி விடும். 1253

நிறையுடையேன் என்பேன்மன் யானோ என்காமம்
மறையிறந்து மன்று படும். 1254

செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை காமநோய்
உற்றார் அறிவதொன்று அன்று. 1255

செற்றவர் பின்சேறல் வேண்டி அளித்தரோ
எற்றென்னை உற்ற துயர். 1256

நாணென ஒன்றோ அறியலம் காமத்தாற்
பேணியார் பெட்பச் செயின். 1257

பன்மாயக் கள்வன் பணிமொழி யன்றோநம்
பெண்மை யுடைக்கும் படை. 1258

புலம்பல் எனச்சென்றேன் புல்லினேன் நெஞ்சம்
கலத்தல் உறுவது கண்டு. 1259

நிணந்தீயில் இட்டன்ன நெஞ்சினார்க்கு உண்டோ
புணர்ந்தூடி நிற்பேம் எனல். 1260

அவர் வருவாரென வழியையே பார்த்துக் கண்களின் ஒளியும் கெட்டன; அவர் பிரிந்த நாட்களைக் குறித்துத் தொட்டுத் தொட்டு விரல்களும் தேய்ந்து போயின. 1261

தோழி! அவரைப் பிரிந்து வருந்திருக்கும் இன்றைக்கும், அவரை மறந்தால், என் தோள்கள் அழகுகெட்டு மெலியும்; என் தோள் அணிகளும் கழலும்படி நேர்ந்துவிடும். 1262

வெற்றியை விரும்பி, ஊக்கமே துணையாக, வேற்று நாட்டிற்குச் சென்றுள்ள காதலர் திரும்பி வருதலைக் காண்பதற்கு விரும்பியே, இன்னும் உயிரோடுள்ளேன். 1263

முன்னர்க் கூடியிருந்த காம இன்பத்தையும் மறந்து, பிரிந்து போனவரின் வரவை நினைத்து, என் நெஞ்சம் மரக்கிளை தோறும் ஏறி ஏறிப் பார்க்கின்றதே! 1264

என் காதலனைக் கண்ணாரக் காண்பேனாக; அவ்வாறு கண்டபின் என் மெல்லிய தோள்களில் உண்டாகியுள்ள பசலைநோயும் தானாகவே நீங்கிப் போய்விடும். 1265

என் காதலன் ஒரு நாள்மட்டும் என்னிடம் வருவானாக; வந்தால், என் துன்ப நோய் எல்லாம் தீரும்படியாக, அவனோடு, இன்பத்தை நானும் பருகுவேன். 1266

என் கண்போன்ற காதலர் வருவாரானால், யான் அவரோடு ஊடுவேனோ? அல்லது தழுவிக்கொள்வேனோ? அல்லது ஆவலோடு கலந்து இன்புறுவேனோ? என்ன செய்வேன்? 1267

வேந்தன் இவ் வினையிலே தானும் கலந்து வெற்றி அடை வானாக; யானும், என் மனைக்கண் சென்றுசேர்ந்து, மாலைப் பொழுதில், அவளோடு விருந்தை அநுபவிப்பேன். 1268

தொலைவிடத்துக்குப் பிரிந்துசென்ற காதலர் வரும் நாளை மனத்தில் வைத்து ஏங்கும் மகளிருக்கு, ஒருநாள் தானும் ஏழுநாள்போல் நெடியதாகக் கழியும். 1269

பிரிவுத் துயரம் தாங்காமல் உள்ளம் உடைந்து அழிந்து போய்விட்டால், அவரைப் பெறுவதனால் என்ன? பெற்றால் தான் என்ன? அவரோடு பொருந்தினால்தான் என்ன? 1270

*வாளற்றுப் புற்கென்ற கண்ணும் அவர்சென்ற*
*நாளொற்றித் தேய்ந்த விரல்.* *1261*

*இலங்கிழாய் இன்று மறப்பினென் தோள்மேல்*
*கலங்கழியும் காரிகை நீத்து.* *1262*

*உரன்நசைஇ உள்ளம் துணையாகச் சென்றார்*
*வரல்நசைஇ இன்னும் உளேன்.* *1263*

*கூடிய காமம் பிரிந்தார் வரவுள்ளிக்*
*கோடுகோ டேறும்என் நெஞ்சு.* *1264*

*காண்கமற் கொண்கனைக் கண்ணாரக் கண்டபின்*
*நீங்குமென் மென்றோள் பசப்பு.* *1265*

*வருகமற் கொண்கன் ஒருநாள் பருகுவன்*
*பைதல்நோய் எல்லாம் கெட.* *1266*

*புலப்பேன்கொல் புல்லுவேன் கொல்லோ கலப்பேன்*
*கண்ணன்ன கேளிர் வரின்.* [கொல் *1267*

*வினைகலந்து வென்றீக வேந்தன் மனைகலந்து*
*மாலை அயர்கம் விருந்து.* *1268*

*ஒருநாள் எழுநாள்போல் செல்லும் சேட்சென்றார்*
*வருநாள்வைத்து ஏங்கு பவர்க்கு.* *1269*

*பெறினென்னாம் பெற்றக்கால் என்னாம் உறினென்னாம்*
*உள்ளம் உடைந்துக்கக் கால்.* *1270*

நீதான் மறைந்தாலும், நின் மறைப்பையும் கடந்து, நின் கண்கள் எனக்குச் சொல்ல முற்படுகின்ற ஒரு செய்தியும் நின்னிடத்தில் உள்ளதாகும். 1271

கண் நிறைந்த பேரழகும், மூங்கில்போலும் அழகிய தோள்களும் கொண்ட என் காதலிக்கு, பெண்மை நிறைந்த தன்மையோ பெரிதாக உள்ளது. 1272

நூலில் கோத்த மணியினுள்ளே காணப்படும் நூலைப்போல, என் காதலியின் அழகினுள்ளேயும் அமைந்து, புறத்தே விளங்குகின்ற குறிப்பும் ஒன்று இருக்கின்றது. 1273

அரும்பினுள்ளே அடங்கியிருக்கின்ற மணத்தைப்போல, என் காதலியின் புன்முறுவலின் உள்ளே அடங்கியிருக்கும் உள்ளத்தின் குறிப்பும் ஒன்று உள்ளது. 1274

செறிந்த தொடியுடையவளான என் காதலி செய்துவிட்டுப் போன கள்ளமான குறிப்பானது, என் மிக்க துயரத்தைத் தீர்க்கும் ஒரு மருந்தையும் உடையதாய் இருந்தது. 1275

பெரிதாக அன்பைச் செய்து, விருப்பம் மிகுதியாகுமாறு கலத்தல், அரிதான பிரிவைச் செய்து, அன்பில்லாமல் விட்டுப் பிரியும் உட் கருத்தையும் உடையதாகும். 1276

குளிர்ந்த நீர்த் துறைக்கு உரியவனாகிய நம் காதலன் நம்மைப் பிரிந்ததனை, நம்மைக் காட்டிலும், நம் கைவளையல்கள் முன்னதாகவே உணர்ந்து, தாமும் கழன்றனவே! 1277

நேற்றுத்தான் எம் காதலர் எம்மைப் பிரிந்து சென்றனர்; யாமும், அவரைப் பிரிந்து ஏழுநாட்கள் ஆகியவரைப்போல மேனி பசலை படர்ந்தவராய் இருக்கின்றோமே! 1278

தன் தோள்வளைகளை நோக்கி, மென்மையான தோள்களையும் நோக்கி, தன் அடிகளையும் நோக்கி, அவள் செய்த குறிப்பு உடன்போக்கு என்பதே ஆகும். 1279

கண்ணினாலே காம நோயைத் தெரிவித்துப் பிரியாமல் இருக்கும்படி இரத்தல், பெண்தன்மைக்கு, மேலும் சிறந்த பெண்தன்மை உடையது என்று சொல்லுவர். 1280

கரப்பினுங் கையிகந் தொல்லாநின் உண்கண்
உரைக்கல் உறுவதொன் று உண்டு. 1271

கண்ணிறைந்த காரிகைக் காம்பேர்தோள் பேதைக்குப்
பெண்ணிறைந்த நீர்மை பெரிது. 1272

மணியில் திகழ்தரும் நூல்போல் மடந்தை
அணியில் திகழ்வதொன் றுண்டு. 1273

முகைமொக்குள் உள்ளது நாற்றம்போல் பேதை
நகைமொக்குள் உள்ளதொன் று உண்டு. 1274

செறிதொடி செய்திறந்த கள்ளம் உறுதுயர்
தீர்க்கும் மருந்தொன் று உடைத்து. 1275

பெரிதாற்றிப் பெட்பக் கலத்தல் அரிதாற்றி
அன்பின்மை சூழ்வது உடைத்து. 1276

தண்ணந் துறைவன் தணந்தமை நம்மினும்
முன்னம் உணர்ந்த வளை. 1277

நெருநற்றுச் சென்றார்எம் காதலர் யாமும்
எழுநாளேம் மேனி பசந்து. 1278

தொடிநோக்கி மென்றோளும் நோக்கி அடிநோக்கி
அஃதாண்டு அவள்செய் தது. 1279

பெண்ணினால் பெண்மை உடைத்தென்ப கண்ணினால்
காமநோய் சொல்லி இரவு. 1280

நினைத்தபொழுதிலே களிப்படைவதும், கண்டபொழுதிலே மகிழ்ச்சி அடைவதும் ஆகிய இரண்டு நிலையும், கள்ளுக்குக் கிடையாது; காமத்திற்கு உண்டு. 1281

பனையளவு பெரிதாகக் காமம் நிறைந்து வரும்பொழுது, காதலரோடு தினையளவுக்குச் சிறிதாகவேனும் ஊடிப் பிணங்காமல் இருத்தல் வேண்டும். 1282

என்னைப் பேணி அன்புசெய்யாமல் புறக்கணித்து, தான் விரும்பியபடியே அவன் செய்தாலும், என் காதலனைக் காணாமல் என் கண்கள் அமைதி அடையவில்லையே! 1283

தோழி! நான் அவரோடு ஊடுதலையே நினைத்துச் சென்றேன்; ஆனால், என் நெஞ்சமோ, அதை மறந்துவிட்டு, அவரோடு இணைந்து கூடுவதிலேயே சென்றதே! 1284

மை எழுதும்போது, எழுதும் கோலைக் காணாத கண்ணின் தன்மையைப்போல, என் காதலனைக் கண்டபோது, அவன் குற்றங்களையும் யான் காணாமற் போகின்றேனே! 1285

என் காதலனைக் காணும்போது, அவர் போக்கிலே தவறானவற்றையே காணமாட்டேன்; அவரைக் காணாதபோதோ, தவறல்லாத நல்ல செயல்களையே யான் காணேன். 1286

ஓடும் வெள்ளம் இழுத்துப் போகும் என்பதை அறிந்தும் அதனுள் பாய்கின்றவரைப்போல, ஊடுதல் பயனில்லை என்பதை அறிந்தும், நாம் ஊடுவதால் பயன் என்ன? 1287

கள்வனே! இழிவு வரத்தகுந்த துன்பங்களையே செய்தாலும், கள்ளுண்டு களித்தவருக்கு மென்மேலும் ஆசையூட்டும் கள்ளைப்போல், நின் மார்பும் ஆசையூட்டுகிறதே! 1288

அனிச்சமலரைக் காட்டிலும் காமம் மிக மென்மையானது; அதன் தன்மை அறிந்து, அதன் சிறந்த பயனையும் பெறக் கூடியவர்கள், உலகத்தில் சிலரே யாவர். 1289

கண் நோக்கத் தளவிலே பிணங்கினாள்; பின், என்னைக் காட்டிலும் தான் தழுவுவதிலே விருப்பம் கொண்டவளாகத் தன் பிணக்கத்தையும் மறந்து, அவள் கலங்கினாள். 1290

உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும்
கள்ளுக்கில் காமத்திற்கு உண்டு. 1281

தினைத்துணையும் ஊடாமை வேண்டும் பனைத்துணையும்
காமம் நிறைய வரின். 1282

பேணாது பெட்பவே செய்யினும் கொண்கனைக்
காணாது அமையல கண். 1283

ஊடற்கண் சென்றேன்மன் தோழி அதுமறந்து
கூடற்கண் சென்றதென் நெஞ்சு. 1284

எழுதுங்கால் கோல்காணாக் கண்ணேபோல் கொண்கன்
பழிகாணேன் கண்ட விடத்து. 1285

காணுங்கால் காணேன் தவறாய காணாக்கால்
காணேன் தவறல் லவை. 1286

உய்த்தல் அறிந்து புனல்பாய் பவரேபோல்
பொய்த்தல் அறிந்தென் புலர்ந்து. 1287

இளித்தக்க இன்னா செயினும் களித்தார்க்குக்
கள்ளற்றே கள்வநின் மார்பு. 1288

மலரினும் மெல்லிது காமம் சிலர்அதன்
செவ்வி தலைப்படு வார். 1289

கண்ணின் துனித்தே கலங்கினாள் புல்லுதல்
என்னினும் தான்விதுப் புற்று. 1290

*நெஞ்சமே! அவர் நெஞ்சமானது நம்மை மறந்து அவர் விருப்பத்தையே மேற்கொள்வதைக் கண்டபின்னரும், நீதான் எமக்குத் துணையாகாததுதான் எதனாலோ? 1291*

*என் நெஞ்சமே! நம்மேல் அன்புகொள்ளாத காதலரைக் கண்டபோதும், அவர் வெறுக்கமாட்டார் என்று நினைந்து அவரிடமே செல்கின்றாயே! அதுதான் எதனாலோ? 1292*

*நெஞ்சமே! நீ நின் விருப்பத்தின்படியே அவர் பின்னாகச் செல்லுதல், துன்பத்தாலே கெட்டுப்போனவருக்கு நண்பராக யாருமே இல்லை என்பதனாலோ? 1293*

*நெஞ்சமே! நீதான் ஊடுதலைச் செய்து அதன் பயனையும் நுகரமாட்டாய்; இனிமேல் அத்தகைய செய்திகளைப்பற்றி நின்னோடு ஆராய்பவர்தாம் எவரோ? 1294*

*அவரைப் பெறாத போதும் அஞ்சும்; பெற்ற போதும் பிரிவாரோ என்று அஞ்சும்; இவ்வாறு என் நெஞ்சம் நீங்காத துயரையே உடையதாகின்றது. 1295*

*அவரைப் பிரிந்த நாளில், தனியே இருந்து நினைத்தபோது, என் நெஞ்சம் எனக்குத் துணையாகாமல், என்னைத் தின்பதுபோலத் துன்பம் தருவதாக இருந்தது! 1296*

*காதலரை மறக்கவியலாத, என்னுடைய சிறப்பில்லாத மடநெஞ்சத்தோடு சேர்ந்து, மறக்கக் கூடாததாகிய நாணத்தையும் நான் மறந்தேனே! 1297*

*'பிரிந்த கொடுமையாளரை இகழ்ந்தால் இழிவாகும்' என்று நினைத்து, அவர்மேல் உயிர்போலக் காதல்கொண்ட என் நெஞ்சம், அவரது உயர்பண்புகளையே நினைக்கிறதே! 1298*

*தாம் உரியதாக அடைந்திருக்கும் தம் நெஞ்சமே தமக்குத் துணையாகாத பொழுது, ஒருவருக்குத் துன்பம் வந்த காலத்தில், வேறு எவர்தாம் துணையாவார்கள். 1299*

*தாம் சொந்தமாக உடைய நெஞ்சமே தமக்கு உறவாகாதபோது, அயலார் உறவில்லாதவராக அன்பற்று இருப்பது என்பதும் இயல்பானதே ஆகும். 1300*

அவர்நெஞ்சு அவர்க்காதல் கண்டும் எவன்நெஞ்சே
நீயெமக்கு ஆகா தது. 1291

உறாஅ தவர்க்கண்ட கண்ணும் அவரைச்
செறாஅர்எனச் சேறிஎன் நெஞ்சு. 1292

கெட்டார்க்கு நட்டாரில் என்பதோ நெஞ்சேநீ
பெட்டாங்கு அவர்பின் செலல். 1293

இனிஅன்ன நின்னொடு சூழ்வார்யார் நெஞ்சே
துனிசெய்து துவ்வாய்காண் மற்று. 1294

பெறாஅமை அஞ்சும் பெறிற்பிரிவு அஞ்சும்
அறாஅ இடும்பைத்தென் நெஞ்சு. 1295

தனியே இருந்து நினைத்தக்கால் என்னைத்
தினிய இருந்ததென் நெஞ்சு. 1296

நாணும் மறந்தேன் அவர்மறக் கல்லாஎன்
மாணா மடநெஞ்சிற் பட்டு. 1297

எள்ளின் இளிவாம் என்றெண்ணி அவர்திறம்
உள்ளும் உயிர்க்காதல் நெஞ்சு. 1298

துன்பத்திற்கு யாரே துணையாவார் தாமுடைய
நெஞ்சம் துணையல் வழி. 1299

தஞ்சம் தமரல்லர் ஏதிலார் தாமுடைய
நெஞ்சம் தமரல் வழி. 1300

நாம் ஊடும்போது அவர் அடைகின்ற அல்லல் நோயையும் சிறிது நேரம் காணலாம்; அதற்காக, அவர் வந்ததும், அவர்பாற் சென்று தழுவாமல் பிணங்கியிருப்பாயாக. 1301

உணவுப் பண்டங்களில், அளவாக உப்புச் சேர்ந்திருப்பது போன்றதே ஊடல்; அதை அளவுகடந்து சிறிது நீள விட்டாலும் உப்பின் மிகுதிபோல அது கெட்டுவிடும். 1302

தம்மோடு ஊடியவரைத் தெளிவித்துத் தழுவாமல் விட்டுவிடுதல், துன்புற்று வருந்துவாரை மேலும் துன்பஞ் செய்து வருந்தச் செய்வதுபோன்ற கொடுமையாகும்! 1303

ஊடிப் பிணங்கியவரைத் தெளிவித்து அன்பு செய்யாமல் கைவிடுதல், முன்பே நீரில்லாது வாடிப்போன வள்ளிக் கொடியின் வேரை அறுப்பதுபோன்றது ஆகும்! 1304

நல்ல தகைமைகள் பொருந்தியுள்ள நல்ல ஆடவருக்கு அழகாவது, மலரன்ன கண்களையுடைய அவர் காதலியர் இடத்தே உண்டாகும் ஊடலின் சிறப்பே ஆகும். 1305

பெரிய பிணக்கமும் சிறிதான பிணக்கமும் இல்லாமற்போனால், காமமானது, மிகக்கனிந்த கனியும், பழுக்காத கருக்காயும்போலப் பயனற்றது ஆகும். 1306

ஊடியிருத்தலிலும் காதலர்க்கு உண்டாவதோர் துன்பம் உளது; அது, 'கூடியிருப்பதுதான் இனிமேல் நீட்டிக்காதோ' என்று நினைத்து வருந்தும் அச்சமாகும். 1307

'நம்மாலே இவரும் நோயுற்றார்' என்று உணர்ந்து, அதைத் தீர்க்க முயலும் காதலர் இல்லாதபோது, வீணாக வருத்தம் அடைவதனால் என்ன பயன்? 1308

நீரும் நிழலிடத்தே உள்ளதானால் இனியதாகும்; அதுபோன்றே, ஊடலும் அன்புசெலுத்துவோரிடத்தே நிகழுமானால், இனிமையைத் தருவதாகும். 1309

ஊடல் கொண்டபோது தெளிவித்து இன்பம் செய்யாமல் வாடவிடுகின்றவரோடு, எம் நெஞ்சம் 'கூடுவோம்' என்று நினைப்பது, அதுகொண்டுள்ள ஆசையினாலே ஆகும். 1310

புல்லா திராஅப் புலத்தை அவருறும்
அல்லல்நோய் காண்கஞ் சிறிது. 1301

உப்பமைந் தற்றாற் புலவி அதுசிறிது
மிக்கற்றால் நீள விடல். 1302

அலந்தாரை அல்லல்நோய் செய்தற்றால் தம்மைப்
புலந்தாரைப் புல்லா விடல். 1303

ஊடி யவரை உணராமை வாடிய
வள்ளி முதலரிந் தற்று. 1304

நலத்தகை நல்லவர்க் கேஎர் புலத்தகை
பூவன்ன கண்ணா ரகத்து. 1305

துனியும் புலவியும் இல்லாயின் காமம்
கனியும் கருக்காயும் அற்று. 1306

ஊடலின் உண்டாங்கோர் துன்பம் புணர்வது
நீடுவ தன்றுகொல் என்று. 1307

நோதல் எவன்மற்று நொந்தாரென்று அஃதறியும்
காதலர் இல்லா வழி. 1308

நீரும் நிழலது இனிதே புலவியும்
வீழுநர் கண்ணே இனிது. 1309

ஊடல் உணங்க விடுவாரோடு என்நெஞ்சம்
கூடுவேம் என்பது அவா. 1310

பரத்தனே! பெண்தன்மை உடையவர் எல்லாரும், பொதுப் பொருளாகக் கொண்டு நின்னைக் கண்ணால் உண்பார்கள் ஆதலால், நின் மார்பை யான் தழுவ மாட்டேன்! 1311

காதலரோடு யாம் ஊடியிருந்தேமாக, அவரும் அவ்வேளையில், யாம் தம்மை, 'நீடுவாழ்க' என்று வாழ்த்துரை சொல்லுவோம் என்று நினைத்துத் தும்மினார்! 1312

மரக்கிளையிலிருந்து கொணர்ந்த பூவைச் சூட்டினாலும், என் காதலி, 'நீர் இந்த அழகை எவளோ ஒருத்திக்குக் காட்டுவதற்கே எனக்குச் சூட்டினீர்' என்று காய்வாள். 1313

'யாரினும் நின்னையே விரும்புகின்றேம்' என்று சொன்னேன் ஆக, அவள், 'யாரினும்? யாரினும்' என்று கேட்ட வளாக என்னோடும் ஊடிப் பிணங்கினாள். 1314

'இந்தப் பிறப்பிலே நாம் பிரியமாட்டோம்' என்று சொன்னேனாக, இனி வரும் பிறப்பிலே பிரிவேம் என்று நான் கூறியதாகக் கருதிக் கண்களில் நீரைக் கொண்டனள். 1315

'நின்னை நினைத்தேன்' என்றேன்; 'நினைத்தது உண்டாயின் மறந்திருந்ததும் உண்டல்லவோ! என்னை ஏன் மறந்தீர்?' என்று சொல்லி, அவள் தழுவாமல் பிணங்கினாள் 1316

யான் தும்மினேனாக 'நூறாண்டு' என்று கூறி வாழ்த்தினாள்; அடுத்து, அதைவிட்டு, 'எவர் நினைத்ததனாலே நீர் தும்மினீர்' என்று கேட்டுக் கேட்டு அழுதாள். 1317

அவள் பிணங்குவாள் என்று பயந்து நான் எழுந்த தும்மலையும் அடக்கினேனாக, 'உம்மவர் நினைப்பதை எமக்குத் தெரியாதபடி மறைத்தீரோ?' என்று அவள் அழுதாள். 1318

அவள் ஊடிப் பிணங்கியபோது அதைத் தெளிவித்து இன்புறுத்தினாலும், 'நீர் பிறமகளிர்க்கும் இத்தன்மையரே ஆவீர்' என்று, என்மேற் சினம் கொள்வாள் 1319

அவள் அழகையே நினைத்து வியந்து பார்த்தாலும், 'நீர் எவரையோ மனத்திற்கொண்டு எல்லாம் ஒப்பிட்டுப் பார்த்தீரோ?' என்று கேட்டுச் சினம் கொள்வாள் 1320

பெண்ணியலார் எல்லாரும் கண்ணின் பொதுவுண்பர்
நண்ணேன் பரத்தநின் மார்பு. 1311

ஊடி யிருந்தேமாத் தும்மினார் யாந்தம்மை
நீடுவாழ் கென்பாக்கு அறிந்து. 1312

கோட்டுப்பூச் சூடினும் காயும் ஒருத்தியைக்
காட்டிய சூடினீர் என்று. 1313

யாரினும் காதலம் என்றேனா ஊடினாள்
யாரினும் யாரினும் என்று. 1314

இம்மைப் பிறப்பிற் பிரியலம் என்றேனாக்
கண்ணிறை நீர்கொண் டனள். 1315

உள்ளினேன் என்றேன்மற்று என்மறந்தீர் என்றென்னைப்
புல்லாள் புலத்தக் கனள். 1316

வழுத்தினாள் தும்மினே னாக அழித்தழுதாள்
யாருள்ளித் தும்மினீர் என்று. 1317

தும்முச் செறுப்ப அழுதாள் நுமருள்ளல்
எம்மை மறைத்திரோ என்று. 1318

தன்னை யுணர்த்தினும் காயும் பிறர்க்குநீர்
இந்நீரர் ஆகுதிர் என்று. 1319

நினைத்திருந்து நோக்கினும் காயும் அனைத்துநீர்
யாருள்ளி நோக்கினீர் என்று. 1320

அவரிடம் தவறு எதுவும் இல்லையானாலும், அவரோடு பிணங்குதல், அவர் நம்மீது மிகுதியாக அன்புசெலுத்தும்படி செய்வதற்கு வல்லது ஆகும். 1321

அவரோடு ஊடுதலாலே உண்டாகின்ற சிறு துன்பம், அந்தப் பொழுதிலே அவர் செய்யும் நல்ல அன்பை வாடுவதற்குச் செய்தாலும், பின்னர்ப் பெருமை பெறும். 1322

நிலத்தோடு நீர் பொருந்தினாற்போல நம்மோடு கலந்த அன்பு உடையவரான காதலருடன் ஊடுவதைக் காட்டிலும், தேவருலகத்து இன்பமும் சிறந்ததாகுமோ! 1323

காதலரைத் தழுவி, விடாதேயிருக்கும் ஊடலினுள்ளே, என் உள்ளத்தின் வன்மையை உடைப்பதற்கு வலிமையான படையும் தோன்றுகின்றது. 1324

தவறு இல்லாதவரானபோதும், தம்மால் காதலிக்கப்பட்ட மகளிரின் மென்மையான தோள்களை உடலால் நீங்கியிருக்கும் போது, ஊடலிலும் ஓர் இன்பம் உள்ளது. 1325

உண்பதைக் காட்டிலும் முன்னுண்டது செரித்தலே இன்பமாகும்; அதுபோலவே, காமத்தில் கூடிப்பெறும் இன்பத்தைவிட ஊடிப்பெறும் இன்பமே சிறந்தது! 1326

ஊடல் களத்திலே தோற்றவரே வெற்றி பெற்றவர்; அந்த உண்மையானது, ஊடல் தெளிந்தபின், அவர் கூடிமகிழும் தன்மையிலே தெளிவாகக் காணப்படும். 1327

நெற்றி வெயர்வு அரும்பும்படி காதலருடன் கூடும்போது உண்டாகும் இன்பத்தை, ஊடியிருந்து, அவர் உணர்த்த மீளவும் சேர்ந்து இன்புறும்போது பெறுவோமோ? 1328

ஒள்ளிய இழையை உடையாள் இன்னும் ஊடுவாளாக! அதனைத் தணிவிக்கும் வகையிலே, யாம், அவளை இரந்து நிற்கும்படியாக, இராக்காலமும் இன்னும் நீள்வதாக! 1329

ஊடுதல் காமவாழ்விற்கே இன்பம் தருவதாகும்; காதலர் உணர்த்த உணர்ந்து கூடித் தழுவுதலையும் பெற்றால், அஃது, அதனினும் மிகுந்த இன்பமாகும். 1330

*இல்லை தவறவர்க்கு ஆயினும் ஊடுதல்*
*வல்லது அவரளிக்கு மாறு.* 1321

*ஊடலில் தோன்றும் சிறுதுனி நல்லளி*
*வாடினும் பாடு பெறும்.* 1322

*புலத்தலின் புத்தேணாடு உண்டோ நிலத்தொடு*
*நீரியைந் தன்னார் அகத்து.* 1323

*புல்லி விடாஅப் புலவியுள் தோன்றுமென்*
*உள்ளம் உடைக்கும் படை.* 1324

*தவறிலர் ஆயினும் தாம்வீழ்வார் மென்றோள்*
*அகறலின் ஆங்கொன்று உடைத்து.* 1325

*உணலினும் உண்டது அறலினிது காமம்*
*புணர்தலின் ஊடல் இனிது.* 1326

*ஊடலில் தோற்றவர் வென்றார் அதுமன்னும்*
*கூடலிற் காணப் படும்.* 1327

*ஊடிப் பெறுகுவங் கொல்லோ நுதல்வெயர்ப்பக்*
*கூடலில் தோன்றிய உப்பு.* 1328

*ஊடுக மன்னோ ஒளியிழை யாம்இரப்ப*
*நீடுக மன்னா இரா.* 1329

*ஊடுதல் காமத்திற்கு இன்பம் அதற்கின்பம்*
*கூடி முயங்கப் பெறின்.* 1330

கடுகைத் துளைத்து
ஏழ்கடலைப் புகட்டிக்
குறுகத் தரித்த குறள்

-இடைக்காடர்

அணுவைத் துளைத்து
ஏழ்கடலைப் புகட்டிக்
குறுகத் தரித்த குறள்

-ஔவையார்

உள்ளுதொறும் உள்ளுதொறும்
உள்ளம் உருக்குமே
வள்ளுவர் வாய்மொழி மாண்பு

-மாங்குடி மருதனார்

